# முன்னுரை

சாசனங்களாவன, அரசனது ஆணை போன்ற நிலையான செய்திகளைக் குறிப்பது; அவை பெரும்பாலும் கல்லில் செதுக்கப்படுவதால் 'கல் வெட்டுகள்' என்றும் பெயர் பெறும். கோயில் சுவர்கள், கற்பாறைகள், மலைக்குகைகள், வெற்றித் தூண்கள், மண்டபங்கள், படிமங்கள், நடுகற்கள் முதலிய வற்றில் தமிழ்க் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. செப் பேடுகளெல்லாம் கல்வெட்டுகளின் படிகளே யாதலின், அவைகளும் கல்வெட்டுகள் என்றே பெயர் பெறத் தக்கன வாம். தமிழ்நாட்டில் பிராகிருதம், சமஸ்கிருதம், தமிழ் முதலிய பல மொழிகளில் எழுதப்பெற்ற கல்வெட்டுகளை அங்கங்கே காணலாம். அவைகளில் சில கல்வெட்டுகள் செய்யுள் வடிவத்திலும், சில கல்வெட்டுகள் உரைநடையி லும், வேறு சில கல்வெட்டுகள் அவை இரண்டும் கலந்தும் காணப்படுகின்றன.

இக் கல்வெட்டுகள் தமிழ்நாட்டில் பழங்கால முதலே தோன்றியுள்ளன என்பதற்குப் பல சான்றுகள் உள. சுமார் ஐயாயிரம் ஆண்டுகளுக்குமுன் தோன்றியதாகக் கருதப் படும் தொல்காப்பியம் என்னும் இயற்றமிழ் இலக்கண நூலில் போர்க்களத்தே வென்று பட்ட வீரர்களுக்குக் கல் லெடுத்தலும், அக்கல்லில் அவர்தம் வீரச் செயல்களைப் பொறித்து நடுதலும், அதற்குக் கோயிலெடுத்து வணங்கு தலுமாகிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. அத் தொல்காப் பியத்தின் வழியாகத் தோன்றிய புறப்பொருள் வெண்பாமாலை யிலும் இச்செய்திகள் பல வெண்பாக்களால் விரித்துக் கூறப்பட்டுள்ளன.

முற்காலத்தில் போர்வீரர்களின் வென்றிகளே யன்றி, அவர்தம் கொடைச் சிறப்பும் கல்லில் பொறிக்கப்பட்டன என்பதைப் புறநானூற்றுப் பாடலொன்று குறிப்பாகக் காட்டுகின்றது. அகநானூற்றுச் செய்யு ளொன்றிலும்,

'ஆடவர்,
பீடும் பெயரும் எழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்'

என வரும் அடிகளால், அக்காலத்து நடுகற்களில் போர்வீரர்

களது பெருமைக்குக் காரணமான கல்வி, தறுகண், புகழ் முதலியனவும் எழுதப்பட்டு வந்தன என்பது விளக்கமா கின்றது.

இவ்வாறு நடுகற்களாகத் தோன்றிய ஆதித் தமிழ்க் கல்வெட்டுகள் பல்லவர் காலத்தி லிருந்து தான் வளர்ச்சி யுற்றன. அவர்களும் முதலில் தாங்கள் பேசிவந்த பிரா கிருத மொழியில் சாசனங்களை எழுதிவந்தனர்; பின்னர் வட மொழியிலும், கி பி.ஆறும் நூற்றாண்டு முதல் தமிழ் மொழி யிலும் அவர்தம் கல்வெட்டுகள் தோன்றலாயின அக் கல்வெட்டுகள் மூன்று கூறுபாடுகளை யுடையன. முதலில் அக்காலத்து அரசனது பெருமை கூறப்பெற் றிருக்கும்; பின் னர் இன்னின்னார் இன்னின்ன அறத்தின்பொருட்டு இன் னின்ன பொருட்களைக் கொடுத்தனர் என்பன போன்ற செய்திகள் காணப்படும். முடிவில் அவ்வறத்தின் பாது காவல்பற்றிக் கூறும் காப்பு நிலை குறிக்கப்பெற் றிருக்கும். அவைகள் துவக்கத்திலும் முடிவிலும் ஏதாவது ஒரு வட மொழிச் சுலோகத்தைப் பெற்றிருப்பது முண்டு. பல்லவர் காலத்தில தோன்றிய மகாவலி வாணராயர் சாசனம், இறுதி யில் ஒரு வடமொழிச் சுலோகத்தைக் கொண்டிருப்பது இதற்குச் சான்று பகரும்

பல்லவர் காலத்திற்குப்பின் தஞ்சைச் சோழமன்னர் களும், பிற்காலப் பாண்டிய மன்னர்களும் சாசனங்கள் எழுதி வைக்கும் பழக்கத்தை யுடையவர்களா யிருந்தபடியால் பிற்காலத்தில் சாசனங்கள் பலவகையிலும் வளர்ச்சி யுற்றன. தமிழ்நாட்டின் இடைக்கால வரலாறு, அவர்கள் காலத்திய சாசனங்களின் வாயிலாகவே அறியக் கூடியதா யிருக்கிற தென்னின், சாசன வளர்ச்சி அவர்கள் காலத்தில் எவ்வாறி ருந்த தென்பது சொல்லாமலே விளங்கும். முதலாம் இராச ராசசோழன் காலத்தி லிருந்துதான் அரசனது போர்வென்றி கள், ஆட்சிச்சிறப்பு, கொடை முதலியவற்றைக் கூறும் மெய்க் கீர்த்திகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

'தொழிலார்ந்த மெய்க்கீர்த்தி சொற்சீ ரடியால்
எழிலரசர் செய்தி இசைப்பார்'

என்பது, சாசனங்களின் துவக்கத்தில் செய்யுள் வடிவில காணப்பெறும் மெய்க்கீர்த்திக் குரிய இலக்கணம். இவ் விலக்

கணம் வெண்பாப்பாட்டியல் என்னும் வச்சணந்திமாலையில் கூறபடுகிறது. மெய்க்கீர்த்தியின் இலக்கணத்தைக் கூறும் வேறு நூல்கள் பன்னிருபாட்டியல், இலக்கணவிளக்கப் பாட்டியல் முதலியனவாகும்.

இச் சாசனங்களாலும், சானங்களில் அமைந்த மெய்க்கீர்த்திகளாலும் உண்டான பயன்கள் பலவாகும். நாம் கேட்கும் பாரம்பரியக் கதைகள், படிக்கும் இலக்கியங்கள், காணும் கலை நுட்பங்கள் ஆகிய இவைகளின் மூலம் தோன்றும் வரலாற்றை வரிசைப்படக் கூறுவது சாசனங்களே. சாசனங்கள் நாட்டு வரலாற்றைக் கூறும் நோக்கத்தோடு எழுதப்பட வில்லையானாலும், அவைக ளின்றேல் இன்றைய நம் நாட்டு வரலாறு இத்துணை விரிவாக எழுதப்பட் டிருக்காது என்பது வெளிப்படை. இலக்கியங்களும், கலைகளும் உண்மை வரலாற்றுடன் கற்பனைகள் பொதிந்தவை; வரிசைப் பட அமையாதவை; அவற்றுள் உண்மை இது, அவைகளின் வரிசை இது என்பதைச் சாசனங்கள் நமக்குப் புலப்படுத்துகின்றன. சாசன ஆராய்ச்சியால் போந்த பயன்களைக் கூற வந்த உயர்திரு சதாசிவ பண்டாரத்தாரவர்கள் 'புராணநூலும் கல்வெட்டுகளும்' என்ற அவரது சொற்பொழிவில் பின்வருமாறு கூறியுள்ளார்:—

"கல்வெட்டுகளில் காணப்படும் செய்திகள் எல்லாம் வெறும் கற்பனைச் செய்திகள் அல்ல; பயனற்ற செய்திகளுமல்ல. அவை அனைத்தும் நம் முன்னோர்களுடைய உண்மை வரலாறுகளை யுணர்த்தும் பழைய வெளியீடுகளே. சேர சோழ பாண்டிய ராகிய முடியுடைத் தமிழ்வேந்தரும், பல்லவரும், குறுநில மன்னரும், பிற தலைவர்களும் புரிந்த அறச்செயல்களும், வீரச்செயல்களும், அன்னோர் செய்துகொண்ட உடன்படிக்கைகளும், அக்கால அரசியல் முறைகளும், போர் நிகழ்ச்சிகளும், பழைய தலைவர்களைப் பற்றிய செய்திகளும், மண்டலம் - வளநாடு - கோட்டம் - நாடு - கூற்றம் என்பவற்றின் வரலாறுகளும், பல ஊர்களின் உண்மைப் பெயர்களும், முற்கால வழக்கங்களும், சமயநிலையும், மற்றும் பல அரிய நிகழ்ச்சிகளும் நம் நாட்டுக் கல்வெட்டுகளாலும் செப்பேடுகளாலும் நன்கு அறியக்கிடக்கின்றன. சுருங்கச் சொல்லுமிடத்து, நம் நாட்டின் பழைய சரிதங்களை உள்ளவாறு உணர்ந்து கொள்வதற்குத் தக்க கருவியா யிருப்பன கல்வெட்டுகளும் செப்பேடுகளுமே யாம்"

இத்தகைய பெருமை வாய்ந்த சாசனங்களை நம் முன்னோர்கள் பலவிதமாகப் பாதுகாத்து வந்தனர். கல்வெட்டுகளுக்கு எண்ணெய் பூசுவதும், அவைகளை அவ்வப்போது கவனித்துக் கொள்வதும் பண்டைய கோயில் மேற்பார்வையாளரின் கடமைகளாயிருந்தன. அவர்கள், கல்வெட்டுகளுக்குச் செப்புத்தகடுகளில படி எடுத்து வைத்திருந்தனர். பழுதுற்ற கோயில்களை இடித்துக் கட்டுவதற்கு முன்னர், அவைகளிலுள்ள கல்வெட்டுகளை ஓலைகளில் எடுத்து எழுதி, கோயில் கட்டி முடிந்ததும் ஊர்ச்சபையோர் மேற்பார்வையில் மீண்டும் அவைகளை அந்தந்த இடங்களில் செதுக்குவித்து வந்தனர். 'திருமண்டப மிழிச்சி யெடுப்பதற்கு முன்புள்ள சிலாலேகைப்படி' (12) 'ஸ்ரீவிமானம் இழித்துவதற்கு முன்புள்ள சிலாலேகைப்படி' (15) என வருவன இதனை வலியுறுத்தும்.

ஆனால் தமிழ்நாட்டில் அந்நிய ராட்சி ஏற்பட்ட காலத்தில்,இச்சானங்களைப் பாதுகாக்கவேண்டுமென்பதைத் தமிழ் மக்கள் மறந்தனர். அவைகளின் அருமை பெருமைகளும் அவர்களுக்கு விளங்காமல் போயிற்று. இங்கிலையில் செர்மானிய தேசத்தவரான டாக்டர் உல்சு என்னும் பெரியார் இந்தியாவிற்கு வந்து, இந்திய கோயில்களிலுள்ள சாசனங்களின் பெருமைகளை உணர்ந்தார். அக்காலத்தில் ஆங்கில அரச பிரதிநிதியாயிருந்த ரிப்பன் பிரபுவிடம் அதைப்பற்றிப் பேசி, அவரது உத்தரவு பெற்று அங்கங்கேயுள்ள கல்வெட்டுகளைத் தொகுப்பதற்கும், ஆராய்ச்சி செய்வதற்கும் ஏற்பாடு செய்தார். துவக்கத்தில் அவர்தாமே உடனிருந்து இவ்வாராய்ச்சியை நடத்தினர். உயர்திரு து அ கோபிநாதராவ், வி. வெங்கையா முதலியவர்களைத் தமது ஆராய்ச்சிக்குத் துணையாகக் கொண்டு, அவர்களையும் அதில் ஈடுபடும்படிச் செய்தார். நாளடைவில் பலர் இத்துறையில் படிந்து பணி செய்வாராயினர். அதன் பயனாக ஆயிரக்கணக்கான கல்வெட்டுகள் படி எடுக்கப்பட்டன. தென்னிந்திய கல்வெட்டுத் தோத்திகள் என்ற பெயரோடு இதுவரை பத்துத் தொகுதிகள் வெளிவந்துள்ளன. அவற்றுள் முதல் மூன்று தொகுதிகள் டாக்டர் உல்சு துரையவர்களின் ஆங்கில மொழி பெயர்ப்புடனும், குறிப்புரைகளுடனும் கூடியனவாகும்

சென்னைப் பல்கலைக் கழகத்தார் இக் கல்வெட்டுகளில் இருபது கல்வெட்டுகளைத் தேர்ந்தெடுத்து வித்துவான் தேர்

வுக்குப் பாடமாக வைத்துள்ளனர். அவைகள் தோன்றிய காலத்தை — பல்லவர் காலம், சோழர் காலம், பாண்டியர் காலம் என மூன்றாகப் பிரிக்கலாம். திக்காலிவல்லம் கோயில் சாசனம் முதலிய நான்கும் (12-15) பல்லவர் காலத்திலுள்ளன; அவற்றுள் மகாவலி வணராயர் சாசனம் (13) இரண்டாம் நந்திவர்மன் காலத்திலும், திக்காலிவல்லம் கோயில் சாசனம் (12) மூன்றும் நந்தி வர்மன் காலத்திலும், ஏனைய இரண்டும் பல்லவ ராட்சிக்குட்பட்ட வாணராயராலும் ஏற்பட்டனவாகும். எனவே, அவை நான்கும் கி. பி. 8 ஆம், 9 ஆம் நூற்றாண்டிலுள்ளன என்பது வெளிப்படை. அவற்றுள் பழமையானது மகாவலீ வாணராயர் சாசனம். இது கி. பி 779 ஆம் ஆண்டில் ஏற்பட்டது. மற்ற சாசனங்களுக்கும் இதற்கும் அமைப்பில் பெரிதும் வேறுபாடு காணப்படுகிறது. இது 'ஓம் நமச்சிவாயம். ஸ்வஸ்தி ஸ்ரீ' என்று தொடங்குகிறது; முடிவும் ஒரு வடமொழிச் சுலோகத்தைக் கொண்டுள்ளது. வாணராயர் குலப்பெருமையும், அவர்கள் 'வடுகவழி பன்னீராயிரம்' என்ற பகுதியை ஆண்ட செய்தியும், அவர்களுக்குத் தலைநகர் 'வாணபுரம்' என்பதும் இதனால் அறியக் கிடக்கின்றன.

திக்காலிவல்லம் கோயில் சாசனம், வாண மஹாதேவியார் சாசனம் இரண்டும் (12,15) புதுப்பிக்கப்பட்டவை என்பது, 'திருமண்டப மிழிச்சி யெடுப்பதற்கு முன்புள்ள சிலாலேகைப்படி', 'ஸ்ரீவிமானம் இழித்துவதற்கு முன்புள்ள சிலாலேகைப்படி'என்று அவைகளில் வரும் தொடர்களால் விளங்குகிறது. பல்லவர் இராச்சியம், பல கோட்டங்களாகவும், நாடுகளாகவும், ஊர்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தது. திக்காலிவல்லம், படுவூர்க்கோட்டத்து மீயாறுநாட்டிலுள்ளதோர் ஊர். 'வன்னிபெடாகிய இரணவிக்கிரமச் சதுர்வேதிமங்கலம்','காவிரிப்பாக்கமாகிய அவனிநாராயணச் சதுர்வேதிமங்கலம்' எனச் சில ஊர்களின் பெயர் மாறுபட்டிருப்பதற்கு அரசியல் மாற்றமே காரணமென்று தெரிகிறது. அரசன் செய்யும் தருமத்தை முதலில் அரசவையிலுள்ள ஒருவர்குறிப்பிட அது இரண்டாவதொருவரால் ஒப்புக்கொள்ளப்பட்டு நடைபெற்றதென்பதும், தானம் கொடுக்கப்பட்ட ஊரின் பெயர் மாற்றப்பட்டதென்பதும் திக்காலிவல்லம் கோயில் சாசனத்தால் புலப்படுகின்றன. கோயிலுக்கு நில மட்டுமன்றி,

திருநுந்தா விளக்குகளும் நிவந்தமாகக் கொடுக்கப்பட்ட தென்பது மாதவக் கிரமவித்தன் சாசனத்தாலும் (14),வாண மஹாதேவியார் சாசனத்தாலும் தெரிகிறது. மெய்க்கீர்த்தி களின்றியும் சாசனங்கள் எழுதுவதுண்டு என்பதற்குப் பல் லவர் காலத்துச் சாசனங்களும், பாண்டியர் காலத்துச் சாச னங்களில் பராக்கிரம பாண்டிய தேவர் சாசனமும் (19) வாலக்காமயர் சாசனமும் (20) சான்றுகளாகும்.

ஸ்ரீ ராஜராஜன் கிணறு முதலிய பதினோரு சாசனங் களும் (1–11) தஞ்சைச் சோழ மன்னர் காலத்தி லேற்பட்ட சாசனங்களாகும் இவை கி. பி. 10, 11, 12 ஆம் நூற் றூண்டுகளில் தோன்றியன. முதலாம் இராசராசன், கங்கை கொண்ட சோழன், இராசாதிராசன், இராசேந்திரதேவன், வீரராசேந் திரன், முதற் குலோத்துங்கன், விக்கிரமச் சோழன் ஆகிய இவர்கள் இக்காலத்திலாண்டனர். இவர்களில் இராசராசன் காலத் துச் சாசனங்கள் இரண்டு; இராசேந்திர தேவன் காலத்துச் சாசனங்கள் இரண்டு; முதற் குலோத்துங்க சோழன் காலத் துச் சாசனகள் மூன்று. இவர்கள் ஒவ்வொருவர் காலத்துச் சாசனங்களிலும், அவரவர்களுடைய வெற்றி, ஆட்சிமுறை முதலியவற்றைக் குறிக்கும் மெய்க்கீர்த்திகள் அமைந் துள்ளன.

இவ்வாறே, பாண்டிய மன்னர்களில் வீர பாண்டியன், பராந்தக பாண்டியன், அரிகேசரி பராக்கிரம பாண்டியன், பராக் கிரம பாண்டியன் என்னும் குலசேகர பாண்டியன் என்பவர் களின் சாசனங்களும், அவர்கள் காலத்தில் விசயநகர மன் னர் ஆட்சிக்குட்பட்டுச் சோழ நாட்டை ஆண்டுவந்த வாலக் காமயர் சாசனமும் இறுதி ஐந்து சாசனங்களாக (16–20) அமைந்துள்ளன. இவை கி. பி. 12 முதல் 16 ஆம் நூற்றூண் டிற்குட்பட்ட காலத்தில் ஏற்பட்டனவாகும். இவைகளில் பராக்கிரம பாண்டிய தேவர் சாசனமும், வாலக்காமயர் சாச னமும் மெய்க்கீர்த்தியின்றி யமைந்துள்ளமை குறிப்பிடத் தக்கது.

இச் சோழ பாண்டியர் காலத்துச் சாசனங்களால் அறி யக்கூடும் உண்மைகள் பல உள்ளன. அவைகளின் தொடக் கம், 'ஸ்வஸ்தி ஸ்ரீ', 'சுபமஸ்து', 'சுபமஸ்து. ஸ்வஸ்தி ஸ்ரீ' என்பன போன்ற மங்கல மொழிகளைக் கொண்டுள்ளது; முடிவு,

சிவன்கோயில் சாசனமாயின் 'பந்மாஹேஸ்வர ரக்ஷை' என்றும், விஷ்ணு கோயில் சாசனமாயின் 'வைஷ்ணவ ரக்ஷை' என்றும் அமைந்துள்ளது 'சைவ அடியார்கள் காப்பார்களாக' 'வைணவ அடியார்கள் காப்பார்களாக' என்பது அவற்றின் பொருளாகும். இவை சாசனங்களின் 'காப்பு நிலை' எனப்படும். பிற்காலத்துச் சாசனங்களின் இறுதியில் தன்மம் காத்தார் அடையும் பயனும், அழித்தார் அடையும் தண்டனையும் கூறப்பட்டுள்ளன. "இத் தன்மத்துக்கு அகுதம் பண்ணினவன் உண்டானல் கங்கைக் கறையிலே கோவதையைக் கொன்ற பாவத்திலே போகக்கடவராகவும்" என்பது வாலக்காமயர் சாசனத்தின் இறுதி வாக்கியம்.

'ஸ்ரீ ராஜராஜதேவர்க்கு யாண்டு உ௰க ஆவது' (1) 'ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு ௰க ஆவது, நாள் இருநூற்று நாற்பத்திரண்டினல்', 'சகர்யாண்டு எண்ணூற்றொருபதாவது', முன்னாள் இரண்டாவதின் எதிர் இருபத்து மூன்ருவது முதலுக்கு', 'இருபத்து எட்டாவதின் எதிராவது', 'சகாப்தம் ௲௱௩ இதன் மேல் செல்லா நின்ற பிலவ ஸம்வத்ஸரத்து கும்பஞாயற்று' பூர்வ பக்ஷத்து பூறுணையும் ஆதித்த வாரமும் பெற்று மகத்து நாள்' என வருவன சாசனங்களில், அவை தோன்றிய காலம் குறிப்பதில் பல முறைகள் கையாளப்பட்டு வந்திருக்கின்றன வென்பதைப் புலபடுத்துகின்றன

சாசனங்களில் காணும் மெய்க்கீர்த்திகள் அந்தந்தக் காலத்து அரசர்களது வெற்றிகள், ஆட்சி முறை முதலியவற்றைத் தெரிவிக்கின்றன. முதலாம் இராசராசன், இரசேந்திரன் முதலியோர் புதிதாகச் செயித்த நாடுகளை அறிய, அவர்கள் மெய்க்கீர்த்திகள் பெரிதும் உதவி புரிகின்றன. காம்பிலி, கோப்பம், கூடல் சங்கமம், கலிங்கம் முதலிய இடங்களில் நடந்த போரைப்பற்றிய விரிவான செய்திகள் அந்தந்த அரசர்களின் மெய்க்கீர்த்திகளில் கூறப்பட்டுள்ளன. ஆனல் சோழ மன்னர் மெய்க்கீர்த்திக்கும், பாண்டிய மன்னர் மெய்க்கீர்த்திக்கும் ஒரு பெரிய வேறுபாடு காணப்படுகிறது. சோழ மன்னர் மெய்க்கீர்த்திகளில் அந்தந்த அரசர்களின் வெற்றிகளே கூறப்படுகின்றன; பாண்டிய மன்னரோ, அவர்கள் வெற்றிகளோடு அவர்களுடைய முன்னோர்களின் அரிய செயல்களையும் சேர்ந்துக் கூறியுள்ளனர்.

சோழ மன்னர்கள் தங்கள் இயற்பெயர்களுக்கு முன் 'இராசகேசரி', 'பரகேசரி' என்ற பட்டப் பெயர்களையும், பாண்டிய மன்னர்கள் 'மாறவர்மன்', 'சடைய வர்மன்' என்ற பட்டப் பெயர்களையும் வைத்து வழங்கி வந்தமையாகிய தொல்லை மரபொன்று சாஸனங்களில் காணப்படுகிறது. தந்தை இராசகேசரியானால் மகன் பரகேசரி என்றபட்டப்பெயரைக்கொண்டுள்ளான். முதலாம் இராசராசன் இராசகேசரி பட்டம் பெற்றவன்; அவன் மகன் இராசேந்திர சோழன், 'பரகேசரி' என்று அழைக்கப்பட்டுள்ளான். பராக்கிரம பாண்டியனின் [illegible] சாஸனத்தில், குலசேகரப்பாண்டியன் 'ஜடிலவர்மன்' (சடைய வர்மன்) என்று பெயர் பெற்றுள்ளான். இவைகளால் இன்ன அரசனுக்குப்பின் பட்ட மெய்தியவன் இன்னான் என்று அறிவது எளிதாகின்றது. இராசாதிராசன், வீரராசேந்திரன் இவர்களிருவரும் இராசகேசரி பட்டம் பெற்றவர்கள். எனவே இராதிராசனுக்குப்பின் 'பரகேசரி' பட்டமெய்தியொருவன் ஆண்டிருக்க வேண்டும் அவனே பரகேசரி இராசேந்திரதேவ னுவான் என்றறிக.

பண்டைக் காலத்தில் ஆறு மாதங்களளவும் தண்ணீர்ப் பந்தல்கள் வைத்து நடத்தப்பட்டு வந்தன வென்பது ஸ்ரீராஜராஜ [illegible] சாஸனத்தாலும், கோயில்களில் திருப்பதியங்கள் பாடப்பட்டன வென்பதும், அப்பொழுது உடுக்கை, கொட்டிமத்தளம் போன்ற இசைக் கருவிகள் வாசிக்கப்பட்டன வென்பதும் திருப்பதியம் சாசனத்தாலும் விளக்கமாகின்றன. சோழமன்னர்கள், கோயில்களுக்கே யன்றி கோயில்களில் ஆசாரிய போகத்தி லுள்ளவர்களுக்கும், அவர்களுடைய பெண்களுக்கும் நிவந்தங்கள் கொடுத்து ஆதரித்து வந்துள்ளனர் என்பதை ஸ்ரீ ராஜேந்திர சோழதேவன் சாசனம் புலப்படுத்துகின்றது. இராசாதிராசன் காலத்து மணிமங்கலம் சபையோர் சாசனம், கோயில், பண்டாரத்திலிருந்து கடன் வாங்கும் பழக்கம் அக்காலத்தில் இருந்த தென்பதைத் தெளிவிக்கின்றது. கோயில்களுக்கு நிவந்தமாக நிலங்களே யன்றி பொன் முதலிய பொருள்களையும் கொடுத்து வந்தனர் என்பதை அருளாளப்பெருமாள் கோயில் சாசனத்தால் அறிகின்றோம். தானம் கொடுத்ததற்கு மட்டுமன்றி, நிலம் விற்றதற்கும் சாசனங்கள் ஏற்பட்டன வென்பதற்குச் சிறு பழூர் விலைக்கிரயப் பத்திரம் என்னும் சாசனம் சான்றுயமைந்

துள்ளது. கோயில் நிலங்களைச் சாகுபடி செய்வதற்குக் கொடுத்த செய்தியை வில்லவராயன் சாசனம் தெரிவிக்கிறது.

சோழ இராச்சியம் பல மண்டலங்களாகவும், மண்டலம் பல வளநாடுகளாகவும், வளநாடு பல நாடுகளாகவும், நாடு பல கூற்றங்களாகவும், கூற்றம் பல ஊர்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தது. சோழ மண்டலம், ஜெயங்கொண்ட சோழ மண்டலம், அதிராசராச மண்டலம் முதலிய மண்டலங்களும், நித்தா விநோத வளநாடு, குலோத்துங்க சோழ வளநாடு, இராசேந்திர சோழ வளநாடு, க்ஷத்திரிய சிகாமணி வளநாடு முதலிய வளநாடுகளும், தென்கரை நாடு, வெங்கால நாடு, மாகணூர் நாடு முதலிய நாடுகளும், ஆவூர்க் கூற்றம், குன்றக் கூற்றம் முதலிய கூற்றங்களும், ஆவூர் முதலிய ஊர்களும் சோழர் சாசனங்களில் காணப்படும் மண்டலங்களும், அவைகளின் பிரிவுகளுமாகும். நாடுகளில் சில 'தனியூர்' என்றும், 'சதுர்வேதி மங்கலம்' என்றும் அழைக்கப்பட்டன. ஸ்ரீ விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலம், செயங்கொண்ட சோழ மண்டலத்துக் காலியூர்க் கோட்டத்திலுள்ளது. மண்டலங்களில் செயங்கொண்ட சோழ மண்டல (தொண்டை மண்டலம்) மட்டும் முன்பிருந்த படியே பல கோட்டங்களாகவும், நாடுகளாகவும், ஊர்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தது.

பாண்டிய இராச்சியமும் இவ்வாறு பல நாடுகளாகவும் ஊர்களாவும் பிரிக்கப்பட்டிருந்தமை அவர்கள் சாசனங்களால் அறியப்படுகிறது. வளநாடுகளும், சதுர்வேதி மங்கலங்களும் பிற்காலத்தில் ஏற்பட்டனவாய் அந்தந்தக் காலத்து அரசர்களின் பட்டப்பெயர்களை யுடையனவாய் அமைந்திருத்தல் குறிப்பிடத் தக்கது. இராசாதிராசன் காலத்தில், செயங்கொண்ட சோழ மண்டலத்துச் செங்காட்டுக் கோட்டத்து மாகணூர் நாட்டிலிருந்த மணிமங்கலமான இராஜ சூளாமணிச் சதுர்வேதி மங்கலம் என்னும் ஊர், முதற் குலோத்துங்க சோழன் காலத்தில், குலோத்துங்க சோழ வளநாட்டுக் குன்றத்தூர் நாட்டிலுள்ள மணிமங்கலமான பாண்டியனை இருமடி வென்கொண்ட சோழ சதுர்ப்பேதி மங்கலம் என்று அழைக்கப்பட்டிருத்தல் காண்க.

அக்கால அரசர்கள், அவர்கள் ஆட்சியின் காலத்திலேயே அவர்களுடைய மக்களுக்கும் இளவரசு பட்டம் கொடுத்து அரசராக்கியதாகத் தெரிகிறது. முதலாம் இராசேந்திரன் கி. பி. 1012 முதல் 1042 வரை சோழநாட்டை ஆண்டான். அவன் தன் மகன் இராசாதிராசனை கி. பி 1018 முதல் இளவரசனாக்கினான் இராசாதிராசன், இராசேந்திரனுக்குப் பின் கி. பி 1042 முதல் 1052 வரை ஆண்டானாயினும் சாசனங்களில் அவன் ஆட்சி கி. பி 1018 முதல் எண்ணப்பட்டு வந்திருப்பது குறிப்பிடத் தக்கதாகும் அன்றியும் சோழ மன்னர்கள் தங்கள் நாடுகளின் பல பிரிவுகளையும் ஆளும்படி அவர்களுக்கு நெருங்கிய இனத்தவரையும், மக்களையும், பெயரர்களையும் நியமித்த செய்தி முதலாம் இராசேந்திரன், வீர ராசேந்திரன் முதலியோர் சாசனங்களில் காணப்படுகிறது

சோழ பாண்டியர் காலத்து அதிகாரிகளில் 'உடன் கூட்டத்து அதிகாரிகள்' குறிப்பிடத் தக்கவராவர். வரியிலார், புரவுவரி, புரவுவரித் திணைக்களநாயகம், திருவாய்க் கேள்வி, திருமந்திரவோலை, திருமந்திரவோலைநாயகம் முதலிய அதிகாரிகளும் அக்காலத்தில் இருந்ததாகச் சாசனங்களில் காண்கின்றோம். இவர்களில் வரியிலார், வரிகளாக வரும் தொகையைக் கணக்கில் எழுதிக் கொள்வர் அரசிறை நீக்கிய ஊர்களிலிருந்து வருவதற்குரிய பிற வரிகளைக் கணக்கு வைப்பவர் 'புரவு வரி' என்றும், அவர்களுக்குத் தலைவராயிருப்பார் 'புரவு வரித் திணைக்கள நாயகம்' என்றும் அழைக்கப்பட்டனர். அரசன் திருவாய்மொழிந் தருளியதைக் கேட்டு திருமந்திர வோலை முதலியவர்களுக்கு அறிவிப்பவர் 'திருவாய்க் கேள்வி' என்றும், அரசன் ஆணை முதலியவற்றை எழுதியவர் 'திருமந்திர வோலை' என்றும், அவர்களுக்குத் தலைவராயிருப்போர் 'திருமந்திர வோலை நாயகம்' என்றும் அழைக்கப்பட்டனர். அரசியல் அதிகாரிகளுக்கு அரசன் பல பட்டப்பெயர்களை வழங்கி வந்ததோடு, தன் பட்டப்பெயர்களையும் அவர்கள் இட்டுக்கொள்வதற்கு உரிமையளித்திருந்தனன். மூவேந்த வேளான், தொண்டைமான், வாணகோவரையன், சேதிராயர், வாணராயர், விழுப்பரையன் என்பன அவற்றுள் சில பட்டப்பெயர்களாகும்.

அக்கால மன்னர்களுக்கு நிலவரியே யன்றி, பலவகைத் தொழில் வரிகளும், சுங்கவரி முதலியனவும் வருவாயாக வந்த தெனத் தெரிகிறது. குடிகள் செலுத்து வந்த நிலவரி 'காணிக் கடன்' எனப்பட்டது அது ஆறிலொன்று என்பது, 'ஆறிலொன்று அவனியுட் கூறுகொள் பொருள்களும்' என இராசாதிராசன் மெய்க்கீர்த்தியில் வரும் அடியால் விளங்குகிறது. பகைவர் நாட்டைச் செயித்துக் கொள்ளைக்கொண்ட பொருள்களும், பலவகைத் தண்டப் பொருள்களும் அக்கால அரசர்களுக்குப் பிறவகையால் வந்த வருவாய்கள் என்னலாம். சிற்றுயம், ஏலவை, உகவை முதலியன இறையிலி நிலங்களிலுள்ளவர்களிடம் வாஙகப் பெற்ற வரிகளாகும். மன்றுபாடு, தண்டம், குற்றம் முதலியன அக்காலத்தில் தன்மாசனததார் குற்றவாளிகளுக்கு விதித்த அபராதங்களாகும். கோயில் சம்பந்தமான சில குற்றங்களுக்குத் தண்டனையாகக் குற்றவாளிகளைக் கோயிலில் திருநுந்தா விளக்குப் போடுவதற்கு ஏற்பாடு செய்ததுமுண்டு

அக்காலத்தில் நிலங்கள் அளக்கப்பட்டும், அதனதன் தன்மைக் கேற்றவாறு பிரிக்கப்பட்டும் குடிகளிடம் நிலவரி வாங்கப்பட்ட தென்று அறிகின்றோம் நிலங்கள், அவைகளின் விளைச்சலுக் கேற்றவாறு நந்செய், புந்செய், காடு (தோட்டம்) என மூன்றாகப் பிரிக்கப்பட்டிருந்தன. கார், பசானம் என்பன நஞ்செய் நிலத்தில் விளையும் இரு போகு நெல்லைக் குறிக்கும். குழி, மா, வேலி என்பன அக்காலத்தில் நிலங்களை அளக்கும் நீட்டலளவைப் பெயர்கள். 'நிலம் ஒன்பதுமா முந்திரிகையின் மூன்றுமா முக்காணி' (18) என வரும் தொடர் அக்காலத்தில் நிலங்கள் எவ்வளவு நுட்பமாக அளக்கப்பட்டிருந்தன வென்பதைக் காட்டும். வரி நீக்கப்பட்டதான இறையிலி நிலஙகள் புதிய பெயர்களைக் கொண்டிருந்தன சைவ வைணவக் கோயில்களுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட இறையிலி நிலங்கள் 'தேவதானம்' என்றும், 'திருவிடையாட்டம்' என்றும், சைன பௌத்தக் கோயில்களுக்குக் கொடுக்கப்பட்ட நிலங்கள் 'பள்ளிச் சந்தம்' என்றும், மடங்களுக்குக் கொடுக்கப்பட்ட நிலங்கள் 'மடப்புறம்' எனறும் அழைக்கப்பட்டன.

சோழர் காலத்தில் வழங்கியதாக வுள்ள நாணயமொன்று 'நற்காசு' என்று பெயர் பெற்றுள்ளது எனவே, அது பொன்

ஞால் செய்யப்பட்ட நாணயமென்பது வெளிப்படை. 'காண விலையின் புடவை' (11) என வரும் தொடரில் 'காணம்' என்னும் பெயரும் அக்காலத்தில் வழங்கியதொரு பொற்காசையே குறிக்குமென்பர் நான்கு குன்றி எடை கொண்டது ஒரு கணம் (பொன்) என்றும், பத்துக் காணம் கொண்டது ஒரு காசு என்றும் இதற்கு வாய்பாடு கூறுவர். இனி, காய்ச்சி உருக்கினாலும் அதன் மாற்று குறைபடாது என்று அரசியல் அதிகாரிகளால் ஆராய்ந்து உறுதி செய்யப்பட்ட தற்கு அடையாளமாகத் துளையிட்டு வழங்கிய ஓரளவு எடையுள்ள பொன் 'துளைப்பொன்' என்று பெயர் பெற்றுள்ளது காண்க

நில அளவைகளைப் போல, பொருட்களை அளப்பதற்கு உபயோகித்து வந்த நிறுத்தலளவைகளும், முகத்தலளவைகளும் இச்சாசனங்களில் காணப்படுகின்றன. மணி, பொன் முதலியவற்றை நிறுப்பதற்குக் குன்றி, மஞ்சாடி, கழஞ்சு ஆகிய நிறைகற்கள் உபயோகத்திலிருந்தன. அவைகள் ஒழிந்த பொருட்கள் கலம், பலம் என்னும் எடைக்கற்களால் நிறுக்கப்பட்டன நெல், அரிசி, நெய், பால், உப்பு முதலியன அளப்பதற்கிருந்த பல அளவைகளில் செவிடு, ஆழாக்கு, உழக்கு, உரி, நாழி, குறுணி (மரக்கால்), பதக்கு, தூணி, கலம் என்பன சிலவாகும். 'ஐ' என்பது நெல்லையும், 'ந' என்பது குறுணியையும், 'கூ' என்பது கலத்தையும், 'உ' என்பது இரு தூணியையும் குறிக்கும் எழுத்துக்களாகச் சாசனங்களில் வழங்கியுள்ளன. அருண்மொழித் தேவன் மரக்கால், இராசராசன் மரக்கால், ஆடவல்லான் மரக்கால், அருமொழி நங்கை மரக்கால் என்பன சாசனங்களில் கண்ட சில மரக்கால்களின் பெயர்களாகும்

சோழ மன்னர் காலத்தில் ஊர் தோறும் கிராமச் சபைகள் இருந்தன; இச்சபையினர், ஊர் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர் கிராமங்கள் சிறியதாயிருப்பின், இரண்டு மூன்று கிராமங்களைச் சேர்த்து, அவைகளுக்குப் பொதுவான ஒரு சபையை ஏற்படுத்தி ஆட்சி புரிந்து வந்தனரென்று அறிகின்றோம் இச்சிறு கிராமங்களின் தொகுதியே பிற்காலத்தில் 'சதுர்வேதி மங்கலம்' என்ற பெயர் பெற்றது போலும். இச்சபையில் சம்வற்சரவாரியம், தோட்ட வாரியம், ஏரி வாரியம் என்பன போன்ற சில உட் கழகங்களும் இருந்தன. அவை ஒவ்வொன்றும் தனித்தனி வேலைகளைச்

செய்து வந்தன. நியாயம் வழங்குவது, அற நிலையங்களைக் கண்காணிப்பது, நீர்நிலைகளைப் பாதுகாத்துப் பயன்படச் செய்வது, நிலபுலங்களைப் பரிபாலிப்பது, அரசனுக்குக் குடிகள் செலுத்த வேண்டிய நில வரியையும், பிற வரிகளையும் வாங்கி அரசாங்கப் பொருள் நிலையத்திற்கு அனுப்புவது போன்ற எல்லா வேலைகளையும் கிராமச் சபையினரே செய்து வந்தனர். கோயில் ஆட்சியும் இவர்கள் வசமே இருந்து வந்தது. சுருங்கக் கூறின், இவர்களே கிராம ஆட்சியைச் செய்து வந்தன ரென்னலாம். இவர்கள் கூடித் தங்கள் கடமைகளை நிறைவேற்றுவதற்கு ஊர்தோறும் பொது மன்றங்க ளிருந்தன; சில சமயங்களில் கோயில் மண்டபங்களும், பள்ளிக் கூடங்களும் சபை கூடுவதற்குப் பயன்பட்டன. சபையில் நிறைவேற்றும் தீர்மானங்களையும், பிறவற்றையும் எழுதி வைப்பவன் 'ஊர்கீ கரணத்தான்' அல்லது 'மத்தியஸ்தன்' என்று அழைக்கப்பட்டான்.

அக்காலக் கோயில்கள் கருப்ப கிருகம், அர்த்த மண்டபம், இடை நாழிகை, மகா மண்டபம் முதலியவற்றையும், உயர்ந்த கோபுரங்களையும், சுற்றிலும் சிறு தேவதைகளுக்குக் கோயில்கள் அமைக்கப்பெற்ற திருச்சுற்றுமாளிகையையும், சுற்று மதில்களையு முடையனவாய்த் திகழ்ந்தன. திருவுண்ணாழிகை யுள்ளார், ஸ்ரீ பலீ கொட்டுவார், திருப்பள்ளித் தாமம் பறிப்பார், திருப்பதியம் பாடுவார் முதலிய திருப்பணியாளர்கள் கோயில்களில் இருந்து திருப்பணி செய்து வந்தனர்.

அக்கால அரசர்களுக்குக் காலாட் படை, குதிரைப்படை, யானைப்படை ஆகியவை இருந்தன; ஆனால் அவர்களுக்குத் தேர்ப்படை இருந்ததாகத் தெரியவில்லை. காந்தளூர்ச் சாலைக் கலமறுத்தது, ஈழம் கொண்டது, கடாரம் கொண்டது போன்ற செய்திகளால் சோழ மன்னர்களுக்குப் பலம் பொருந்திய கப்பல் படைக ளிருந்தன என்று தெரிகிறது.

இவ்வாறு இடைக்காலத் தமிழ்மக்களின் பழக்க வழக்கங்களையும், நாகரீக நிலையையும் அறியக்கூடும் இவ் விருபது சாசனங்களையும் சென்னைப் பல்கலைக் கழகத்தார் பீ. ஏ.

தமிழ்ப்பாடத் தொகுப்பாக ஆங்கில முகவுரையுடனும், சிறு குறிப்புரையுடனும் 1920 ஆம் ஆண்டு வெளியிட்டனர். அத் தொகுப்பு இப்பொழுது மாணவர்களுக்குக் கிடைப்பது அரிதாகி விட்டது. அவைகளின் படிகளாக மாணவர்கள் எழுதி வைத்துள்ள பாடங்களும் பாட பேதமிக்கு, சாசனங்களிலமைந்த பழம்பெருஞ் சொற்களையும் சொற்றொடர்களையும் அறியக்கூடாத நிலையிலுள்ளன. அக் குறைகளை நீக்கி, சாசன ஆராய்ச்சியின் உண்மை நோக்கத்தை அறிவதற்கு இவ் வெளியீடு பேருதவி புரிகின்றது.

பல்கலைக் கழகத்தார் வெளியீட்டில் கண்டபடி ஒவ்வொரு சாசனத்திற்கு முரிய ஆங்கில முகவுரையைத் தமிழில் மொழிபெயர்த்தும், அவைகளில் போந்த கால பேதத்தைத் தக்க சான்றுகள் காட்டி விளக்கியும், சாசனங்களின் துவக்கத்தில் வரும் மெய்க்கீர்த்திகளைச் செய்யுள் வடிவில் பிரித்து எழுதியும்,உரைநடைப் பகுதியைச் சந்தி பிரித்துக் காட்டியும் இந்நூல் உரையாசிரியர், உயர்திரு: **வித்துவான் வ. தங்கையா நாடார்** அவர்கள் சாசனங்களின் மூல பாடத்தை அமைத்துள்ளனர். வரிதோறும் காணப்படும் அருஞ் சொற்கள், சொற்றொடர்கள் முதலியவற்றை அந்தந்தப் பக்கங்களில் ஆராய்ச்சிக் குறிப்புகளுடனும், வரலாற்றுக் குறிப்புகளுடனும் வெளியிட்டுள்ளனர். மாணவர்களுக்கு உதவியாக, இருபது ஆண்டுகளுக்கு மேலாகவுள்ள வித்துவான் தேர்வுவினாக்களைப் பரிசோதித்து அரும்பெயர் அகர வரிசை, சாசனங்களின் எண், பெயர் இட முதலியவற்றின் வரிசை ஆகியவற்றை நூலின் இறுதியில் சேர்த்துள்ளனர். தேர்வில் வெற்றி பெற விரும்பும் மாணவர்களுக்கு இந்நூல் பெரிதும் உதவுவ தன்றி, அன்னோர் மேலும் இத்துறையில படிந்து ஆராய்ச்சி செய்வதற்கும் அவர்களைத் தூண்டு மென்பதற் கையமின்று.

இங்ஙனம்,

பாளையங்கோட்டை,
15—8—1949.

**பண்டித S. வேதமாணிக்க நாடார்,**
தமிழ்த் தலைமை யாசிரியர்.

# பொருளடக்கம்.

| | | பக்கம் |
|---|---|---|
| | முன்னுரை | க—மச |
| 1. | ஸ்ரீ ராஜராஜ கிணறு | 1 |
| 2. | திருப்பதியம் | 9 |
| 3. | ஸ்ரீராஜேந்திரசோழ தேவர் சாசனம் | 13 |
| 4. | மணிமங்கலம் சபையோர் சாசனம் | 25 |
| 5. | அமண்பாக்கம் சாசனம் | 38 |
| 6. | கணவதிநல்லூர் சாசனம் | 48 |
| 7. | பாக்கூர் சாசனம் | 52 |
| 8. | சிறுபழூவூர் சபையோர் விலவிக்கிரய பத்திரம் | 65 |
| 9. | வில்லவராயன் சாசனம் | 77 |
| 10. | மணிமங்கலம் சபையோர் சாசனம் | 88 |
| 11. | அருளாளப்பெருமாள் கோயில் சாசனம் | 94 |
| 12. | திக்காலிவல்லம் கோயில் சாசனம் | 103 |
| 13. | மகாவலிவாணராயர் சாசனம் | 108 |
| 14. | மாதவக் கிரமவித்தன் சாசனம் | 112 |
| 15. | வாண மஹாதேவியார் சாசனம் | 115 |
| 16. | அதவோடு தோட்டம் சாசனம் | 118 |
| 17. | கன்னி பகவதியார் சாசனம் | 124 |
| 18. | அரிகேசரி தேவர் சாசனம் | 132 |
| 19. | பராக்கிரம பாண்டிய தேவர் சாசனம் | 146 |
| 20. | வாலக்காமயர் சாசனம் | 149 |
| | அரும்பெயர் அகர வரிசை | i—vi |
| | சாசனங்களின் எண், பெயர், இடம் முதலியன பற்றிய வரிசை | 1—4 |

# தமிழ்ச் சாசனங்கள்.

(சென்னை, பல்கலைக் கழக கீழ்க்கலை, வித்துவான் தேர்வுகளுக் குரியது).

## 1. ஸ்ரீ ராஜ ராஜ கிணறு. *

### முகவுரை

செங்கல்பட்டு சில்லாவிலுள்ள மாமண்டூரை யடுத்த உக்கல் என்னும் கிராமத்தில் இப்பொழுது அழிந்த நிலையிலிருக்கும் விஷ்ணுகோயிலின் மேலைச்சுவரில் இச்சாசனம் காணப்படுகிறது. இராசகேசரி வர்மன் என்னும் இராசராச தேவனுடைய ஆட்சியின் இருபத்தொன்பதாவது ஆண்டில் அவன் பெயரால் அவனது வேலைக்காரனான கண்ணன் ஆரூரன் என்பவன் உக்கலுக்கு அருகில் அமைத்த கிணற்றையும் தொட்டியையும் பற்றியது இது.

இச் சாசனத்தின் முற்பகுதியில் இராசராசன் போர்ச் செயல்களைத் தெளிவாகக் கூறும் அவனது மெய்க்கீர்த்தி †

---

* ஸ்ரீராஜராஜன்: இப்பெயர் இராசகேசரி முதலாம் இராசராசனைக் குறிக்கும். இவன் சுந்தரசோழன் என்னும் இரண்டாம் பராந்தகனுக்கும் வானவன் மாதேவிக்கும் பிறந்தவன்; கி. பி. 985 முதல் 1014 வரை சோழநாட்டை ஆண்டான். இவன் பெயரால் அமைக்கப்பட்ட கிணறும், அக்கிணறுபற்றிய சாசனமும் 'ஸ்ரீ ராஜ ராஜ கிணறு' என்று அழைக்கப்பட்டன. இச்சாசனம் தென்னிந்திய சாசனத்தொகுதிகளில் மூன்றாவது தொகுதியைச் சேர்ந்தது.

† மெய்க்கீர்த்தி: சீர் நான்காய் இரண்டடித் தொடையால் அரசன் மெய்ப்புக ழெல்லாஞ் சொல்லியும், முடிவில் அவன் வரலாறு சொல்லியும், அவன் மனைவியுடன் வாழ்க எனச் சொல்லியும், அவன் இயற்பெயர் முன்னர் ஆண்டு சிறக்க என்று கூறியும் முடிப்பது. இதன் இலக்கணம் பன்னிருபாட்டியல், வச்சணந்தி மாலை முதலிய நூல்களில் காணப்படுகிறது. சோழ மன்னர் தங்கள் மெய்க்கீர்த்திகளில் தத்தம் வெற்றிகளையே முறையாகக் கூறுவர். பாண்டிய மன்னரோ, தங்கள் வெற்றிகளுடன் தங்கள் முன்னோர்களின் அருஞ் செயல்களையும் உடன் சேர்த்துக் கூறுவர்.

அமைந்துள்ளது; பிற்பகுதியில் கண்ணன் ஆரூரான் அமைத்த கிணற்றுக்கு அருகிலுள்ள தண்ணீர்ப் பந்தலிலிருந்து தண்ணீர் வார்த்தல் முதலிய பணிகளைச் செய்பவர்களுக்குக் கூலியாகக் கொடுக்கப்பட்டு வந்த நெல் முதலிய விபரம் கூறப்படுகிறது.

இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 1014ஆம் ஆண்டு என்னலாம்.

---

## இராசராசன்; மெய்க்கீர்த்தி

ஸ்வஸ்தி ஸ்ரீ —
திருமகள் போலப்[1] பெருநிலச் செல்வியுந்
தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொளக்[2]
காந்தளூர்ச் சாலைக்[3] கலமறுத் தருளி

---

இராசராசன், இராசேந்திர சோழன் என்பவர்கள் மெய்க்கீர்த்திகளில் அரசனுடன் அவன் தேவியும் வீற்றிருந்தாள் என்ற செய்தி காணப்படவில்லை.

ஸ்வஸ்தி ஸ்ரீ: இது சாசனங்களின் துவக்கத்தில் மங்கலமாக வரும் வடமொழித்தொடர். 'ஸ்வஸ்தி' என்றும் சில சாசனங்களில் வரப்பெறும். ஸ்வஸ்தி — சுவஸ்தி.

திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்: இது இராசராசன் கல்வெட்டுகளின் துவக்கமாக வரும் தொடர். இவ்வாறு இராசேந்திர சோழன் கல்வெட்டுகள் 'திருமன்னி வளர இருநில மடந்தையும்' என்று தொடங்கும். இம்முறையை முதல் முதல் அமைத்துக் காட்டியவன் இராசராசனே யாகும்.

திருமகள் - இலக்குமி: செல்வத்திற்குத் தலைவி. இத்தொடர் இங்கு இராசராசன் செல்வப் பெருக்கைக் குறித்தது. பெருநிலச் செல்வி—பூதேவி. பூமியைத் தெய்வமாகக் கூறுதல் மரபாதலின், இத்தொடர் இராசராசன் நாட்டுப் பரப்பைக் குறித்தது. திருமகள், நிலமகள் இருவரும் திருமாலின் தேவிகள்; திருமகளையும் நிலமகளையும் தனக்கேயுரிமை பூண்டவன் என்பதால், இராசராசன் திருமாலின் அமிசம் என்று குறித்தவாறு காண்க.

மனக் கோள் — யாவரும் அறியும்படியாக.

காந்தளூர்ச் சாலைக் கலமறுத் தருளி: இத்தொடருக்குப் பலரும் பலவாறு பொருள் கூறுவர். காந்தளூர் என்பது, திருவனந்தபுரத்தின்

வேங்கை நாடுங் கங்க பாடியும்
தடிகை பாடியும் நுளம்ப பாடியும்[4]
குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமும்

ஒரு பகுதியான 'வலியசாலை' என்றும், அச்சாலையில் உண்ணவேண்டியவர்கள் இத்தனை என்று உண்கலம் வரையறுத்த செய்தியே 'கல மறுத்தல்' என்றும் கூறுவர் ஒரு சாரார். சாலை - அறச்சாலை; கலம் - உண்கலம்; அறுத்தல் - வரையறுத்தல். இனி மற்றொரு சாரார், காந்தளூர்ச்சாலை திருவனந்தபுரத்தை யடுத்த மேலைக் கடற்கரையிலுள்ள ஒரு துறைமுகமென்றும், அதிலுள்ள சேரன் மரக்கலங்களை அழித்த செய்தியே 'கல மறுத்தல்' என்றும் கூறுவர். கலம் - மரக்கலம்; அறுத்தல் - அழித்தல்.

இராசராசன் காந்தளூர்ச்சாலையில் தன்னை எதிர்த்த சேர மன்னனையும் அவனுக்குத் துணையாக வந்த 'அமரபுஜங்கன்' என்னும் பாண்டியனையும் வென்றான் என்று வரலாறு கூறுவதால், பின்னர் கூறிய பொருளே பொருத்தமாகத் தெரிகிறது.

வேங்கை நாடு: இது கீழைச் சாளுக்கிய ராட்சியின்கீழிருந்த கோதாவரி, கிருஷ்ணா ஜில்லாக்கள் அடங்கிய பிரதேசம். இதனை 'வேங்கி நாடு' என்றும் கூறுவர். இராசராசன் இதற்கு 'வேங்கை மண்டலம்' என்று பெயரிட்டான். கங்க பாடி: இது மைசூர் இராச்சியத்தின் தென்கீழ்பாலுள்ள பகுதியாகும். காவிரிக் கரையிலுள்ள தழைக்காடு இதற்குத் தலைநகர். கங்க அரசர்கள் இதனை ஆண்டு வந்தனர். இராசராசன் இதற்கு 'முடிகொண்ட சோழ மண்டலம்' என்று பெயரிட்டான்.

தடிகைப் பாடி: இதனைத் 'தடிகை வழி' என்றும் கூறுவர். இது மைசூர் ஜில்லாவின் பகுதிகளைக் கொண்டது. நுளம்ப பாடி: இது கங்கபாடியை யடுத்ததும், மைசூருக்கு வட திசையின்கண்ணுள்ளதும், நுளம்பர் என்ற பல்லவர் கிளையினரால் ஆளப்பட்டு வந்ததுமான நாடு. இராசராசன் இதற்கு 'நிகரிலி சோழ மண்டலம்' என்று பெயரிட்டான்.

குடமலை நாடு: இதனைக் 'குடகு நாடு' என்பர். இந்நாட்டில் அரணமிருந்த இடம் உதகையாகும். இராசராசன் உதகையை அழித்து குடகு நாட்டை வென்றான். கொல்லம் - கொல்ல நாடு: இது மேல்கரை நாடுகளைச் சேர்ந்தது. கலிங்கநாடு: இதனைக் குலூத நாடு என்றும், இது மகேந்திர மலையைத் தன்னகத்தே கொண்டது என்றுங் கூறுவர்.

முரட்டொழிற் சிங்கள ஈழமண் டலமும்
இரட்ட பாடி ஏழரை யிலக்கமும்
முந்நீர்ப்[5] பழந்தீவு பன்னீரா யிரமுந்
திண்டிறல் வென்றித் தண்டாற்[6] கொண்டதன்
னெழில்வள ரூழியு ளெல்லா யாண்டுந்
தொழுதக[7] விளங்கும் யாண்டே[8] செழியரைத்

---

முரட்டொழில் - முரண் + தொழில்; வலிய போர்த் தொழிலை யுடைய (warlike) என்பது. ஈழ மண்டலம் - இலங்கை நாடு; இது சிங்களவர் நிறைந்த நாடாதலால் 'சிங்கள ஈழ மண்டலம்' என்று சிறப்பிக்கப்பட்டது. இதனை அக்காலத்தில் ஆண்டவன் 'மகிந்தன்' என்னு மரசன். இராசராசன் அவனை வென்று இந்நாட்டிற்கு 'மும்முடிச் சோழ மண்டலம்' என்று பெயரிட்டான்.

இரட்ட பாடி: இது இராஷ்டிர கூடர் என்ற வேந்தர் ஆண்ட பகுதியாகும். இதனைத் 'தக்கண தேசம்' (Deccan) என்றுங் கூறுவர். கி. பி. 975ல் இவர்கள் வலியைத்தொலைத்து மீண்டும் மேலைச் சாளுக்கியர் இங்கு தங்கள் ஆட்சியை நிலை நிறுத்தினர். அவருள் முதல்வன் இரண்டாம் தைலபன் என்னும் ஆகவ மல்லன் ஆவன்; அவன் இராசராசனை வென்றதாகக் கூறுவர். அதற்கு ஆதாரமில்லை. இரட்ட பாடி ஏழரை இலக்கம் என்பது, இரட்டபாடி நாட்டின் வருவாய்த் தொகையைக் குறிக்கும் என்பர். இலக்கம் — இலட்சம். இவ்வாறே 'பழந்தீவு பன்னீராயிரம்' என்பதற்கும் பொருள் கொள்க.

பழந்தீவு: இலட்சத்தீவு (Laccadives), மாலைத்தீவு (Maldives) முதலிய தீவுகளைக் குறிக்கும். இவை கடல் நடுவண் இருப்பதால் 'முந்நீர்ப் பழந்தீவு' என்று சிறப்பிக்கப்பட்டன. முந்நீர்—கடல்.

திண்டிறல் வென்றி – வெற்றியைத் தரும் வலிமை மிக்க; தண்டு - சேனை (Army).

தன்னெழில் - தனது வலிமை; ஊழியுள் எல்லா யாண்டும் - ஊழி காலத்து எல்லா ஆண்டும்,

தொழுதக - தொழுதற்குத் தக்கபடி; இனி 'தொழுதகை' என்று பாடமோதி, இராசராசன் உதகையைக் கொண்ட வரலாற்றைக் குறிப்பர். தொழுதகை - தொழு + உதகை. யாண்டே - எவ்விடத்தும். செழியர் - பாண்டியர்.

தேசுகொள் கோராச கேசரி வர்மரான[9]
உடையார் ஸ்ரீ ராசராச தேவர்க்கு[10] யாண்டு -
செய்தி
உ௰௯ ஆவது, ஐயங் கொண்ட சோழ[11] மண்டலத்துக்

---

தேசுகோள் - வெற்றிகொண்ட; கோ - பேரரசன்; ராசகேசரி வர்மர்: இது இராசராசனுக்குரிய பட்டப்பெயர். சோழ அரசர்கள் தங்கள் இயற்பெயர்களுக்குமுன் இராசகேசரி, பரகேசரி என்ற பட்டப் பெயர்களை மாறிமாறித் தரித்து வந்தனர். அதாவது இராசகேசரி முதலாம் இராசராசன் மகன், பரகேசரி இராசேந்திர சோழன் என்று அழைக்கப்பட்டான். இவ்வாறே பிற்காலத்துப் பாண்டிய மன்னர்களும் மாறவர்மன், சடையவர்மன் என்னும் பட்டப்பெயர்களை மாறி மாறித் தரித்து வந்தனர். இம் முறைகளினால் இன்ன அரசருக்குப் பின் இன்ன அரசர் பட்ட மெய்தினர் என்பதை எளிதில் அறிந்துகொள்ள முடிகிறது. வர்மன் - அரசன்.

உடையார்: சோழ அரசர்கள், சாசனங்களில் பெரும்பாலும் உடையார்' என்றே குறிக்கப்படுவர். இது இறைவனுக்குரிய பெயர். அரசரும் தெய்வ அமிசமுடையவராதலின் 'உடையார்' எனப்பட்டனர். சில சாசனங்களில் அவர்கள் "சக்கரவர்த்திகள்" என்றும், 'கோநேர் இன்மை கொண்டான்' என்றும் குறிக்கப்பட்டுள்ளனர். 'திரிபுவனச் சக்கரவர்த்திகள்' என்று அழைக்கப்பட்டது, இராசேந்திரனுக்குப் பிற்பட்ட காலத்திலாகும். ஸ்ரீராசராச தேவர்க்கு யாண்டு - இராசராச தேவர் ஆட்சியின் ஆண்டு; ஸ்ரீ என்பது, சில விசேடித்த பெயர்களுக்குமுன் அதன் சிறப்பைக் குறிப்பதற்கு வழங்கும் ஒரு வட சொல். திரு என்பது அதற்கு நேர் தமிழ் மொழி பெயர்ப்பு.

இதுவரை சொல்லப்பட்டது இராசராசன் மெய்க்கீர்த்தி. இதில் இராசராசன் காந்தளூர்ச்சாலை கலமறுத்தது, வேங்கை நாடு, கங்கபாடி, தடிகைபாடி, நுளம்பபாடி, குடமலை நாடு, கொல்லம், கலிங்க நாடு, இரட்டபாடி, பழந்தீவு, பாண்டிய நாடு ஆகியவற்றை வென்றது முதலிய போர்ச்செயல்கள் குறிக்கப்பட்டுள்ளன.

யாண்டு உ௰௯ ஆவது: இருபத்தொன்பதாவது ஆண்டு; இது இராசராசன் ஆட்சியின் இறுதி ஆண்டாகும்.

ஐயங்கொண்ட சோழ மண்டலம்: சயங்கொண்ட சோழன் என்பது இராசராசனுக்குரிய பட்டப் பெயர்களில் ஒன்று: அப்பெய

காலியூர்க் கோட்டத்துத் தனியூர் உசாலாகிய ஸ்ரீ விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலத்தின் மேலைப் பெருவழியில் ஸ்ரீ ராஜராஜதேவர் திரு நாமத்தால்[12] கிணறுந் தொட்டியும் சமைப்பித்தான் உடையார் ஸ்ரீ ராஜராஜ தேவர் பணிமகன்,

---

ரால் தொண்டை நாடு 'சயங்கொண்ட சோழ மண்டலம்' எனப் பட்டது.

இராசராசன் காலத்திலும், அவன் மகன் இராசேந்திரன் காலத்திலும், சோழ இராச்சியம் ஒன்பது மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவை சோழ மண்டலம், சயங்கொண்ட சோழ மண்டலம் (தொண்டை நாடு), இராசராச சோழ மண்டலம (பாண்டிய நாடு), மும்முடிச் சோழமண்டலம் (இலங்கை நாடு), முடிகொண்ட சோழ மண்டலம் (கங்கவாடி), நிகரிலி சோழ மண்டலம் (நுளம்ப பாடி), வேங்கை மண்டலம் (வேங்கி நாடு), மலை மண்டலம (சேர நாடு), அதிராசராச மண்டலம் (கொங்கு நாடு) என்பன. ஒவ்வொரு மண்டலமும் பல வள நாடுகளாகவும், ஒவ்வொரு வளநாடும பல நாடுகளாகவும் பிரிக்கப்பட்டிருந்தன. நாடுகளில் சில கூற்றங்கள் எனவும் வழங்கி வந்தன. ஒவ்வொரு நாடும் சில தனியூர்களாகவும, பல சதுர்வேத மங்கலங்களாகவும பிரிக்கப்பட்டிருந்தன. தொணடை மண்டல மட்டும் பழைய முறைபபடி இருபதது நானகு கோட்டங்களாகவே பிரிககப்பட்டிருந்தது.

காலியூர்க் கோட்டம்: தொண்டை மண்டலத்து இருபத்து நான்கு கோட்டங்களுள் இது ஒன்று. தனியூர் உசால்: தனலுட்சியை யுடைய பெருநகர்; இது பல சிற்றூர்களைக் கொணடிருக்கும (A Village forming its own subdivision).

ஸ்ரீ விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலம்: இது ஒரு தனியூர் உசால; சயங்கொணட சோழ மணடலத்துள்ள காலியூரக் கோட்டத்தைச் சேர்ந்தது. சதுர்வேதி மங்கல மென்றமையின், இது அந்தணர் குடியிருக்கு மிடமெனபது வெளிப்படை. இவ்வூர் இப்பொழுது உக்கல் எனற பெயரோடு செஙகலபட்டு ஜில்லாவிலுள்ள மாமணடூரையடுத்துக் காணப்படுகிறது.

மேலைப் பெரு வழியில் - மேற் றிசைக்கண் ணுள்ளதான பெரும் பாதையில்.

திரு நாமத்தால் - பெயரால்.

சமைப்பித்தான் - அமைத்தவன்; பணிமகன் - வேலைக்காரன்.

சோழ[11] மண்டலத்து தென்கரை நாட்டு நித்தாவிநோத வள நாட்டு ஆவூர்க் கூற்றத்து ஆவூருடையான் கண்ணனாரூரன். இவனே ஸ்ரீராஜராஜ கிணற்றில்[13] தொட்டிக்கு நீர் இறைப் பார்க்கு அருமொழிதேவன்[14] மரக்காலால் நிசதம் நெல் ஐ

---

சோழ மண்டலம்; இது தஞ்சாவூர், திரிச்சிராப்பள்ளி சில்லாக் களைத் தன்பால் கொண்டது; சோழ இராச்சியத்தின் ஒன்பது மண் டலங்களில் ஒன்று; இராசேந்திர சிங்க வளநாடு, இராசாச்ரய வள நாடு, நித்த விநோத வளநாடு, சத்திரிய சிகாமணி வளநாடு, உய்யக் கொண்டான் வளநாடு, அருண்மொழித் தேவ வளநாடு, கேரளாந்தக வளநாடு, இராசராச வளநாடு, பாண்டிய குலாசனி வளநாடு என ஒன்பது வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இவ்வள நாடுகளின் பெயர்களெல்லாம் இராசராச சோழனின் இயற்பெயரும் பட்டப் பெயர்களுமேயாம்.

தென்கரை நாடு: இது நித்தா விநோத வளநாட்டின் மற்றொரு பெயர் என்று கருத இடம் தருகிறது. நித்தா விநோத வளநாடு: நித்தா விநோதன் என்ற இராசராசன் பட்டப்பெயரால் பெயர் பெற்ற வளநாடு இது; இது சோழ மண்டலத்தைச் சேர்ந்தது.

ஆவூர்க்கூற்றம்: வளநாட்டின் பிரிவான நாடுகளில் சில கூற் றங்கள் எனவும் அழைக்கப்படுமாதலின், இது நித்தா விநோத வள நாட்டின் ஒரு கூறு எனலாம்.

கண்ணனாரூரன்; இராசராசனுடைய பணிமகன்; இவன் இயற் பெயர் கண்ணன் என்பது. இவனுக்குச் சொந்தவூர் சோழ மண்ட லத்துத் தென்கரை நாட்டு நித்தாவிநோத வளநாட்டு ஆவூர் கூற்றத்தி லுள்ள ஆவூராகும். ஆவூர் என்பதே ஆரூர் என்று மருவி, இவன் 'கண்ணன் ஆரூரன்' என்று அழைக்கப்பட்டான் போலும். இராச ராசனது ஆட்சியின் இருபத்தொன்பதாவது ஆண்டில் அவன் பெய ரால் ஸ்ரீ விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலம் என்னும் பெருநக ரின் மேலைப் பெருவழியில் இவன் ஒரு கிணறும் தொட்டியும் அமைத்து அதிலிருந்து நாள்தோறும் நீர் வார்ப்பதற்கு ஏற்பாடு செய்தான் என்று தெரிகிறது.

அருமொழி தேவன் மரக்கால்: இராசராசன் இயற்பெயர் அருண் மொழித் தேவன் என்பது. அப்பெயரால் அவன் அரண்மனை மரக் கால் 'அருண் மொழித்தேவன் மரக்கால்' எனப்பட்டது. அதற்கு மற்றொரு பெயர் 'இராகேசரி மரக்கால்' என்பது.

உ ௩ ஆக, திங்கள் சா க்கு நெல் ஐ ௩ ௰ [illegible] ம், ஸ்ரீ ராஜ ராஜன் தண்ணீ ரட்டுவார்க்கு நிசதம் நெல் ஐ உ ௩ ஆக, திங் கள் சா க்கு நெல்[15] ௩ ௰ [illegible] ம், இப்பந்தலுக்கு குசக்கலம் இடுவார்க்கு திங்கள் க க்கு நெல்[15] [illegible] ஆக, திங்கள் சா க்கு நெல்[15] ந [illegible] ம், ஸ்ரீராஜராஜன் கிணற்றுக்கும் தொட்டிக் கும் சேதத்துக்கும் ஆட்டாண்டுதோறும் புதுக்குப்புறமாக வைச்ச நெல்[15] உ [illegible] ; ஆக ஐ சா௰சா [illegible] . இந் நெல்லுக்கு இவன் பக்கல் இவ்வூர் ஸபையோம் இறை திரவி யமும் கிரய திரவியமும் கொண்டு இறை இழிய்ச்சி............

(பாட பேதம்) 1. போல் 2. மனக்கொள்க் 3. காந்தளூர்ச்சாலை

---

தொட்டிக்கு......... ஆக ஐ சா௰சா [illegible] - தொட்டிக்கு நீர் இறைப்பார்க்கு நாளொன்றுக்கு 2 குறுணியாக 6 திங்களுக்கு 30 கலம் நெல்லும், நீர் அட்டுவார்க்கு நாளொன்றுக்கு 2 குறுணியாக 6 திங்களுக்கு 30 கலம் நெல்லும், குசக்கலம் இடுவார்க்கு திங்கள் ஒன்றுக்கு இரு தூணியாக 6 திங்களுக்கு 4 கலம் நெல்லும், ஆண்டு தோறும் புதுக்குப்புறம் செய்வார்க்கு 2 கலம் 2 தூணி நெல்லுமாக மொத்தம் 66 கலம் 2 தூணி நெல். நிசதம் - நாள்தோறும்; ஐ - படி; ௩ - குறுணி; திங்கள் மாதம்; [illegible] - கலம்; அட்டுவார் - வாரப் பார்; குசக்கலம் இடுவார் - பானை வனைந்து கொடுக்கும் குயவர்; [illegible] - 2 தூணி அல்லது 8 குறுணி.

கிணற்றுக்கும் தொட்டிக்கும் சேதத்துக்கும் - கிணறு தொட்டி ஆகியவைகளின் சேதத்துக்கு. ஆட்டாண்டுதோறும் - ஆண்டு தோறும்; புதுக்குப்புறமாக—பழுது பார்ப்பதற்காக; வைச்ச-குறித்த.

இவன் பக்கல் - கண்ணனாரூரனிடத்து; இவ்வூர் ஸபையோம்: ஸ்ரீ விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலமென்னும் பெருநகர் சபை யினர் இவர்கள் பொது மக்களால் ஆண்டுதோறும் தெரிந்தெடுக் கப்பட்ட ஐம்பெரும் குழுவினராவர். குளம், தோட்ட முதலிய பொது விடயங்கள் இவர்கள் மேற் பார்வையில் இருந்து வந்தன. ஊரார்ச்சபையில் நடைபெறுவனவற்றை எழுதுபவன் 'மத்தியஸ்தன' எனப்பட்டான். 'கரணத்தான' என்று அவனை அழைப்பதுமுண்டு.

இறை திரவியம் - வரிப்பொருள்; கிரய திரவியம் - கிரயப் பொருள். இறை - வரி (Revenue); இறையிழிய்ச்சி - வரியின்றி யாக்கி (having exempted from taxes).

4. நளம்ப பாடியுந் தடிகை பாடியும் 5. மூன்னிர்ப் 6. தண்டாற்க் 7. தொழுதகை 8. யாண்டெ 9. ஸ்ரீ கோ ராஜகேஸரி வர்மரான 10. ஸ்ரீ ராஜராஜ தேவர்க்கு 11. சோள 12. திருநாமத்தால்க் 13. கிணற்றில்த் 14. அருண்மொழித்தேவன் 15. நெல்லு.

---

## 2. திருப்பதியம்.

### முகவுரை

திருப்பதியம் = திருப்பதிகம்; அதாவது தேவாரம். தஞ்சை இராசராசேசுவரர் கோயிலில் தேவாரம் பாடுதற்கு ஏற்பட்ட சாசனம் 'திருப்பதியம்' என்று பெயர் பெற்றது. இது தஞ்சாவூர் இராசராசேசுவராலயத்து வடக்குச் சுற்று புறச் சுவரின் வெளிப்பக்கத்தில் காணப்படுகிறது.

இதில் இராசராசசோழனது ஆட்சியின் இருபத்தொன்பதாவது ஆண்டுக்கு முன்பிருந்தே தஞ்சை இராசராசேசுவரர் கோயிலில் திருப்பதியம் பாடுதற்கு நியமிக்கப்பட்ட நாற்பத்தெட்டு பேர்களுக்கும், உடுக்கை, கொட்டிமத்தளம் தட்டும் இருவருக்கும் நாள்தோறும் கொடுக்கப்பட்டு வந்த நெல் † முதலிய விபரம் கூறப்படுகிறது. கோயில்களில் தேவாரம் பாடும் வழக்கம் இராசராசன்காலத்தி லிருந்தே இருந்துள்ளதென்று இதனால் தெரிகிறது.

இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 1014 ஆம் ஆண்டு என்னலாம்.

### இராசராசன்: மெய்க்கீர்த்தி.

ஸ்வஸ்தி ஸ்ரீ —

திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந்

---

* இது தென்னிந்திய சாசனத் தொகுதிகளில் இரண்டாவது தொகுதியின் மூன்றாவது பகுதியைச் சேர்ந்தது.

† ஒவ்வொருவருக்கும் நாள்தோறும் மூன்று குறுணி நெல் கொடுக்கப்பட்டது.

ஸ்வஸ்தி ஸ்ரீ: இது சாசனங்களில் மங்கலம் குறித்து வரும் வட மொழித் தொடர்.

திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்: இராசராசன் சாசனத்தில் வரும் மெய்க்கீர்த்தியின் தொடக்கம் இது.

தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொளக் [1]
காந்தளூர்ச் சாலைக் [2] கலமறுத் தருளி
வேங்கை நாடுங் கங்க பாடியுந்
தடிகை பாடியும் நுளம்ப பாடியுங்
குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமும்
முரட்டொழிற் [3] சிங்கள ரீழமண் டலமும்
இரட்ட பாடி ஏழரை யிலக்கமும்
முந்நீர்ப் [4] பழந்தீவு பன்னீரா யிரமுந்
திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்டதன்
னெழில்வள ரூழியு ளெல்லா யாண்டுந்
தொழுதக விளங்கும் யாண்டே செழியரைத்
தேசுகொள் கோராச கேசரி [5] வர்மரான
உடையார் ஸ்ரீராசராச தேவர்க்கு [6] யாண்டு —

---

காந்தளூர்ச்சாலைக் கலமறுத்து: இதற்குக் கடற்றுறைக் கண்ணதாகிய காந்தளூரில் உண்ணும் சாலைக்கண் நாடோறும் உண்பார் இத்துணையரென உண் கலங்களை வரையறுத்து எனப் பொருள் கொள்வர் ஆராய்ச்சியாளர். அவர் 'காந்தளூர்ச்சாலை கலமறுத்து' என்ற பாடம் தகுதியுடையதன்று என்பர்.

வேங்கை நாடு: இது கீழைச்சாளுக்கிய நாட்டிற்குத் தலைநகர் என்று கூறுவர் திரு. L. உலகநாதபிள்ளையவர்கள். கங்க பாடி: கங்கர் என்ற பல்லவ வகுப்பினர் ஆண்ட இடமாதல்பற்றி இது இப் பெயர் பெற்றதென்பர்.

தடிகை பாடி: இது கங்கபாடிக்கும் நுளம்ப பாடிக்கும் இடையிலுள்ள தோர் நாடு; இதனைத் 'தடிகை வழி' என்றும் கூறுவர்.

குடமலை நாடு: இதனைக் கொங்காள்வார் என்னும் மரபினர் ஆண்டனர். கலிங்கம்: கோதாவரி யாற்றுக்கும் மகா நதிக்கும் இடையிலுள்ள நாடு; கீழைச் சாளுக்கியருக்கு வாழ்விடம்; இப்பொழுது வட சர்க்காரி லிருப்பது.

இரட்டபாடி ஏழரையிலக்கம்: மகாராட்டிய வகுப்பினரான இராஷ்டிரகூடர் ஆண்ட இடம் இது என்பர். ஏழரையிலக்கம் என்றது, அந்நாட்டின் ஆண்டு வருவாய்; நாட்டின் வருவாயையும் உடன் சேர்த்துச் சொல்லுதல் பண்டை நாளைய வழக்கு போலும்.

இராசகேசரி வர்மன், இராசராசன்: இவை இராசராசனுக்குரிய பட்டப்பெயர்கள்; இவனது இயற்பெயர் 'அருண்மொழித் தேவன்' என்பது.

## செய்தி

இருபத்தொன்பதாவது வரை உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உடையார்க்குத் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்ய உடையார் ஸ்ரீராஜராஜதேவர் குடுத்த பிடாரர்கள் நாற்பத்தெண்மரும், இவர்களிலே நிலையாய் உடுக்கை வாசிப்பான் ஒருவனும், இவர்களிலே நிலையாய்க் கொட்டிமத்தளம் வாசிப்பான் ஒருவனும் ஆக ஐம்பதின்மர்க்குப் பேரால் நிசதம் நெல்லு முக்குறுணி நிவந்தமாய் ராஜகேசரியோ டொக்கும் ஆடவல்லான் என்னும் மரக்காலால் உடையார் உள்ளூர்ப் பண்டாரத்தே[7] பெறவும். இவர்களில் செத்தார்க்கும் அறுதேசம் போனார்க்குந் தலைமாறு அவ்வவர்க்கு அடுத்த முறை

---

இருபத்தொன்பதாவது வரை - இருபத்தொன்பதாவது முடிய; உடையார் - சுவாமி; ஸ்ரீ ராஜராஜீஸ்வர முடையார்க்கு - தஞ்சை இராசராசேசுவர சுவாமிக்கு.

திருப்பதியம் - திருப்பதிகம், தேவாரம். விண்ணப்பம் செய்ய - பாட; உடையார் ஸ்ரீராஜராஜதேவர் - இராசராச சோழன்; குடுத்த - ஏற்படுத்திய; பிடாரர் - இசைவல்லார் (musicians); பிடாரர் என்பது, இற்றை நாளையில் பாம்பு பிடிப்பாரைக் குறிக்கும் பெயராக வழங்குதலின், அது பட்டாரகரின் மரூஉப் பெயராகிய படாரர் போலும் என்று கருதுவர் திரு L உலகநாதபிள்ளையவர்கள்.

உடுக்கை, கொட்டி மத்தளம்: இவை இரண்டும் அக்கால இசைக் கருவிகள்; தஞ்சை இராசராசேசுவர ராலயத்தில் தேவாரம் பாடும் போது இசைக்கப்பட்டன வாசிப்பான் - இசைப்பான்.

பேரால் - பேர் போக; நிசதம் - நாள் ஒன்றுக்கு (per day); முக்குறுணி - மூன்று குறுணி; நிவந்தம் - வேலைக்கூலி.

ராஜகேஸரியோ டொக்கும் ஆடவல்லான் என்னும் மரக்கால்: இராசகேசரி, ஆடவல்லான் இரண்டும் இராசராசன் காலத்து முகத்தலளவைகள்; இராசகேசரி, அரண்மனை அளவை; இதற்கு 'அருண்மொழித்தேவன் மரக்கால்' என்றும் பெயர் உண்டு. ஆடவல்லான், இராசராசேசுவராலயத்து அளவை. அக்காலத்தில் கோயிலுக்கும், நாட்டிற்கும் தனித்தனி அளவைகள் இருந்தன. ஒக்கும்-ஒத்ததான (which is equal to); உடையார் உள்ளூர்ப் பண்டாரம்: அரசன் நகரத்துக் களஞ்சிய சாலை (city treasury); உடையார்-இராசராசன்.

அறுதேசம் போனார் - ஊர்விட்டுப் போனவர்; அறுதேசம் - அயல் தேசம். தலைமாறு - பதிலாக (instead); அடுத்த முறை கடவார் - நெருங்கிய இனத்தவர் (the nearest relation).

கடவார் அந்நெல்லுப் பெற்றுத் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்யவும். அவ்வவர்க்கு அடுத்த முறை கடவார் தாந்தாம் யோக்யர் அல்லாது விடில் யோக்யராயிருப்பாரை ஆளிட்டுத் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்வித்து அந்நெல்லுப் பெறவும். அவ்வவர்க்கு அடுத்த முறை கடவாரின்றி யொழியில் அந்த நியாயத்தாரே யோக்யரா யிருப்பாரைத் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்ய இட்டு, இட்ட அவனே அவ்வவர் பெறும் படி நெல்லுப் பெறவும். ஆக இப்படி உடையார் ஸ்ரீராஜராஜதேவர் திருவாய் மொழிந்தருளினபடி கல்லில் வெட்டியது. பாலன் திருவாஞ்சியத் தடிகளான ராஜ ராஜ பிச்சனான சதாசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி.

---

விண்ணப்பம் செய்யவும் - முறையாகப் பாடவும்; யோக்யர் - தகுதியுடையவர்; ஆளிட்டு - தெரிந்தெடுத்து; ஒழியில் - நீங்கினால்.

அந்த நியாயத்தார் - நியமனம் செய்பவர் (incumbents of such appointments). இட்டு - ஏற்படுத்தி; அவ்வவர் பெறும் படி நெல்லு - அவரவர் பெறும் படிநெல்.

உடையார் ஸ்ரீராஜராஜதேவர் திருவாய் மொழிந்தபடி: இராசராசதேவர் கட்டளைப்படி; அதாவது தஞ்சை இராசராசேசுவரர் கோயிலில் திருப்பதியம் படிக்கும் நாற்பத்தெட்டு பேர்களும், நிலையாய் உடுக்கை, கொட்டி மத்தளம் வாசிப்போர் இருவரும் ஆக ஐம்பதின்மரும் நாள் ஒன்றுக்குத் தனித்தனி முக்குறுணி நெல் கூலியாக உள்ளூர்ப் பண்டாரத்திலே ஆடவல்லான என்னும் மரக்காலால் பெறவேணுடுமென்பதும், அவர்களில் செத்தார்க்கும் அனுமதேசம் போனார்க்கும் பதிலாக அடுத்த முறை கடவார் அந்நெல் பெற்றுத் திருபபதியம் பாடவேண்டுமென்பதும், அடுத்த முறை கடவார் தகுதியில்லாவிடில் தகுதியுடையவரைத் தெரிந்தெடுத்து திருப்பதியம் பாடி அந்நெல் பெறச்செய்ய வேண்டுமெனபதும், அடுதத முறை கடவார் இல்லையாயின நியாயத்தாரே தகுதியுடைய வேற்றவரை நியமித்துத் திருப்பதியம் பாடி அந்நெல் பெறச்செய்ய வேண்டுமென பதுமாகும்.

கல்லில் வெட்டியது: அரசன் சொல்ல கல்லில் வெட்டியது என்பதால், அக்காலத்தில அரசன் கட்டளை கல்லில் வெட்டப்பட்டு யாவரும் அறியும்படி இருக்கும் என்பது. அதுவே பிறகாலத்தில 'கல்வெட்டு' எனப்பட்டது போலும்.

பாலன் திருவாஞ்சியத் தடிகள்: இவர் பெயர் ராஜராஜ பிச்சனான சதாசிவன் என்பது. திருப்பதியம் பாடிய நாற்பத்தெண்மரில் இவர் ஒருவர். இவரைத் திருவாஞ்சியத்தடிகள் எனபதால், இவர் திருவாஞ்சியம் சிவன் கோயிலைத் துள்ளவர் என்று தெரிகிறது. இக்கோயில் தஞ்சாவூர் சில்லா நானிலம் தாலூகாவிலுள்ளது.

(இப்படி அந்த ஐம்பதுபேர்களின் பெயர்களும் வெட்டப் பட்டுள்ளன.)

(பாட பேதம்) 1. மனைக்கொள்க் 2. சாலே 3. முாட்டெழிற் 4. முன்னீர்ப் 5. கோராஜகேஸரி 6. ஸ்ரீ ராஜ ராஜ தேவர்க்கு 7. பண்டாரத்தேய்.

---

## 3. ஸ்ரீ ராஜேந்திரசோழதேவர் சாசனம். *

### முகவுரை

ஸ்ரீ ராஜேந்திரசோழதேவர் என்றது, இராசராசன் மகனை பரகேசரி முதலாம் இராசேந்திரசோழனைக் குறிக்கும். அவன் பெயரால் செய்யப்பட்ட தானத்தைப் பற்றிய சாசனம் 'ஸ்ரீ ராஜேந்திரசோழதேவர் சாசனம்' என்று பெயர் பெற்றது. இச் சாசனம் தஞ்சை இராசராசேசுவர சுவாமி பெரிய கோயில் நடுவிடத்து மூலதானத்தின் தெற்குச் சுவரில் காணப்படுகிறது.

இராசேந்திர சோழன், தன் ஆட்சியின் பத்தொன்பதாம் ஆண்டு, இருநூற்று நாற்பத்திரண்டாம் நாள் அக்கோயிலில் பூசை செய்து வந்த உடையார் சர்வசிவ பண்டிதற்கும், அவருடைய சீடர்களுக்கும் ஆசாரியபோகமாக ஆண்டுதோறும் கொடுத்துவந்த இரண்டாயிரம் கலம் நெல்லைப்பற்றி இது கூறுகின்றது. இராசேந்திரனுடைய ஆட்சியின் 12 ஆம் ஆண்டுக்கும், 17 ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் அவன் கொண்ட வெற்றிகளைக் கூறி, அதனால் அவனது வரலாற்றை அறிய வைத்திருப்பதே இச் சாசனத்தின் முக்கிய செய்தியாகும்.

இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 1030 ஆம் ஆண்டு என்னலாம்.

---

* இச் சாசனம் தென்னிந்திய சாசனத்தொகுதிகளில் இரண்டாவது தொகுதியின் முதற்பகுதியைச் சேர்ந்தது.

## இராசேந்திரன் மெய்க்கீர்த்தி

ஸ்வஸ்தி ஸ்ரீ —
திருமன்னி வளர விருநில மடந்தையும்
போர்ச்சயப்[1] பாவையுஞ் சீர்த்தனிச்[2] செல்வியும்
தன்பெருந் தேவிய ராகி யின்புற
நெடிதிய லூழியு ளிடைதுறை நாடும்
தொடர்வன[3] வேலிப் படர்வன வாசியும்

---

ஸ்வஸ்தி ஸ்ரீ: இது சாசனங்களில் மங்கலம் குறித்து வரும் வடமொழித் தொடர்.

திருமன்னி வளர: இது இராசேந்திர சோழன் மெய்க்கீர்த்தியின் தொடக்கமாக வரும் தொடர். இலக்குமி அமர்ந்து விளங்க என்பது இதன் பொருள். அதாவது, செல்வம் நிரம்பி வளர என்பது.

இரு நில மடந்தையும் - பூதேவதையும் (goddess of the great earth). 'பெருநிலச் செல்வியும்' என இராசராசன் மெய்க்கீர்த்தியில் வந்திருத்தல் காண்க.

போர்ச்சயப் பாவையும்-போரில் வெற்றியைத் தரும் தேவதையும் (goddess of victory in battles). சீர்த்தனிச் செல்வியும் - கீர்த்தியில் ஒப்பற்ற தேவதையும் (the matchless goddess of fame); சீர் - கீர்த்தி; தனி — ஒப்பற்ற.

தன்பெருந் தேவிய ராகி இன்புற : நாடு, வெற்றி, புகழ் இவைகளைத் தனக்குரிய தேவியாகக்கொண்டு இன்பமடைய.

### ஆரம்ப காலப்போர் — வரி: 4-7.

இடைதுறைநாடு, வனவாசி, கொள்ளிப்பாக்கை, மண்ணைக் கடக்கம் இவைகளைக் கொண்ட செய்தி இராசேந்திரனுடைய மூன்றாம் ஆண்டு சாசனமுதலே காணப்படுகின்றது. ஆதலின் இவை இராசேந்திரன் ஆட்சியின் ஆரம்ப காலப்போர் எனப்பட்டன.

இடைதுறைநாடு: இதனை 'இடைதுறைநாடு இரண்டாயிரம்' என்றும் கூறுவர். இது வடக்கே கிருஷ்ணை நதிக்கும், தெற்கே துங்கபத்திரை நதிக்கும் இடைப்பட்ட சம வெளியாகும். தற்கால இரேய்ச்சூர் சில்லாவை இப்பகுதியாகக் கூறலாம். ஊழியுள் நெடிது இயல் - ஊழிகாலம் வரை நிலையாகவுள்ள,

வனவாசி: இது தொடர்ந்த காடுகளை அரணாகக்கொண்டது; தக்கணத்தின் தென்மேற்குக் கோடியிலுள்ள குந்தளநாட்டின் தலைநகர். இப்பொழுதுள்ள கன்னடநாடே பண்டைக் குந்தளநாடா

சள்ளிச் சூழ்மதிற்[1] கொள்ளிப் பாக்கையும்[2]
நண்ணற் கருமுரண் மண்ணைக் கடக்கமும்
பொருகட லீழத் தரசர்த[1] முடியும்
ஆங்கவர் தேவிய[1] ரோங்கெழின்[3] முடியும்
முன்னவர் பக்கற் றென்னவர் வைத்த
சுந்தர முடியு மிந்திர னாரமும்
தெண்டிரை யீழ மண்டல முழுவதும்

---

கும். தொடர்வன வேலிபடர் - தொடர்ச்சியாகவுள்ள காட்டரணை யுடைய.

கோள்ளிப் பாக்கை: இதனைக் 'கொள்ளிப் பாக்கை எழாயிரம்' என்றும் கூறுவர். இது ஐதராபாத்துக்கு நாற்பத்தைந்து மைல் வடக்கிலுள்ள 'கூல் பாக்' எனனும் இடமாகும். சள்ளிச் சூழ்மதில் - சுற்றிலும் சள்ளிமரங்களை மதிலாகவுடைய. சள்ளி - ஆச்சா மரம்; ஞாழல் மரம் எனினுமாம்.

மண்ணைக் கடக்கம்:- இது ஆதியில் இராஷ்டிர கூட வேந்தர்களுக்கும், பின் மேலைச் சாளுக்கிய மன்னர்களுக்கும் தலைநகரமாயிருந்த 'மான்ய கேடம்' என்னும் நகரமாகும். நண்ணற் கரு முரண் - நெருங்குதற்கு அரிய வலிய மதிலையுடைய.

## ஈழப்போர் — வரி: 8-12.

ஈழமெக்பது, இலங்கை நாடு; இது கடல் நடுவனுள்ளது. இராசேந்திரன காலத்தில் ஈழநாட்டை ஆண்ட மன்னன் ஐந்தாம் மகிந்தன். அவன் இராசேந்திரனை எதிர்த்து, போரில் தோற்றனன். அவனுடையதும், அவன் தேவியருடையதுமாகிய முடிகளையும், ஆடை ஆபரணங்களையும, பொனமணிகளையும இராசேந்திரன் கைப்பற்றினன்; அன்றியும், சுமார் ஒரு நூற்றாண்டுக்கு முன் பாண்டிய மனனா ஈழமன்னரிடம் கொடுத்து வைத்திருந்த சுந்தர முடியையும், பாண்டியா குலத்திலே நெடுங்காலமாக இருந்துவந்த இந்திரன் ஆரத்தையும் அவனிடமிருந்து எடுத்துக்கொண்டான. இறுதியில, ஈழ மணடல முவழுதும் சோழர் வசமாயிற்று.

பொருகடல் ஈழம் - இலங்கைத் தீவு; எழில் - அழகு; முடியும் கிரீடமும்; முன்னவர் - ஈழத்தரசர்; தென்னவர் - பாண்டியர்.

எறிபடைக் கேரளன் முறைமையிற் சூடும்
குலதன மாகிய பலர்புகழ் முடியும்
செங்கதிர் மாலையும் சங்கதிர் வேலைத்
தொல்பெருங் காவற் பல்பழந்[9] தீவும்
செருவிற் சினவி யிருபத் தொருகால்
அரசுகளை கட்ட பரசு ராமன்
மேவருஞ் சாந்திமத் தீவரண் கருதி
இருத்திய செம்பொற் றிருத்தகு முடியும்

---

## மலைநாட்டுப் போர் — வரி: 13-20.

மலைநாடு என்பது, மலையும் கடலும் சூழ்தரப் பரசுராமனால் ஆதியில் அமைக்கப்பட்ட இட மென்பர்; இதனைச் 'சாந்திமத்தீவு' என்றும் கூறுவர். பழந்தீவும் இதனுள் அடங்கும். காந்தளூர்ச் சாலை, இதன் கடற்றுறைப் பட்டினங்களில் ஒன்று. இராசராசனால் செயிக்கப்பட்ட இந்நாட்டில், அமைதியை நிலைநாட்டுதற்கு இராசேந்திரன் படை எடுத்துச் சென்றான். சேரனை வென்று, அவனது முடியையும் மாலையையும் கவர்ந்தான்.

எறிபடைக் கேரளன் - சேரமன்னன்; எறிபடை - எறி ஈட்டி போன்ற படைகள்; முறைமையிற் சூடும் - பரம்பரையாக அணியும்; குலதனம் - குலத்திற்குரிய செல்வம்; அஃதாவது கிரீடம். செங்கதிர் மாலை - செங்கதிர்போல் ஒளி விடும் முத்துமாலை; செங்கதிர் - சூரியன்.

சங்கதிர் வேலைத் தோல்பெருங் காவல் - சங்கினங்கள் அதிருகின்ற கடலாகிய பழம் பெருங் காவலையுடைய; அஃதாவது, கடலைத் தனக்கு அரணாகவுடைய என்பது. பல் பழந்தீவு: இவை மேலைக் கடலில் உள்ள 'பழந்தீவு பன்னீராயிரம்' என்பது.

செருவிற் சினவி......... சாந்திமத் தீவு: போரில் கோபித்து இருபத்தோரு தலைமுறையாக அரசகுலத்தை அழிப்பதையே விரதமாகக் கொண்ட பரசுராமன் இருந்துவந்த சாந்திமத்தீவு என்பது.

செரு - போர்; கால் - தலைமுறை; கட்டுதல் - பிணித்தல்; மேவரும் - வீற்றிருந்த; அரண் கருதி யிருத்திய - பாதுகாப்பு என்று கருதி வைத்த.

பயங்கொடு பழிமிக முயங்கியில் முதுகிட்
டொளித்த சயசிங்க னளப்பரும் புகழொடு[10]
பீடிய லிரட்ட பாடி யேழரை
யிலக்கமு நவநிதிக்[11] குலப்பெரு மலைகளும்
விக்கிரம வீரர் சக்கரக் கோட்டமு

---

## மேலைச் சாளுக்கியப் போர் — வரி: 21-24.

மேலைச் சாளுக்கிய நாடு என்பது, இரட்டபாடி ஏழரையிலக்கத்தைக் குறிக்கும்; இந்நாட்டை ஆண்டுவந்த ஐந்தாம் விக்கிரமாதித்தனுடைய தம்பியான செயசிங்கன் முன்னர் இழந்த நாடுகளை சோழர் வசமிருந்து மீட்க முயன்றான். இதனால் இராசேந்திரன் இவனை 'முயங்கி' என்னுமிடத்தில் எதிர்த்துப் போரிட்டான். போரில் தோல்வியுற்ற இவன், பயமும் பழியுமுண்டாக புறங்காட்டி ஓடி ஒளிந்தான். இவன் நாடும், நவநிதிக் குவியல்களும் இராசேந்திரன் வசமாயின.

பயங்கோடு பழிமிக - பயத்தோடு பழியுமுண்டாக. முயங்கியில் முதுகிட்டு - முயங்கி என்னுமிடத்தில் புறங்காட்டி; முயங்கி என்பதை, பல்லாரி சில்லாவிலுள்ள 'உச்சங்கி துர்க்கம்' என்பர்; ஐதராபாத்து சமத்தானத்திலுள்ள "மாஸ்கி" என்பாருமுளர். முயங்கி, முசங்கி என்றும் வழங்கும்.

செயசிங்கன்: இவன் கி. பி. 1015 முதல் 1042 வரை மேலைச் சாளுக்கிய வேந்தனாக இருந்தான். பீடியல் - பெருமை மிகுந்த; நவநிதிக் குலப்பெரு மலைகளும் - நவநிதிக்குவியல்களாகிய மிகப் பெரு மலைகளும்.

## கங்கை கொண்டது — வரி: 25-46.

கங்கை கொண்டதென்றது, கங்கை நீரைக்கொண்டு வந்ததைக் குறிக்கும். இராசேந்திரன் தான் புதிதாக அமைத்த நகரையும், கோயிலையும், ஏரியையும் புனிதப் படுத்துவதற்கென்று கங்கைநீரைக் கொண்டு வர வடநாடு சென்றான்.

சக்கரக் கோட்டம்: இது விசாகப்பட்டணம் சில்லாவுக்கு மேற்கில் மத்தியமாகாணங்களிலுள்ள பஸ்தர் (Bastar) சமத்தானத்தின் தலைநகரான இராசபுரத்திற்கு எட்டு மைல் தூரத்திலுள்ள 'சித்திர கோடா' என்னும் ஊராகும். இதில் பலம் பொருந்திய வீரர் பலர் இருந்தனர் போலும். விக்கிரமம் - வலிமை.

முதிர்பட[12] வல்லை மதுரை மண்டலமும்
காமிடை வளை இய[13] நாமணைக் கோணையும்
வெஞ்சின வீரர் பஞ்சப் பள்ளியும்
பாசடைப் பழன மாசுணி தேசமும்
அயர்வில்வண் கீர்த்தி யாதிநக ரகவையிற்[14]
சந்திரன் றொல்குலத் திந்திர ரதனை[15]
விளையமர்க் களத்துக் கிளையொடும் பிடித்துப்
பலதனத் தொடுநிறை குலதனக் குவையும்
கிட்டருஞ் செறிமிளை[16] யொட்ட விஷயமும்[17]

---

மதுர மண்டலம்: இது ஒரிசாவிலுள்ள மதுபன் என்னும் சிறிய சமத்தானத்தை யொட்டிய பகுதியாகும். இதில் பழம் பெருங் கோட்டைகள் இருந்ததாகத் தெரிகிறது. முதிர்பட - முதிர்பட்ட, பழமையான; வல்லை - கோட்டை.

நாமணைக்கோணம்: இது சிறு கிராமங்கள் இடையிடையே மலிந்த பெருநகர். காம் - கிராமம்; இடைவலி-இடையிடை மலிந்த.

பஞ்சப்பள்ளி: பஞ்சவர் பள்ளி கொண்ட இடமென்பர். இங்கு வில்வீரர் பலர் இருந்தனர்! சிலை வீரர் — வில்வீரர்.

மாசுணிதேசம்: மாசுணி - பாம்பு; நாக வமிசத்தவர் ஆண்ட தேசமாதல் பற்றி இது இப்பெயர் பெற்றது போலும். இது வயல்கள் நிறைந்த இடம். பாசடை - பசுமையான இலை, பழனம - வயல்.

ஆதி நகரகவையில் - ஆதி நகரில் நடந்த போரில்; இது இந்திரரதன ஆண்டுவந்த கோசல நாட்டிற்குத் தலைநகர். அயர்வில் - சோர்வில்லாத; வண் - சிறந்த. அகவை - இடம், ஏழனுருபு.

சந்திரன் தொல்குலத் திந்திரரதன் - பழங்காலமாயுள்ள சந்திர குலத்துல தோன்றிய இந்திர ரதன் என்பது. இவனை இராசேந்திரன ஆதிநகர் என்னுமிடத்தில் எதிர்த்து, இவன் இனத்தவரோடு தப்பவிடாது பிடித்தான்; இவனது பலதனக் குவியல்களைக் கொள்ளைகொண்டான். முடிவில் இவன ஆண்ட ஒட்டவிசயமும், கோசல நாடும் சோழர் வசமாயிற்று.

களம் - போர்க்களம்; கிளை - மனைவி மக்கள் முதலியோர்.

குவையும் - குவியலும்.

கிட்டரும் செறிமிளை — நெருங்குவதற்கரிய செறிந்த காவற்காடு; ஒட்ட விசயம் - ஒட்டாதேசம்.

பூசுரர் செருஙற்[18] கோசல[19] நாடும்
தன்ம பாலனை வெம்முனை யழித்து
வண்டுறை சோலைத் தண்ட புத்தியும்
இரண சூரனை முரணறத்[20] தாக்கித்
திக்கணை கீர்த்தித் தக்கண லாடமும்
கோவிந்த சந்தன் மாவிழிந் தோடத்
தங்காத சாரல் வங்காள தேசமும்
தொடுகழற் சங்கு வொட்டல்மகி பாலனை[21]

---

பூசுரர் - அந்தணர்; கோசல நாடு - இது ஒட்டதேசத்துக்குப் பக்கத்திலுள்ள தென்கோசலம் அல்லது மகாகோசலம் என்று கூறப்படும் பூமியாகும்.

வெம்முனை - கொடியபோர்.

வண்டுறைசோலை - வண்டுகள் தங்கும் பூஞ்சோலை; தண்டபுத்தி: இதனைப் பீரார் என்று சிலரும், பீஹார் என்று வேறு சிலரும் கருதுகின்றனர். இது ஒட்டதேசத்திற்கும் வங்காளத்திற்கும் மத்தியில், சுவர்ணரேகை நதிக்கு இருகரையிலுமுள்ள நாடாக இருத்தல் வேண்டும். தண்டநாயகன் ஒருவனுக்குச் சொந்தமானதுபற்றி 'தண்டபுத்தி' எனப்பட்டது போலும். இராசேந்திரன் காலத்தில் இதனைத் தன்மபாலன் என்பவன் ஆண்டான்.

முரண் அற - வலிமை கெட.

திக்கு அணை கீர்த்தி - நான்கு திசையிலும் பொருந்திய கீர்த்தி.

தக்கண லாடம்: வங்காளத்தின் ஒரு பாகம்; இது அக்காலத்தில் 'ராடா' (Radhas) என்று பெயர் பெற்றிருந்தது. இரணசூரன் இதனை ஆண்டான்.

மா இழிந்து ஓட - குதிரையினின்றும் இறங்கி ஓட.

தங்காத சாரல் - தடைபடாது பெய்யும் மழை. வங்காள தேசம்: இது கிழக்கு வங்காளத்தைக் குறிக்கும். இதனைக் கோவிந்த சந்தன் என்பவன் ஆண்டான்.

தொடுகழல் சங்கு வொட்டல் மகிபாலன்: இவன் பதினோராம் நூற்றாண்டின் துவக்கத்தில் உத்தரலாடத்தை ஆண்டுவந்த பாலவம்சத்து அரசனாவான். தண்டபுத்தியை யாண்ட தன்மபாலனும், தக்கணலாடத்தை யாண்ட இரணசூரனும், வங்காளத்தை யாண்ட கோவிந்த சந்தனும் இவனாட்சிக்குட்பட்டு ஆண்டுவந்தனர். போர்க்

வெஞ்சமர் வளாகத்[22] தஞ்சுவித் தருளி
ஒண்டிறல் யானையும் பெண்டிர்பண் டாரமும்
நித்தில நெடுங்கட லுத்திர லாடமும்
வெறிமலர்த் தீர்த்தத் தெறிபுனற்[23] கங்கையும்
அலைகடல் நடுவுட் பலகலஞ் செலுத்திச்

---

களத்தில் இராசேந்திரனுடைய சேனையின் ஆரவாரத்தைக் கேட்ட இவன் எல்லாவற்றையும் விட்டு ஓடினான். இராசேந்திரன் இவனுடைய யானைகளையும், பெண்டிர் பண்டாரத்தையும் எடுத்துக்கொண்டு கங்கைக்கரையை அடைந்தான். தொடுகழல் சங்கு வொட்டல் - வீரக்கழலையும சங்கநாதத்தையும் உடைய.

வளாகத்து - இடத்து; ஒண்டிறல் - ஒண் திறல், மிக்க வலிமையுடைய; பெண்டிர் பண்டாரம் - பெண்களின் ஆடையாபரணங்கள்; நித்தில நெடுங்கடல் — முத்துக்களையுடைய பெரியகடல்; அழகிய கடல் எனினுமாம்.

வெறிமலர்த் தீர்த்தத்து எறிபுனற் கங்கையும்: வெறிமலர் - வாசனைமிக்க தாமரை முதலிய மலர்கள்; தீர்த்தம் - புனித நீர்; அலையாசமோதி வீசப்படும் நீர் தாமரை மலர்களுக்கிடையில் தனித் தனியே தீர்த்தங்களாயின என்பது. எறிபுனற் கங்கை - மோதி வீசப்படும் கங்கை நீர்.

## கடாரம் கொண்டது — வரி: 47-67.

கடாரம் என்பது, மலேயாத் தீபகற்பத்தின் தென்பகுதியின் மேல்கரையின்கண் உள்ள 'கெடா' என்று வழங்கப்பட்டு வரும் இடமேயாகும். இது வடமொழியில் 'கடாஹம' என்றும், தமிழ் மொழியில் 'காழகம்', 'கடாரம்' என்றும் வழங்கும். இதனையாண்டவன் 'விசயோத்துங்க வர்மன்' என்பவன்.

இராசேந்திரன் கடலில் பலகலம் செலுத்திக் கடாரம் சென்று முதலில் விசயோத்துங்கவர்மனை வாகைசூடி, அவனது யானையையும், நிதியையும், வித்யாதரத் தோரணம் முதலியவற்றையும் கவர்ந்தான். அதன் பின்னர் ஸ்ரீவிசயம், பண்ணை, மலையூர், மாயிருடிங்கம், இலங்காசோகம், மாப்பப்பாளம், மேவிலிம்பங்கம், வளைப்பந்தூரு, தலைத்தக்கோலம், மாதமலிங்கம், இலாமுரிதேசம், மாநக்கவாரம், முதலிய ஊர்களைப் பிடித்தான். இறுதியில் கடாரம் முழுவதும் அவன் வசமாயிற்று.

கலம் - மரக்கலம்.

சங்கிராம விசையோத் துங்க வர்ம[24]
னாகிய கடாரத் தரசனை[25] வாகையம்
பொருகடல் கும்பக் கரியொடு மகப்படுத்
துரிமையிற் பிறக்கிய பருநிதிப் [26]பிறக்கமும்
ஆர்த்தவ னகநகர்ப்[27] போர்த்தொழில் வாசலில்
விச்சா திரத்தோ ரணமு மொய்த்தொளிர்[28]
புனைமணிப் புதவமுங் கனமணிக் கதவமும்
நிறைசீர் விசயமுந்[29] துறைநீர்ப் பண்ணையும்[30]
வன்மலை யூரெயிற் றொன்மலை யூரும்

---

சங்கிராமவிசையோத்துங்கவர்மன் - கடாரத் தரசன் பெயர்; வாகை - வெற்றி; போருகடல் கும்பக் கரி - பொருகின்ற கடல் போல் முழங்கும் மத்தகக் கரி.

உரிமையில் பிறக்கிய பருநிதி - முறையாகச் சேர்த்த பெருஞ் செல்வம். பிறக்கம் - குவியல் (heap).

ஆர்த்து - கழுந்து; அகநகர் - தலைநகர்; போர்த் தொழில் வாசலில் - போர்செய்யும் வழியிடத்து.

விச்சாதிரத் தோரணம் — போர்த்தொழில் வாசல் வளைவின் பெயர்; மொய்த்து ஒளிபுனை - செறிந்த பிரகாசம் பொருந்திய; புதவம் - கதவு.

சீர் விஷயம்: சுமத்திரா தீவிலுள்ள 'பாலம்பாங்' என்னும் இராசதானியாகும். சீர் - திரு; விசயம் - நாடு; அதாவது திருநாடு என்பது; விச்சாதிரத் தோரணம், புனைமணிப்புதவம், கனமணிக்கதவம் நிறை ஸ்ரீ விஷயம் என்றுகொள்க.

துறைநீர்ப்பன்னை: நீர்த்துறைகளையுடைய பன்னை என்பது; இது சுமத்திராதீவின் கீழ்கரையிலுள்ள பனி (pani) அல்லது பனை (panei) என்னுமூராகும்.

வன்மலை யூரெயிற் றென்மலை யூர்: வலிய மலையூ என்னும் நதியை அரணாகக்கொண்ட பழமையான மலையூர் என்பது. இது சுமத்திரா தீவின் கீழ்கரையி லிருந்தது என்று சிலரும், மேல்கரை யிலிருந்தது என்று வேறு சிலரும், மலேயா தீபகற்பத்தின் தென் பகுதியில் இருந்தது என்று மற்றோரும் கூறுகின்றனர். ஜம்பி (Jambi)என்னும் நாடே, இது என்று டச்சு ஆராய்ச்சியாளர் கூறுவர்.

ஆழ்கட லகழ்சூழ் மாயிரு டிங்கமும்
கலங்கா வல்வினை யிலங்கா சோகமும்
கோப்புறு[31] நிறைபுனல் மாப்ப[32] பாளமும்
காவலம் புரிசை மேவிலிம் பங்கமும்
விளைப்பந் தூருடை[33] வளைப்பந் தூரும்[34]
கலைத்தக் கோர்புகழ் தலைத்தக் கோலமும்
தீதமர்[35] பல்வினை[36] மாதமா[37] லிங்கமும்
கலாமுதிர்[38] கடுந்திற லிலாமுரி தேசமும்
தேனக்க வார்பொழில் மாநக்க[39] வாரமும்

---

மாயிருடிங்கம்: மலேயா தீபகற்பத்தின் மத்தியபாகத்தில் கடலையடுத்துள்ளது. ஆழ்கடலகழ் - ஆழமான கடலாகிய அகழி.

இலங்கா சோகம்: மலேயா தீபகற்பத்தில், 'கெடா' என்னுமிடத்திற்குத் தெற்கேயுள்ளது. கலங்கா வல்வினை - நிலை கலங்காத வன்மையுடைய.

மாப்பபாளம்: இது மகாவமிசத்தில் 'பப்பாளமா' என்று குறிக்கப்பட்டுள்ளது. இது 'க்ரா' பூசந்திக்குப் பக்கத்தில் இருந்தது.

மேவிலிம்பங்கம், வளைப்பந்தூரு: இவை இருந்த இடம் இப்பொழுது தெரியவில்லை. காவலம்புரிசை - காவல் நிறைந்த கோட்டையையுடைய; விளைப்பந்தூரு - வளைப்பந்தூரையடுத்த ஒரு சிற்றூர் போலும்.

தலைத்தக்கோலம்: கிரேக்க ஆசிரியரான தாலமி என்பவர் இதனை 'தகோலா' என்று குறித்துள்ளார். இது 'கரா' பூசந்திக்குத் தெற்கே, மலேயா தீபகற்பத்தின் மேல் புறமாக இருந்தது. இப்போது 'தகோபா' (Takopa) என்று வழங்கப்படுவது இதன் தலைநகராகும். கலைத் தக்கோர் - கலைவல்லார்.

மாதமர் லிங்கம்: மலேயாவின் கீழ்ப்பிரதேசத்தில் 'க்வாண்டன்' நதியின் முகத்துவாரத்திலுள்ள தெமிலிங்(Temiling)அலலது தெம்பலிங் (Tembeling) என்று சொல்லப்படும இடமாகும். தீதமர் வல்வினை - தீமை நிறைந்த கொடியவினை.

இலாமுரி தேசம்: இது சுமத்திரா தீவின் வடபகுதியில் உள்ள நாடாகும். இதனை 'லாமுரி' என்றும், 'லம்ப்ரி' (Lambri) என்றும கூறுவர். கலா முதிர் - கலை நிரம்பிய; கடுந்திறல - மிக்க திறமை.

மாநக்கவாரம்: இது இப்பொழுது 'நிக்கோபார் தீவு' என்று வழங்குகிறது. தேனக்க வார் பொழில் - தேனிறைந்த நீண்டசோலை.

தொடுகடற்[10] காவற்[11] கடுமுரட் கடாரமும்
மாப்பொரு தண்டாற் கொண்ட கோப்பர
கேசரி வன்ம ரான[12] உடையார்
ஸ்ரீராசேந் திரசோழ தேவர்க்கு யாண்டு -

## செய்தி

௰௯ ஆவது, நாள் இருநூற்று நாற்பத்திரண்டினால் உடையார் ஸ்ரீ ராஜேந்திர சோழதேவர் கங்கைகொண்ட சோழபுரத்துக் கோயிலினுள்ளால் முடிகொண்ட சோழன் திருமாளிகையில் வடபக்கத்து தேவாரத்துச் சுற்றுக் கல்லூரியில் தானஞ் செய்தருளா இருந்து, உடையார் ஸ்ரீ ராஜராஜ ஈஸ்வரமுடையார கோயிலில் ஆசார்ய போகம நம் உடையார்

---

தொடுகடல் காவல் - ஆழமான கடலாகிய காவலையுடைய; கடு முரண் – கடிய முரட்டுக் குணமுடைய.

மா பொரு தண்டு - பெரும் போரைச் செய்யும் சேனை.

யாண்டு ௰௯ ஆவது நாள் இருநூற்று நாற்பத்திரண்டினால்: 19ஆம் ஆண்டு, 242ஆம நாள் எனபது. சாசனஙகளில நாள் குறிக்குமபாது பெருமபாலும அககாலப் பேரரசது ஆடசியின ஆணடு குறிபபது வழககம. சில சாசனஙகளில ஆட்சியின ஆணடோடு நாளும உடன குறிககப்பட்டிருக்கும. அப்படிப்பட்ட சாசனங்களில இதுவும ஒனறு.

கங்கை கொண்ட சோழபுரம்: இராசேந்திர சோழன் அமைத்த பெரிய நகரம். இதைப் புனிதபபடுத்த நீர் கொண்டுவருவதற்கே அவன வடநாட்டு யாததிரை செய்து பல நாடுகளைச் செயித்தான். இஃது, இப்பொழுது திருசசிராப்பளளி சில்லாவிலுள்ள உடையார் பாளையம தாலூகாவில சிறு ஊராகக் காணப்படுகிறது.

கோயிலினுள்ளால் - அரண்மனையினுள்; முடிகொண்ட சோழன் திருமாளிகை - இராசேந்திரன் பட்டப்பெயர்களில் ‘முடிகொணட சோழன்’ என்பது ஒன்று. அப்பெயரால் கட்டிய அரணமனை இது வாகும்.

தேவாரத்துச் சுற்றுக் கல்லூரி: இராசேந்திரசோழன் அரண்மனைப் பூஙகாவனததைச சுற்றியிருந்த கல்லூரி (That College which surrounds the King's flower garden).

தானம் செய்தருளா இருந்து - தருமம் செய்து; ஆசாரிய போகம் - ஆசாரியராகவிருந்து அநுபவிக்கும் செல்வம்.

ஸர்வ்வ சிவ பண்டித சைய்வ் வாசார்ய்யர்க்கும், இவ்வுடையார் சிஷ்யரும் பிரசிஷ்யருமாய் ஆர்ய்ய தேசத்தும், மத்திய தேசத்துத்தான் கௌடதேசத்துத்தான் உள்ளாய் யோக்யாயிருப்பார்க்கே ஆட்டாண்டுதோறும் இத்தேவர் கோயிலில் ஆடவல்லானென்னும் மரக்காலால் உள்ளூர்ப் பண்டாரத்தே நிறைச்சளவாக இரண்டாயிரக் கலநெல்லு ஆட்டாண்டு தோறும் சந்திராதித்தவல் பெறத் திருவாய் மொழிந்தருளத் திருமந்திரி ஓலை செம்பியன் விழுப்பரையன் எழுத்தினால்...த் திருவாய்க் கேழ்விப்படி கல்லில் வெட்டித்து இது. இவ்வம்

---

உடையார் சர்வசிவ பண்டிதர்: 'உடையார்' என்ற பெயர் கடவுளுக்கும், கடவுளையொத்த அரசருக்கும், கடவுளடியார்க்கும் வழங்கும் பெயராகக் காணப்படுகிறது. சர்வசிவ பண்டிதர் தஞ்சைப் பெரிய கோயிலில் பூசைசெய்து வந்தவர். இராசேந்திரனுக்கு ஆசாரியராய் இருந்தார். இவரும், இவருடைய சீடர்களும் எந்த நாட்டிலிருந்தாலும் ஆசாரிய போகமாய்க் கொடுக்கும்படியாக ஆண்டு தோறும் இரண்டாயிரம் கலம் நெல் அளப்பதற்கு இராசேந்திரன் தன் அரண்மனையில் இருந்தபடியே ஆணை பிறப்பித்தான்.

இவ்வுடையார் சிஷ்யரும் - சர்வசிவபண்டிதருடைய சீடரும்; பிறசிஷ்யருமாய் - சர்வசிவபண்டிதர் சீடர்களின் சீடர்களுமாய்.

ஆர்ய்ய தேசத்தும், மத்திய தேசத்துத்தான், கௌட தேசத்துத்தான் - ஆரியதேசம், மத்திய தேசம், கௌட தேசம் என்பது. இவைகளில் சர்வசிவபண்டிதருடைய சீடர்களிருந்தனர்.

இத்தேவர் கோயிலில் - இராசேந்திர சோழதேவர் அரண்மனையில்; நிறைச்சளவாக - நிரம்பிய அளவில்; சந்திராதித்தவல் - சந்திரன், ஆதித்தன் உள்ள காலமளவும்; ஆதித்தன - சூரியன்,

திருவாய் மொழிந்தருள - கட்டளையிட; திருமந்திரி ஓலை - திருமந்திர ஓலை, அரசன் ஆணையை எழுதுபவன். ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவர் கட்டளையை ஓலையில் எழுதி வாசித்தவன் செம்பியன் விழுப்பரையனாவான்.

திருவாய்க் கேழ்விப்படி கல்லில் வெட்டித்து: இதனால் அக்காலத்தில் அரசன் தானம் செய்தருளுமுறை விளக்கப்பட்டது. அஃதாவது, தான் செய்யக் கருதும் தானத்தை அரசன் சொல்ல, திருமந்திரவோலை முதலில் அதை எழுதுவான். பின் அது வாசிக்கப்பட்டு அம்முறையே கல்லில் வெட்டப்படும் என்பது.

சத்துள்ள சைய்வ்வ ஆசார்ய்யர்களே, இத்தன்மம் ரக்ஷிக்க.

(பாட பேதம்) 1. பொற்சயப் 2. சீர்த் தசிச் 3. தடர்வன 4. சூழ்மதின் 5. பாக்கமும் 6. அமைசசர் 7. தெவியர் 8. எழில் 9. பலபழர் நிவும் 10. புகழொடும் 11 நவநெதிக் 12. ......... 13. வள 14. ஆதி நகரவையில் 15. இந்திரதனே 16. செறிமினே 17. ஒட்ட விஷையமும் 18. சேர்நற் 19. கோசலே 20. முராணுகத் 21. மயிபாலனே 22. வினாகத் 23. தெறி புனல்க் 24. பர்ம 25. தரைசனே 26. பெருனெதி 27. அகனகர் 28. மெய்த்தொளிர் 29. விசையமும் 30 பன்னேயும் 31. காப்புறு 32. மாப்பப் 33. விளைப்பந்துறடை 34. வளைப்பந்துறை 35 திதமா 36. வல்வினே 37. மாதமர், மதமா 38 கலாமுதிர்க் 39. மானக்க 40. தொடு கடற்க் 41 காவல்க் 42. பரகேஸரி பர்மரான.

---

## 4. மணிமங்கலம் சபையோர் சாசனம் *

### முகவுரை.

மணிமங்கலம் என்பது ஓர் ஊர். அவ்வூர்ச் சபையினரால் ஏற்பட்ட சாசனம், 'மணிமங்கலம் சபையோர் சாசனம்' எனப்பட்டது. இது செங்கல்பட்டு சில்லா, காஞ்சீவரம் தாலூகாவிலுள்ள மணிமங்கலம் என்னுமூர் இராசகோபால சுவாமிகோயில் மூலதானத்தின் வடக்குச்சுவரிலும், மேற்குச் சுவரிலும் காணப்படுகிறது.

முதலாம் இராசேந்திரனுடைய மகன் இராசாதித்தன், சேர நாடு, சாளுக்கிய நாடு, பாண்டிய நாடு, கங்கநாடு, இலங்கை நாடு, பல்லவ நாடு, கன்யாகுப்ஜம் ஆகியவற்றை ஆளுவதற்கு அவன் இனத்தவரையே பிரதிநிதிகளாக ஏற்படுத்திய செய்தியும், இலங்கைப்போரைப்பற்றிய விரிவான செய்தியும், பலலாரி சில்லாவிலுள்ள காம்பிலி என்னுமிடத்திலிருந்த சாளுக்கிய மன்னர் மாளிகையை அழித்த செய்தியும் இதில் காணப்படுகின்றன. மணிமங்கல மூர் சபையினர், கோயில் பணத்தி

---

இவ்வம்சத்துள்ள சைய்வ்வ ஆசார்ய்யர்களே - இந்தப் பரம்பரையில் தோன்றிய சிவாச்சாரியார்களே என்பது; அதாவது, கோயில் ஆசாரியர்களை விழித்தபடி.

இத்தன்மம் - இந்த தருமம்; ரக்ஷிக்க - காக்கக் கடவர்.

---

* இச் சாசனம் தென்னிந்திய சாசனத் தொகுதிகளில் மூன்றாவது தொகுதியின் முதலாம் பகுதியைச் சேர்ந்தது.

விருந்து நூறு காசு கடன் வாங்கி, அக்கடனுக்கு வட்டியாக அவ்வூரிலுள்ள சில நிலங்களைக் கொடுத்த செய்தியை இது கூறுகின்றது. இராசகேசரிவர்மன் என்னும் இராசாதிராசன் ஆட்சியின்† இருபத்தொன்பதாம் ஆண்டு, தனு ஞாயிற்று (in the month Dhanus) பூர்வபட்சத்து (bright fort night) துவிதியையும் (the second Tithi) புதன் கிழமையும் கூடிய திருவோண நாளில் (the day of Sravana) இது நடைபெற்றது.

எனவே, இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 1046 ஆம் ஆண்டு, திசம்பர்த் திங்கள் மூன்றும் நாள் ஆகும்.

---

## இராசாதிராசன் : மெய்க்கீர்த்தி

ஸ்வஸ்தி ஸ்ரீ —
திங்களேர் தருதன் றொங்கல்வெண் குடைக்கீழ்
நிலமக ணிலவ மலர்மகட் புணர்ந்து
செங்கோ லோச்சிக் கருங்கலி கடிந்து
தன்சிறிய தாதை யுந்[1] திருத் தமையனுந்[2]

---

† இராசாதிராசன், இராசேந்திரனுக்குப்பின் கி. பி. 1018 முதல் 1053 வரை சோழநாட்டை ஆண்டான்.

ஸ்வஸ்தி ஸ்ரீ: இது சாசனங்களில் மங்கல மாகவரும் வடமொழித் தொடர்.

திங்களேர்தரு - திங்களையொத்த; இவன் சாசனம் 'திங்களேர் தரு', 'திங்களேர் பெறவளர்' என்ற தொடக்கம் உடையன. தன் தோங்கல் வெண்குடை - தனது மாலை தொங்கவிட்ட பெற்ற வெண் கொற்றக் குடை. 'திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும், கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடை போன்றிவ், வங்கண் உலகளித்தலான்' என்ற சிலப்பதிகார அடிகள் இங்கு நினைக்கற்பாலன.

நிலமகள் நிலவ; பூதேவதை தங்க; மலர்மகள் புணர்ந்து - இலக்குமி கூடியிருந்து; செங்கோலோச்சி - ஆட்சிபுரிந்து; கருங்கலி கடிந்து - துன்பம் நீக்கி; தன் சிறிய தாதை: இவன் பெயர் இங்கு குறிக்கப்படவில்லை; இரண்டாம் இராசேந்திரன் மெய்க் கீர்த்தியில், 'தன் சிறிய தாதையாகிய எறிவலி கங்கைகொண்ட சோழனை' என்று காணப்படுகிறது. திருத்தமையன்: இவன் பெயர், வீரராஜேந்திரன்

குறிகொடன் னிளங்கோக் களையு[3] நெறியுணர்
தன்றிருப் புதல்வர் தம்மையுந் துன்றெழில்[4]
வானவன் வில்லவன்[5] மீனவன் கங்க
னிலங்கையர்க்[6] கிறைவன் பொலங்கழற்[7] பல்லவன்
கன்னகுச் சியர்கா வலனெனப்[8] பொன்னணி
சுடர்மணி மகுடஞ் சூட்டிப் படர்புக
ழாங்கவர்க் கவர்நா டருளிப் பாங்குற[9]
மன்னுபல் லூழியுட்[10] டென்னவர் மூவருள்

---

மெய்க்கீர்த்தியில் 'அரும் பெறற் றமயனை மூன் வந்தான் யிரும்புவி புகழ் இராசராசனென் றொளிர்மணி முடிசூட்டி' என்று குறிக்கப் பட்டுள்ளது. இவன் பெயர் 'ஆள வந்தான்' என்பாரு முளர்.

குறிகோள் - பெயர் பெற்ற, இளங்கோக்கள் - தம்பியர்; இவர்கள் பெயர் இராசேந்திரன் மெய்க்கீர்த்தியில் மும்முடிச்சோழன், வீரசோழன், மதுராந்தகன், பராந்தகன் என்று குறிக்கப்பட்டுள்ளன.

நெறியுணர்தன் திருப் புதல்வர் - அரசியல் நெறியுணர்ந்த தன் மக்கள்; துன்று எழில் - அழகமைந்த.

வானவன் - சேரமன்னன்; வல்லவன் - சாளுக்கிய மன்னன்; மீனவன் - பாண்டிய மன்னன்; கங்கன் - கங்கபாடி மன்னன்.

இலங்கையர்க் கிறைவன் - இலங்கை மன்னன்; பொலங்கழல் - பொன்னாலான வீரக்கழல்.

கன்னகுச்சியர் - கன்யாகுப்ஜம் என்னும் இடத்தவர்; காவலன் - அரசன்.

பொன்னணிச் சுடர்மணி மகுடம் சூட்டி - பொன்னாலழகு செய்த மணிகள் பதித்த மகுடம் சூட்டி என்பது. படர்புகழ் - புகழ் பெற்ற.

ஆங்கவர்க்கு அவர் நாடருளி: தன் சிறியதாதை, தமையன், புதல்வர் ஆகிவர்களுக்கு சேரர், சாளுக்கியர், பாண்டியர், கங்கர், இலங்கையர், பல்லவர், கன்னகுச்சியர் என்பவர்களின் நாட்டை ஆளும்படிச் செய்து என்பது. பாங்கு உற - சிறப்பாக.

மன்னுபல் ஊழி - நிரம்பிய பல ஆண்டில்; தென்னவர் மூவர் - இலங்கையர், சேரர், பாண்டியர் ஆகிய மூவர்.

மானா பரணன் பொன்முடி யானைப்[11]
பருமணிப் பசுந்தலை பொருகளத் தரிந்து
வாரள வியகழல் வீரகே ரளனை
முனைவயிற் பிடித்துத் தனது வாரணக்[12]
கதக்க ளிற்றினால்[13] உதைப்பித் தருளி
அந்தமில் பெரும்புகழ்ச் சுந்தர பாண்டியன்
கொற்றவெண் குடையுங் கற்றைவெண் கவரியும்
சிங்கா தனமும் வெங்களத் திழந்துதன்
முடிவிழத் தலைவிரித் தடிதளர்ந் தோடத்
தொல்லை[14] முல்லையூர்த் துரத்தி யொல்கலில்
வேணாட் டரசைச் சேனாட் டொதுக்கி

---

மானாபரணன்.........அரிந்து: மானாபரணன - மானத்தை ஆபரணமாக வுடையவன். இது பாண்டியர்களுக்கும், இலங்கை மன்னருக்கும் பொதுவாக வழங்கப்பட்ட பெயர். இப்பெயரையுடைய இலங்கை மன்னன் ஒருவனை இராசாதித்தனால தலை கொய்யப்பட்ட செய்தி இதுவாகும்.

வாரளவிய கழல் - நீண்டு அகன்ற கழல்; வீரகேரளன் - இவன் சேர நாட்டை ஆண்ட மன்னன்.

முனைவயில் - போர்முனையிடத்து; வாரணக் கதக் களிறு - 'அத்திவாரணம்' என்னும் பெயரையுடைய கோபமிகுந்த யானை என்பது; இது சோழமன்னனுக் குரியது. உதைப்பித்தருளி - காலால் தலையை இடறச் செய்து; இவ்வாறு தலை இடறப்பட்டவன் வீரகேரளனாகும்.

அந்தமில் - முடிவில்லாத; சுந்தரபாண்டியன்: இவன் இராசாதித்தனுக்குத் தோற்று தன் வெண்கொற்றக் குடை, வெண்கவரி, சிங்காதனம் முதலியவற்றை யிழந்தான். சோழன் இவனை பின் தொடர்ந்து துரத்த, இவன் தலைவிரி கோலமாய் முல்லையூர்வரை யோடி ஒளிந்தான். வெங்களம் - போர்க்களம்.

முடிவிழ - கிரீடம் கீழே விழ.

தொல்லை முல்லையூர் — பழமை தாங்கிய முல்லையூர்; ஒல்கல் - பின் வாங்குதல்.

வேணாட் டரசை சேனாட் டொதுக்கி: இக்காலத்தில் மலைநாடு பலபகுதிகளாகப் பிரிந்து, ஒவ்வொரு பிரிவும் தனித்தனி அரசர்களால் ஆளப்பட்டு வந்தது. அவ்வாறு பிரிந்த பகுதிகளில் வேணாடு

மேவுபுக ழிராமகுட மூவர்கெட முனிந்து
மிடல்கெழு[15] வில்லவன் குடர்மடிக் கொண்டுதன்
நாடுவிட் டோடிக் காடுபுக் கொளிப்ப
வஞ்சியம் புதுமலர் மலேந்தாங் கெஞ்சலில்
வேலெகெழு காந்தளூர்ச் சாலை[16] கலமறுத்[17]
தாகவ மல்லனு மஞ்ச கேவுதன்[18]
தாங்கரும் படையா லாங்கவன் சேனையுட்[19]

---

ஒன்று. இராசாதிராசன் தன் மலேநாட்டுப் போரின் தொடக்கத்தில் வேணாட்டைத் தாக்கி, அதன் அரசனை விண்ணகத் தேற்றினான். சேணாடு - சுவர்க்கம்.

இராமகுட மூவர் கெட முனிந்து: இராமகுடமென்பது, எலி மலைக்குப் பக்கத்திலே யிருந்த ஒரு சிறு இராச்சியமாகும். அவ்வி டத்தில் ஆண்டுவந்த அரசர்கள் மூஷிக வமிசத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களில் கண்டார் கார்வர்மன் ஒருவன்; அவனுக்கு மற்றொரு பெயர், 'இராமகுட மூவர் திருவடி' என்பது. அவனுடன் இராசாதி ராசன் போர்செய்து, அவனை அழித்தான். இனி, இத்தொடரை 'இரா + மகுடம என்ப் பிரித்து 'மகுடமிழந்த இலங்கையரசன், வீரகேர ளன, சுந்தரபாண்டியன ஆகிய மூவர்' என்று பொருள் கொள்வாரு முளர். முன்னர் கூறியவற்றால், அது பொருந்தாமை காண்க.

மிடல்கெழு வில்லவன் - வலிமை மிக்க சேரன்; வில்லவன் - வில்லைக் கொடியாக வுடையவன். குடர்மடி கொண்டு - வயிறு மடித் துக்கொண்டு; இராசாதிராசன், சேரன் ஒருவனை வயிறுமடித்துக் கொண்டு ஓடும்படி செய்தான் என்றபடி.

வஞ்சியம் புதுமலர் மலேந்து - வஞ்சிமாலை சூடி; எஞ்சலில் - ஒய்வில்லாத.

வேலை கெழு - கடல் மோதும்; காந்தளூர்ச் சாலை கலமறுத்து - காந்தளூர் அறச்சாலையில் உண்ணவேண்டியவர்கள் இத்தனைபேர் என உண்கலம் வரையறுத்து.

ஆகவமல்லனு மஞ்சகேவுதன்: 'ஆகவமல்லனும் அஞ்ச, கேவு தன்' என்பது. கேவுதன், ஆகவமல்லன் படைத் தலைவர்களில் ஒரு வன் போலும்.

தாங்கரும் படையால் - சோழனது எதிர்ப்பதற்கரிய படைவலி யால்; அவன் சேனை - ஆகவமல்லன் படை.

கண்டப் பயனும் கங்கா தரனும்
வண்டமர் களிற்றொடு மடியத் திண்டிறல்
விருதர்[20] விக்கியும் விசயா தித்தனுங்
கருமுரட் சாங்க மய்யனு[21] முதலினர்
சமர பீருவொத் துடைய விரிசுடர்ப்
பொன்னே டைக்கரி[22] புரவியொடும் பிடித்துத்[23]
தன்னு டையிற் சயங்கொண் டொன்னார்
கொள்ளிப் பாக்கை யுள்ளெரி மடுப்பித்
தொருதனித் தண்டாற் பொருகட லிலங்கையர்[24]
கோமான் விக்கிரம பாகுவின் மகுடமும்

---

கண்டப்பயனும் கங்காதரனும்: இவர்கள் இருவரும் ஆகவமல்லன் படைத் தலைவர்கள். வண்டமர் களிற்றொடு மடிய: போரில் கண்டப்பயனும், கங்காதரனும் தங்கள் களிறுகளோடும் மடிய என்பது. வண்டமர் களிறு - மதக்களிறு.

விருதர் விக்கியும் விசயாதித்தனும்: ஆகவமல்லன் மக்களான விக்கிரமாதித்தனும், விசயாதித்தனும் என்பது. விருதர்-வீர மிக்கவர்; விக்கி - விக்கிரமாதித்தன்.

கருமுரட் சாங்கமய்யனும் - மிக்கவலிமையுடைய சாங்கமய்யன்; இவனும் ஆகவமல்லன் படைத் தலைவர்களில் ஒருவன். முதலினர் - விக்கிரமாதித்தன், விசயாதித்தன், சாங்கமய்யன் முதலியோர்.

சமரபீரு ஒத்து உடைய - சமரில் அச்சங்கொண்டு உடைந்தோட; சமரபீரு - சமரில் கொள்ளும் அச்சம். (Coward)

பொன்னேடைக் கரி - அழகிய நெற்றிப்பட்ட முடைய யானை; புரவி - குதிரை.

தன்னுடையில் - தன் முயற்சியில்; ஒன்னார் - பகைவர்.

கொள்ளிப்பாக்கை: இது நிஜாம் இராச்சியத்துச் சிக்கந்தராபாத்துக்கு நாற்பத்திரண்டு மைல் தூரத்திலுள்ளது; இக்காலத்தில் இது சாளுக்கிய ராட்சியின்கீழ் இருந்தது.

ஒரு தனித் தண்டு - ஒப்பற்ற பெரும்படை; இலங்கையர் கோமான் விக்கிரமபாகு: இவன் இயற்பெயர் காசிபன் என்பது; மகிந்தனுக்கு மகன். இராசேந்திரன் கி. பி. 1017-ஆம் ஆண்டு ஈழமண்டலமுழுவதையும் கொண்டு, மகிந்தனைச் சோழநாட்டில் சிறைப்

முன்றனக் குடைந்த[25] தென்றமிழ் மண்டல
முழுவ துமிழந் தெழுகட[26] லீழம்
புக்கவிலங் கேச னாகிய[27] விக்கிரம
பாண்டியன் பருமணி மகுடமும் காண்டகு
தன்ன வாக்கித்தன்[28] கன்னகுச் சியினும்[29]
ஆர்கலி யீழஞ் சீரிதென் றெண்ணி

---

படுத்தி வைத்திருந்தான். அவன் மகன் காசிபனைச் சிங்களவர்கள் இரகசியமாக வளர்த்து, ஏற்றகாலத்தில் இலங்கையின் ஒரு பகுதியான உரோகண நாட்டிற்கு அரசனாக்கி 'விக்கிரமபாகு' என்ற பெயரோடு கி. பி. 1029-ஆம் ஆண்டு முடி சூட்டி வைத்தனர். அவன் இராசாதிராசன் படைகளால் வெல்லப்பட்டு, முடியிழந்தான்.

முன் தனக்குடைந்த — முன்பு தனக்குத் தோற்ற; தென் தமிழ் மண்டலம் - பாண்டிய மண்டலம்; எழுகடலீழம் - அலையெழும் கடல் நடுவணதாகிய ஈழநாடு.

ஈழம் புக்க இலங்கேசனாகிய விக்கிரமபாண்டியன்: விக்கிரம பாண்டியன் தமிழ் நாட்டின் தென்பாகத்தை ஆண்டுவந்தவன். இவன் தன் நாட்டை இழந்து பகைவருக்குப் பயந்து இலங்கை நாட்டுக்கு ஓடி, அதை ஆண்டு வந்தான்; ஆதலால் 'ஈழம் புக்க இலங்கேசன்' என்று அழைக்கப்பட்டான் என்று தெரிகிறது. மகாவம்சத்தில் கூறப்படும் விக்கிரமபாண்டும், இவனும் ஒன்று என்பர். அவன் தன் பகைவருக்குப் பயந்து இலங்கையை விட்டுத் துளுவ நாட்டில் வந்து சிலகாலம் இருந்தான் என்றும், பின் தன் தந்தை மகாலானசிதி என்பவன் இறந்த செய்தி கேட்டு மீட்டும், இலங்கை புக்கு தந்தை ஆண்ட உரோகண நாட்டை ஆண்டு வந்தானென்றும் மகாவம்சம் கூறும்.

இதனால் இக்காலத்தில் பாண்டிய கேரள மன்னர்களும், இலங்கையரசர்களும் தங்களுக்குள் மணவினை செய்துகொண்டு உறவு பெற்றிருந்தனர் என்றும், அவர்கள் தங்கள் மூவருக்கும் பொதுவான எதிரியாயிருந்த சோழர்களை வெல்ல பெரிதும் முயன்றனர் என்றும் தெரிகிறது.

காண்டகு — வெளிப்படையாக.

தன் கன்ன குச்சியினும் - தன்னாட்சிக் குட்பட்ட கன்யாகுப்ஜம் என்னும் நாட்டை விட.

ஆர்கலி - கடல்; ஈழம் - ஈழ நாடு; சீரிதென்று - சிறப்புடைய தென்று.

உளங்கொளந் நாடு[30] தன் னுறவொடும்[32] புகுந்து
விளங்குமுடி கவித்த வீரசலா மேகன்
போர்க்களத்[32] தஞ்சித்தன் கார்க்களி றிழிந்து
கவ்வையுற் றோடக்[33] காதலி யொடுந்தன்
றவ்வையைப் பிடித்துத்[34] தாயைமூக் கரிய
ஆங்கவ மானம் நீங்குதற் காக
மீட்டும்[35] வந்து வாட்டொழில்[36] புரிந்து
வெங்களத் துலந்த[37]வச் சிங்களத் தரசன்[38]
பொன்னணி முடியுங் கன்னரன் வழிவந்
துரைகொ ளீழத் தரசனு கிய[39]சீ
வல்லவ மதன ராசன்[40] மெல்லொளித்

---

உளங்கொ ளந்நாடு - உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அந்த இலங்கை நாடு. தன் உறவோடும் - தன் இனத்தவரோடும்.

விளங்கு முடிகவித்த வீரசலாமேகன்: இவன் கன்யாகுப்ஜத்தினின்றும் இலங்கைக்குச் சென்று, அதைப் பிடித்து ஆண்டவன்; இலங்கையரசனாகிய விக்கிரமபாண்டு என்பவன் இவனோடு பொருது இவனால் தலை துணியப்பட்டான். மகா வமிசத்தில் ஜகதீபாலன் என்று கூறப்படுபவன், இவனே என்பர். இவன் போரில் இராசாதிராசனுக்குப் பயந்து, தன் யானையினின்றும் இழிந்து, பலர் பழிக்கப் புறங்காட்டி ஓடினனென்றும், சோழர்கள் இவன் தேவி, தமக்கை இருவரையும் சிறைப்படுத்தி, தாயை மூக்கரிந்து அவமானப் படுத்தினர் என்றும், அவ்வவமானம் தாங்கமாட்டாத இவன், மீட்டும் வந்து வாட்போர் செய்து போர்க்களத்தே மாண்டான் என்றும் தெரிகிறது.

கார்க்களிறு - கரிய யானை; கவ்வை - பழிச்சொல்; காதலி - தேவி; தவ்வை - தமக்கை; அவமானம் - இழிவு.

வாட்டொழில் புரிந்து - வாட்போர் செய்து.

வெங்களத் துலந்தவச் சிங்களத் தரசன்: போர்க்களத்தே மடிந்த சிங்களத்தரசனை வீரசலாமேகன் என்பது.

கன்னரன் வழிவந்து: கிருஷ்ணன் வம்சத்தில் தோன்றி என்பது. கன்னரன் - கன்னரதேவன், கிருஷ்ணன்.

உரைகொள் - புகழ் பெற்ற; உறைகொள் என்று பாடமோதின் 'தங்கிய' என்று பொருள் கொள்க. ஈழத் தரசனாகிய சீவல்லவ மதனராசன்: இவன் கன்னரன் வழிவந்து ஈழத்திருந்து ஆட்சிபுரிந்

தடமணி முடியுங் கொண்டு வடபுலத்
திருகா லாவதும் பொருபடை நடாத்திக்[41]
கண்டான்[42] தினகரன் நாரணன் கணவதி
வண்டலர் தெரியன் மதுசூ தனனென்[43]
றெனைப்பல வரைசரை [44]முனைவயிற் றுரத்தி[45]
வம்பலர் தருபொழிற் கம்பிலி நகருட்
சளுக்கியர் மாளிகை தகர்ப்பித் திளக்கமில்[46]
வில்லவர் மீனவர் வேள்குலச் சளுக்கியர்[47]
வல்லவர் கௌசலர் வங்கணர் கொங்கணர்
சிந்துரா ரையணர் சிங்களர் பங்களர்

---

தவன். சீ வல்லவ மதனராசன் என்பது இவனது இயற்பெயர். இராசாதிராசன் ஆட்சியில், இலங்கையர் கோமான் விக்கிரமபாகு, இலங்கேசனாகிய விக்கிரமபாண்டியன், வீரசலாமேகன், ஈழத் தரசனாகிய சீ வல்லவ மதனராசன் ஆகிய இலங்கை மன்னர் நால்வர் முடிகளும் கொள்ளப்பட்டன என்று தெரிகிறது.

வடபுலம் - வடநாடு; அஃதாவது, மேலைச் சாளுக்கிய நாடும், அதனைச் சார்ந்தனவு மாகும்.

இருகா லாவதும் — இரண்டாவது தடவையும்; பொருபடை - போர் செய்யும்படை.

கண்டான்.........றெனைப் பல வரைசரை: கண்டான் முதலியோர் வடபுலத்தின் பகுதிகளை யாண்ட சிற்றரசர்கள். வண்டலர் தெரியல் - வண்டுகள் மொய்க்கப் பெற்ற மலர் மாலை, முனைவயின் - போர்க் களத்து.

வம்பலர் தருபொழில் கம்பிலி நகர்: புதிய மலர்களைத் தருகின்ற சோலைகள் நிறைந்த கம்பிலி நகர் என்பது. இது பல்லாரி ஜில்லா, ஹொஸ்பெட் தாலூகாவிலுள்ளது. இப்பொழுது இதனைக் 'கம்பிலித் தோட்டம்' என்பர். இதில் சாளுக்கியர் மாளிகை யொன்றிருந்தது.

தகர்ப்பித்து - அழித்து; இளக்கமில் - இரக்கமில்லாத.

வில்லவர் - சேரர்; மீனவர் - பாண்டியர்; வேள்குலச் சளுக்கியர் - கங்கர் குலத்துச் சாளுக்கியர்; வல்லவர் - பல்லவர் குலத்துச் சாளுக்கியர்; கோசலர் - கோசல நாட்டவர்; வங்கணர் - வங்காளத்தவர்; கொங்கணர் - கொங்கு நாட்டவர்; சிந்துரர் - சிந்து நாட்டவர்; சிங்களர் - சிங்கள நாட்டவர்; பங்களர் - பங்காள தேசத்தவர்.

அந்திரர் முதலிய வரைசரிடு திறைகளும்
ஆறிலொன் றவனியுட் கூறுகொள் பொருள்களும்
உகந்து[48]நான் மறையவர் முகந்துகொளக் கொடுத்து[49]
விசுவலோ கத்தும்[50] விளங்கமனு நெறிநின்
றசுவமே தஞ்செய்[51] தரைசுவீற் றிருந்த
சயங்கொண்ட சோழ னுபர்ந்த பெரும்புகழ்க்[52]
கோவிரா சகேசரி வர்ம ரான[53]
உடையார் ஸ்ரீராசாதிராச தேவர்க்கு யாண்டு.
உ௰௯ ஆவது ஜயங்கொண்ட சோழமண்டலத்து செங்

---

அந்திரர் - ஆந்திரர்; அரைசரிடு திறைகளும் - சேரர் முதலிய அரசர்கள் கொடுக்கின்ற கப்பங்களும் என்பது. இதனால இராசாதிராசன் ஆட்சியின் கீழ் சேரர், பாண்டியர், வேள்குலச் சாளுக்கியர், வல்லவர், கொசலர், வங்கணர், கொங்கணர், சிந்துரர், சிங்களர், பங்களர், ஆந்திரர் முதலியோர் சிற்றரசராயிருந்து வரி செலுத்தினர் என்று தெரிகிறது.

ஆறிலொன்றவனியுட் கூறுகோள் பொருள்களும்: இராசாதிராசன் தன் குடிகளிடத்து ஆறிலொரு கடமை கொண்டான் என்பது இதனால் போதரும்.

உகந்து - பெற்று; 'முகந்து' என்றும் பாடம் கொள்வர். முகந்து கோள - பெற.

விசுவலோகம் - தேவலோகம்; விளங்க - புகழுண்டாக; மனு நெறி நின்று - மனுவென்னு மரசன் வகுத்த வழியே நின்று.

அசுவமேதம் செய்து - அசுவமேதம் என்னும் யாகத்தைச் செய்து; அசுவமேதம் என்பது, உத்தமமான குதிரையின் நெற்றியில் அரசனது வீரம் முதலியவைகளை வரைந்த பட்டத்தைக் கட்டி பூமி பிரதச்சணம் செய்வித்து, பின் யாகக் கிரியை செய்வது. இங்கு அசுவம் தெய்வமாகக் கருதப்படும். இதனால் அரசன் ஏகசக்கிராதிபதி என்ற பெயர் பெறுவான்.

சயங்கொண்ட..................ராச கேசரிவர்மன்: சயங்கொண்ட சோழன், இராசகேசரி வர்மன் என்பன இராசாதிராசனுக் குரிய சிறப்புப் பெயர்கள்.

சயங்கொண்ட சோழமண்டலம் - சோழ இராச்யத்தின் ஒன்பது மண்டலங்களில் ஒன்றான தொண்டை நாடு.

காட்டுக் கோட்டத்து மாகனூர் நாட்டு, மணிமங்கலமான ராஜ சூளாமணிச் சதுர்வ்வேதி மங்கலத்து மஹா ஸபையோம் எம்மூர் ப்ரஹ்ம ஸ்தானத்தே தனுநாயற்று பூர்வ்வபக்ஷத்து த்விதியையும், புதன்கிழமையும் பெற்ற திருவோணத்து நாள்க் கூட்டக் குறைவறக் கூடியிருந்து பணிப்பணியால் பணித்த இவ்வூர் ஸ்ரீமத் த்வாராபதியான ஸ்ரீ காமக்கோடி விண்ணகர் ஆழ்வார்க்கு திருவமுதுக்கும் அர்ச்சனாபோகத்துக்கும் இத்

---

செங்காட்டுக் கோட்டத்து மாகனூர் நாட்டு: தொண்டைநாடு, சோழராட்சியின்கீழ் சயங்கொண்ட சோழ மண்டலமென்று பெயர் பெற்று, பல கோட்டங்களாகவும், ஒவ்வொரு கோட்டமும் பல நாடுகளாகவும் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றுள், மாகனூர் நாடு செங்காட்டுக் கோட்டத்தைச் சேர்ந்தது.

மணிமங்கலம் - இதன் மற்றொரு பெயர் இராச சூளாமணிச் சதுர்வேதி மங்கலம் என்பது. மகா சபையோம் - ஊர்ச் சபையினர்.

ப்ரஹ்ம ஸ்தானம் - வேதம் கற்பிக்கும் இடம்; எனவே, அக்காலத்தில் மாணவர் கல்வி கற்குமிடத்திலும் ஊர் சபை கூடும் வழக்க மிருந்ததென்று தெரிகிறது.

தனு நாயறு - தனுர்மாதம், மார்கழி மாதம் (Month of Markali=December — January). பூர்வபக்ஷம் - வளர்பிறை காலம்.

திருவோணம்: இருபத்திரண்டாவது நாள்.

கூட்டக் குறைவறக் கூடி யிருந்து — சபை கூட்ட எல்லாரும் கூடியிருந்து. பணிப் பணியால் பணித்த - முறையாய்த் திருத்தொண்டு செய்யப்பெற்ற.

ஸ்ரீமத்: ஸ்ரீமதி என்பதன் ஆண்பாற்பெயர்; இது இறைவன் பெயருக்கும், இறைவனருள் பெற்றோர் பெயருக்கும் முன் வழங்கும் மரியாதைச் சொல்.

த்வாராபதி: துவாரகைக்கு அதிபதி; கிருஷ்ணன் என்பது.

ஸ்ரீ காமக்கோடி விண்ணகராழ்வார்: இது மணிமங்கலத்தார் கோயில் விஷ்ணுவின் பெயர். திருவமுது: நிவேதனவுணவு (Boiled rice offered to an idol or great person). அர்ச்சனாபோகம் - கோயில் அர்ச்சகர்களுக்கு விடப்படும் மானியம்.

இத்தேவர் பண்டாரம் - இக்கோயில் பணம்.

தேவர் பண்டாரத்தே நூறுகாசு பொலிசைக்கு கொண்டு, இக்காசு நூற்றூலும் வந்த பொலிசைக்கு இறைகரத்தூட்டாக இறையிழிக்சிக் குடுத்த நிலமாவது —

பெருநல்வதிக்கு வடக்கு, பாதிரிக்கழனி மேலைக் காலுக்கு கிழக்கு – விளை நிலங் குழி முன்னூறும், பாதிரிக் கழனி நடுவிறகாலுக்கு மேற்கு-விளை நிலக் குழி இருனூறும், பெருநல்வதிக்கு தெற்கு, ஆலைமேட்டில் மனையறுதி வாய்க் காலுக்கு கிழக்கு – விளை நிலம் குழி நானூறும், இக்காலுக்கு கிழக்கு – விளை நிலம் குழி இருனூறும், தெந்த்ரிய மரத்தின் மேலைக்காலுக்கு மேற்கு — நிலம் குழி முன்னூறும், சுண்டி

---

பொலிசைக்கு கொண்டு – வட்டிக்கு வாங்கி; பொலிசை – வட்டி (interest); இறைகரத்தூட்டாக-நிலவரி, குடி வரிகளை அநுபவிக்குமபடியாக (with the enjoyment of Revenue and Taxes); இறை – நிலவரி (Revenue); கரம் – குடிவரி (Taxes); இறை யிழிச்சி – வரி நீக்கி.

பெருநல் வதிக்கு வடக்கு: சாசனங்களில் நிலங்களுக்கு எல்லை கூறுங்கால் பெரும்பாலும் பெரும் வழிகளையும், வாய்க்காலையுமே கூறுவது வழக்கம். உதாரணமாக பெருநல்வதிக்கு வடக்கு, சுண்டி லேரி வதிக்குக் கிழக்கு என்றும், பாதிரிக்கழனி மேலைக்காலுக்கு கிழக்கு, நடுவிற்காலுக்கு மேற்கு, மனையறுதி வாய்க்காலுக்குக் கிழக்கு, நந்தவனத் தோட்டக்காலுக்கு மேற்கு, தெந்த்ரிய மரத்தின் மேலைக்காலுக்கு மேற்கு, பாவைதுறை வாய்க்காலுக்கு வடக்கு என்றும் வந்திருத்தல் காண்க. இனி, 'திருவையோத்திதேவர் நிலம் குழி இருநூற்றைம்பதுக்கு கிழக்கு' என்பதால் சிறுபான்மை அயலார் நிலமும் எல்லையாகக் கூறப்படும் என்று தெரிகிறது. வதி – வழி.

குழி: இது ஒரு நீட்டலளவை; தென்னாட்டில் 33 அங்குல நீள அகலமுள்ள இடத்தை ஒரு குழி என்பர்.

பாதிரிக் கழனி – பாதிரி மரத்தினையுடைய வயல்; கழனி – வயல்; மேலைக்கால் – மேலைப்பக்கத்துக் கால்; கால் – வாய்க்கால். நடுவிற்கால் – நடுவிடத்து வாய்க்கால்.

ஆலைமேடு: கருப்பஞ்சாறு எடுக்கும் ஆலையுள்ள மேட்டு நிலம் போலும். நந்தவனம் – பூந்தோட்டம்; தோட்டக்கால் – கிணற்றுப் பாய்ச்சலுள்ள கொல்லை நிலம். தெந்த்ரிய மரம் – தெந்திமரம், தேர் வாளம். சுண்டிலேரி வதி: சுண்டிலேரிக்குச் செல்லும் வழி என்பது.

லேரி வதிக்கு கிழக்கு—விளை நிலம் குழி நானூறும், பாவை துறைவாய்க்காலுக்கு வடக்கு, திருவையோத்தி தேவர் நிலங் குழி இருநூற்றைம்பதுக்கு கிழக்கு, - தடியிரண்டினால் குழி இருநூறும் ஆகத் தேவர் நிலன் குழி இரண்டாயிரத்திரு நூறும இறைகாத்தூட்டாக சந்திராதித்தவர் நிற்பதாக திருவமுதுக்கும் அச்சாபோகத்துக்கும் இறையிழிச்சி சிலா லேகை செய்து குடுத்தோம்

(பாட பேதம்) 1. சிறிய தாதையையும். 2 தமையனையும். 3. தன்னிளங் கோக்களையும். 4. துன்றிய தெறுசில், 5. வல்லவன். 6 கங்கநிலங்கையற்கிறைவன். 7 புலங்கழல். 8 காவலனென. 9. பாங்குறு. 10. ......... 11. ஆரைப். 12. தனத்திவாரணக். 13. கதக் களிற்று. 14. தொல்லைய். 15. விடல் செழு, 16. கார்தளூர் சாலைக். 17. கலமறுப்பித். 18. மஞ்சசேதுவுக், மஞ்சசேதுவுந்தன். 19. சேனையிற். 20. விருதலை. 21. சாங்கமயனும். 22. பொன் ஞெடயங்கரி. 23. பிடித்து. 24. இலங்கையார். 25. உடைந்து. 26. எழ்கடல் 27. விலங்கேசுகிராகிய. 28 தன்னதாகிய. 29. கன் னக் குச்சியினும். 30. உளங்கொடன்றெடு. 31. உறவோடும். 32. பொருகளத். 33. கவ்வையிறனடிக். 34. பிடித்து, 35. மீண்டும். 36. விட்டெழுழில், 37. உலர்ந்த. 38. சிங்களத் தரைசன். 39. உறை கொள வீழத் தரைசனாகிய. 40. சீவல்லவன் மதனராஜன். 41.

---

சுண்டில் - தொட்டால்வாடி என்னும் ஒரு பூண்டு வகை. அப்பூண்டு அங்கு அதிகம் வளருதல் காரணமாக அவ்வேரி அப்பெயர் பெற்றது போலும். ஏரி - குளம்.

பாவைதுறை வாய்க்கால்: பாவை — பதுமை; துறை - நீர்த் துறை; அத்துறையில் சிறுகோயில் ஒன்று இருந்ததென்று கொள்ள வேண்டும். திருவையோத்திதேவர்: இவருக்கு மணிமங்கலத்தில் 250 குழி நிலம் இருந்ததென்று கூறப்படுகிறது.

தடி இரண்டிநால் — வயல் இரண்டாக; தடி - வயல்.

ஆகத் தேவர் நிலம் குழி இரண்டாயிரத் திருநூறும்:- ஆகக் கோயில் நிலம் 2200 குழியும் என்பது. தேவர் நிலம் - கோயில் நிலம்.

சந்திராதித்தவர் நிற்பதாக:- சந்திர சூரியர் உள்ள காலமளவும். சிலாலேகை செய்து - கல்லில் எழுதி; சிலை - கல்; இலேகை - எழுத்து. குடுத்தோம் - (மணிமங்கலம் மகாசபையோம்) கொடுத்தோம் என்பது.

நடாத்தி. 42 கண்டர். 43. வண்டலர் தெரியல் மதி சூதனறெ ளைப். 44. அரையரை. 45. பிடித்து. 46. தகப்பித்திளக தமில். 47. வேளகுலர் சளுக்கியர். 48. மூக்கது. 49. குடுத்து. 50. விஸ்வ லோகத்து. 51. அஸ்வமெதஞ் செய். 52. பெரும்புகழ். 53. கொவி ராஜ கேஸரி வர்மரான.

---

## 5. அமண்பாக்கம் சாசனம் *

### முகவுரை.

அமண் பாக்கம் என்பது ஓர் ஊர்; அவ்வூரிலுள்ள சில நிலங்களைக் கொடுத்த செய்தி பற்றிய சாசனம் 'அமண் பாக்கம் சாசனம் எனப்பட்டது. இது செங்கல்பட்டு ஜில்லாவி லுள்ள மணிமங்கலம் என்னும் கிராமத்து இராசகோபாலப் பெருமாள் கோயில் உட்பிராகாரத்தின் கிழைச்சுவரில் காணப் படுகிறது.

இதன் முற் பகுதியில் கொப்பத்துப் போரைப்பற்றிய விரிவான செய்தி கூறப்பட்டுள்ளது. அதாவது, இராசேந் திர தேவன் † எனனும் சோழ அரசன் இரட்ட மண்டலத் தின் மீது படையெடுக்க, அதை யாண்டு வந்த மேலைச்சாளுக் கிய குலத்தவனான முதலாம் சோமேசுவரன் என்னும் பெய ரையுடைய ஆகவமல்லன், அவனைக் கொப்பம் என்னுமிடத் தில் எதிர்த்துத் தோல்வியுற்றான்; அங்கு அவனுடைய படைத் தலைவர்கள் பலர் இறந்தனர் என்பது. பிற்பகுதியில், ஸ்ரீ இராசேந்திர தேவன் ஆட்சியின் நான்காவது ஆண்டு எண்பத்திரண்டாவது நாள், இராச சூளாமணிச் சதுர்வேதி மங்கலம் என்னும மணிமங்கலத்து மகா சபையினர் அமண பாக்கம என்னும கிராமத்திலுள்ள சில நிலங்களை, அவர்கள் ஊர்க் கோயிலுக்குக் கொடுத்த செய்தி காணப்படுகிறது.

---

* இது தென்னிந்திய சாசனத் தொகுதிகளில் மூன்றாவது தொகுதியின் முதலாவது பகுதியைச் சேர்ந்ததாகும்.

† இராசேந்திர தேவன்: இவன் இராசேந்திர சோழனுக்கு மகன்; இராசாதிராசனுக்குத் தம்பி. இராசாதிராசன் ஆட்சிகாலத் தில் இவன் இளவரசனாக இருந்தான். அவன் கொப்பத்துப்போரில் இறந்ததும், சோழ இராச்சியத்திற்கு அரசனானான். கி. பி. 1052 முதல் 1064 வரை ஆண்டான்.

இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 1015 ஆம் ஆண்டு †† என்னலாம்.

---

## இராசேந்திர தேவன்: மெய்க்கீர்த்தி.

ஸ்வஸ்தி ஸ்ரீ —
திருமாது புவியெனும் பெருமாத ரிவர்தன்[1]
மாதே வியர்க ளாக மீதொளிர்[2]
வெண்குடை யுயர்த்துத்[3] திண்கலி பெயர்த்துத்[4]தன்
சிறிய தாதை யாகிய யெறிவலி[5]
கங்கை கொண்ட சோழனைப் பொங்கிதல்[6]
இருமுடிச் சோழ[7] னென்றும் பொருமாட்
டன்றிருத் தம்பியர் தம்முள் வென்றிகொள்

---

†† கொப்புத்துப்போர் ஆகவமல்லன் காலத்தில் (கி. பி. 1042-1068) நடைபெற்றதாலும், இராசேந்திரதேவன் ஆட்சியின் நான்காவது ஆண்டு கி. பி. 1055 - '56 ஆகலானும் இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி பி. 1015 என்றல் பொருந்தாது.

ஸ்வஸ்தி ஸ்ரீ: இது சாசனங்களின் தொடக்கத்தில் மங்கலமாக வரும் வடமொழித் தொடர்.

திருமாது புவியெனும் பெருமாதர்: இது இராசேந்திரதேவன் சாசனத்தின் தொடக்கமாக வரும் தொடர். அவனுடைய மற்றொரு சாசனம் 'திருமகள் மருவிய' என்று தொடங்குகிறது. திருமாது - இலக்குமி; புவியெனும் பெருமாது - பூதேவதை.

இவர், தன் மாதேவியர்க ளாக: திருமாது பூமாது ஆகிய இவர்கள் தனக்கு மாதேவியர்களா யிருக்க என்பது. மீதொளிர் வெண்குடை யுயர்த்து - மேலெழுந்து பிரகாசிக்கின்ற வெண்கொற்றக் குடையைத் தாங்கி என்பது. மீது - மேல். திண்கலி பெயர்த்து - கொடிய துன்பத்தை நீக்கி; கலி - துன்பம்.

தாதை - தந்தை; எறிவலி - பகைவர்களை எறிதலில் வலிமை மிக்க; எறிதல் - கொல்லுதல். கங்கை கொண்ட சோழன்: இவன் இராசேந்திர தேவனுக்குச் சிறிய தந்தை; அவனால் 'இருமடிச் சோழன்' என்று பெயர் பெற்றவன். பொங்கிதல் - பொங்கு இகல், வீரஞ் செறிந்த.

பொரு மூராட் டன்றிருத் தம்பியர்: மும்முடிச்சோழன், வீரசோழன், மதுராந்தகன், பராந்தகதேவன் என்பவர்கள்; இராசேந்திர

மும்முடிச்[8] சோழனைத் தெம்முனை யடுதிறற்
சோழ பாண்டிய னென்றுங்[9] கோழிமன்
ஞெடுகழல் வீர சோழனைப் படிபுகழ்[10]
கரிகால சோழ னென்றும்[11] பொருதொழில்
வாள்வலித் தடக்கை மதுராந் தகனைச்[12]
சோழ கங்க னென்றுந்[13] தோள்வலி
மேவிகல் பராந்தக தேவனைச் சோழ[14]
வயோத்திய ராச னென்றும்[15]
இருதயத்[16] தன்பொடு கருது காதலருள்
இத்த லம்புக ழிராசேந்திர[17] சோழனை
உத்தம சோழ னென்றுந்[18] தொத்தணி

---

தேவன் தம்பியர் ஆவர். இவர்களுக்கு அவன் முறையே சோழ பாண்டியன், கரிகாலசோழன், சோழகங்கன், சோழவயோத்திய ராசன் என்று பெயரிட்டு, அங்கங்கே தனக்குப் பிரதிநிதிகளாக நியமித்தான். பொருமுரண் - பொருவதில் வலிமையுடைய. திரு - அழகு.

வென்றி - வெற்றி; தெம்முனை - பகைவர் போர்முனை; அடு திறல் - அடுதலில் திறமைமிக்க; அடுதல் - அழித்தல்; கோழிமன் றேடுகழல் - கோழியூரில் நிலைபெற்ற வீரக் கழலணிந்த என்பது. கோழி - உறையூர்; மன்னுதல் - வாசம் செய்தல்; படிபுகழ் - நாடு புகழும்; படி - பூமி.

பொருதொழில் வாள்வலித் தடக்கை: பொருந்ற தொழிலில் சிறந்த வலிமைமிக்க பெரிய கையினையுடைய என்பது, பொருதல் - போர்செய்தல்; வாள் - சிறந்த; தோள்வலி மேவிகல் - தோள் வலிமை பொருந்திய.

இருதயத் தன்பொடு கருது காதலர்: மனத்தில் விரும்பி துணை செய்யும் மக்கள் என்பது. காதலர் - மக்கள்; அவர்கள் இராசேந்திர சோழன், முடிகொண்ட சோழன், சோழகேரளன், கடாரங் கொண்ட சோழன், பலபுகழ் முடிகொண்ட சோழன், இரட்டபாடி கொண்ட சோழன் என்பவர்க ளாவர். இராசேந்திரன் அவர்களுக்கு முறையே உத்தமச்சோழன், விசயாலயன், சோழகேரளன், சோழ சனகராசன், சுந்தரசோழன், சோழ கன்ன குச்சியராசன் என்று பெயரிட்டு உத்தியோகத்தி லமர்த்தினன்.

தலம் - பூமி; தொத்தணி முகையவி ழலங்கல் - தொன்று

முகையவி ழலங்கன் முடிகொண்ட சோழனை
இகல்விச யாலய னென்றும்[19] புகர்முகத்
தேழுயர் களிற்றுச் சோழ[20]கே ரளனை
வார்சிலைச் சோழ[21] கேரள னென்றும்
திண்டிறற் கடாரங் கொண்ட சோழனைத்
தினகரன் குலத்துச் சிறப்பமர் சோழ[22]
சனக ராச னென்றுங்[23] கனைகடற்
படிகொண்ட பல்புகழ்[24] முடிகொண்ட சோழனைச்
சுந்தர சோழ னென்றுஞ்[25] செந்தமிழ்ப்
பிடிக்களிற்[26] றிரட்ட பாடி கொண்ட
சோழனைத்[27] தொல்புவி யாளுடைச் சோழ
கன்னகுச் சியராச னென்றும்[28] பின்னுந்தன்
காதலர்[29] காதலர் தம்முள் மேதகு
கதிராங் கனைகழல் மதுராந் தகனை
வெல்படைச் சோழ வல்லப னென்றும்[30]
மானச்[31] சிலைக்கையோ ரானைச்சே வகனை[32]
திருபுவன சோழ னென்றும்[33] பருமணிச்
சுடர்மணி[34] மகுடஞ் சூட்டிப் படிமிசை

---

தொட்டு அணியும் முகையவிழ்ந்த மாலை என்பது. முகை - மொட்டு; அலங்கல் — மாலை. இகல் - வலிமை; புகர்முகத் தேழுயர் களிறு - புள்ளிகளையுடைய முகத்தினையுடைய எழு பெரிய களிறுகளைக் கொண்ட. புகர் - புள்ளி; வார்சிலை - நீண்ட வில்; தினகரன் குலம் - சூரிய குலம்; தினகரன் - சூரியன்; கனைகடல் படி - ஒலிக்கின்ற கடலால் சூழப்பட்ட உலகம் என்பது.

செந்தமிழ்ப் பிடிகளிறு - செந்தமிழ்நாட்டுப் பிடியினது களிற்றினையுடைய; பிடி - பெண் யானை; களிறு - ஆண் யானை. இனி, 'பிடிகல்' எனப் பாடங்கொண்டு, தாங்கு கல் (the rock of support) என்று பொருள் கொள்வாரு முளர். காதலர் காதலர் - மகனுடைய மகன். மேதகு - மேலான; கதிராங் கனை கழல் - சூரியனையொத்தவனாய், கனைக்கின்ற கழலினையுடைய; கதிர் - சூரியன்; கனைத்தல் - ஒலித்தல்; வெல்படை - வெல்லும் சேனை; மான சிலைக்கை - பெரிய வில்லைத் தாங்கிய கை; ஓரானைச் சேவகன் - ஒரு யானை பலம் பொருந்திய வீரன்; ஆனை - யானை; சேவகன் - வீரன். பருமணிச் சுடர் - பெரிய முத்துக்கள் ஒளி விடும். படிமிசை - உலகில்.

நிகழு நாளினு ளிகல்வேட்[35] டெழுந்துசென்
றொண்டிற லிரட்ட மண்டல மெய்தி
நதிகளும் நாடும் பதிகளு மநேகம்
அழித்தனன் வளவனென் [36]மொழிப்பொருள் கேட்டு
வேகவெஞ் சளுக்கி யாகவ மல்லன்
பரிபவ மெனக்கிதென் றெரிவிழித் தெழுந்து
செப்பருந் திறத்த[37] கொப்பத் தகவையிற்
சென்றெதி ரேன்றமர் தொடங்கிய[38] பொழுதவன்
செஞ்சர மாரிதன் குஞ்சர முகத்தினுந்
தன்றிருத் துடையினுங்[39] குன்றுறழ்[40] புயத்தினுந்[41]
தைக்கவுந்[42] தன்னுடன் களிறேறிய
தொடுகழல் வீரர்கள் மடியவும் வகையா

---

நிகழு நாளினுள் - ஆட்சி நிகழும் நாளையில்; இகல்வேட்டு - போரை விரும்பி; ஒண்டிறல் - வலிமை மிக்க; பதிகளும் - ஊர்களும்.

அழித்தனன்.........கேட்டு: சோழன் இரட்டமண்டலத்தின் மீது படையெடுத்து அதை யழித்தான் என்ற செய்தியைச் சாளுக்கியனான ஆகவமல்லவன் கேட்டு. வளவன் - சோழன்; மொழிப்பொருள் - செய்தி.

வேகவெஞ் சளுக்கி - மிகக்கொடிய சாளுக்கிய மன்னன்; இஃது ஆகவமல்லனைக் குறித்தது. பரிபவம் - இழிவு. எரிவிழித்து எழுந்து - எரிபோல் சீறி எழுந்து; எரி - நெருப்பு; செப்பரும் - செப்ப அரும், சொல்லுதற்கரிய; கொப்பத் தகவையில் - கொப்பம் என்னுமிடத்தில்; இது பேராறு என்னும் கிருஷ்ணா நதியின் கரையி லுள்ளது; அக்காலத்தில் ஒரு விசேட தலமாகக் கருதப் பட்டது.

எதிரேன்று - எதிரே நின்று; அமர் - போர்; செஞ்சரமாரி - கூரிய அம்புத் தொகுதி; சரம் - அம்பு; மாரி - மழைத் தொகுதி; குஞ்சரம் - யானை; குன்றுறழ் புயம் - மலையொத்த பருத்த புயம்; உறழ் - போல, உவமையுருபு.

வகையால் - யானை, குதிரை முதலிய படை வகையால்; அக்காலத்தில் நாலுவகைப் படைகளில் தேர்ப்படை இருந்ததாகத் தெரியவில்லை; ஏனைய மூன்று படைகளோடு, கப்பல் படையுமிருந்

லொருதனி[43] யநேகம் பொருபடை வழங்கியம்
மொய்ம்பமர் சளுக்கி நம்பிசய சிங்கனும்
போர்ப்புல கேசியுந்[44] தார்த்தச பன்மனு
மானமன் னவரின்[45] மண் டலியசோ கையனும்[46]
ஆனவண் புகழா[47] மாரையனுந் தேனிவர்
மட்டவி ழலங்கல்மொட் டையனுந் திண்டிறல்
நன்னி நுளம்பனு மெனுமிவர் முதலினர்[48]
எண்ணிலி யரைசரை விண்ணகத் தேற்றி
வன்னிய ரேவனும் வயப்படைத் தத்தனுங்
கொன்னவில் படைக்குண்ட மய்யனு மென்றின[49]
வெஞ்சின வரைசரோ[50] டஞ்சிச் சளுக்கி
குலகுல குலைந்து[51] தலைமயிர் விரித்து
வெந்நுற் றொளித்துப்[52] பின்னுற நோக்கிக்[53]

---

ததென்று தெரிகிறது; ஒரு தனி - ஒப்பற்ற; வழங்கி - செலுத்தி; மோய்ம் பமர் - கொடிய போர்; போர்ப்புலகேசி - போரில் வல்ல புலிகேசி என்போன்; தார்த்தசபன்மன் - வெற்றிமாலையுடைய தச பன்மன் என்போன்; தார்-மாலை.

வண்புகழா - சிறந்த புகழினையுடைய; தேனிவர் மட்டவிழலங் கல் - தேன் சொரியும் மொட்டுகள் அவிழப்பெற்ற மாலை என்பது. இவர்தல்-நிரம்பி வடிதல்; மட்டு - மொட்டு. முதலினர் - முதலி யோர்.

எண்ணிலியரைசரை: கணக்கில்லாத அரசர்களை; அதாவது, கொப்பத்துப் போரில் சயசிங்கன், புலிகேசி, தசபன்மன், மண்டலிய சோசையன் ஆரையன், மொட்டையன், நன்னிநுளம்பன் முதலிய கணக்கில்லாத அரசர் மடிந்தனர் என்பது. விண்ணகத் தேற்றி - கொன்று.

வயப்படை - வலிய படை; வயம் - வலிமை; கோன்னவில் படை - விசையினையுடைய வில் படை; என்றின - என்று சொல் லப்பட்ட; அக்காலத்தில் வில்லும் அம்பும் முக்கிய ஆயுதமாகக் கரு தப்பட்டதாகத் தெரிகிறது.

குலகுலகுலைந்து - பெருமை கெட்டு; குலங் குலை குலைந்து என் பாரு முளர்; வெந்நுற்று - புறங்காட்டி; வெந் - முதுகு. பின்னுற

கால்பரிக் தோடி மேல்கடற் பாயத்[54]
துரத்திய பொழுதச் செருக்களத் தவன்விடு
சத்துருபயங் கரன்கா ரபத்திரன் மூல[55]
பத்திர சாதி பகட்டரை சநேகமும்
எட்டுநிரை[56] பரிகளு மொட்டக நிரைகளும்
வராகவெல் கொடிமுத லிராசபரிச் சின்னமும்[57]
ஒப்பில்சத்தி யவ்வைசாங் கப்பையென் றிவர்முதல்
தேவியர் குழாமும் பாவைய ரீட்டமு
மினையன[58] பிறவு முனைவயிற் கொண்டு
விசையாபி டேகம் செய்துதென் றிசைவயிற்[59]
போர்ப்படை நடாத்திக் கார்க்கட லிலங்கையில்
விறற்படைக் கலிங்கர்மன் வீரசலா மேகனைக்
கட[60]களிற் றொடுபடக்[61] கதிர்முடி கடிவித்
திலங்கையர்க் கிறைவன் மானா பரணன்[62]
காதல ரிருவரைக் களத்திடைப் பிடித்து

---

நோக்கி - பின் பக்கம் பார்த்து; பரிந்து - விரைந்து; மேல்கடல் - மேலைக் கடற்கரை; செருக்களம் - போர்க்களம்.

பகட்டரைசநேகமும்: அரசயானைகள் பலவும்; அவை சத்துரு பயங்கரன், காரபத்திரன, மூலபத்திரசாதி என்பன; ஆகவமல்லன் அவைகளைப் போர்களத்தேவிட்டுப் புறங்காட்டி ஓடினான். எட்டு நிரை - எட்டுவரிசை; எட்டுநடை என்பாரு முளர். பரி - குதிரை; ஒட்டக நிரைகளும் - ஒட்டகக் கூட்டங்களும்.

வராக வெல்கோடி முதல் - பன்றிக்கொடி முதலிய; வராகம் - பன்றி; இராசபரிச் சின்னம் - அரச சின்னங்கள். ஒப்பில் - விலை மதிப்பற்ற; சத்தியவை, சாங்கப்பை - இவர்வன் அரசன் மாதேவியாராகும். இவர் முதல் - இவர்கள் முதலிய, தேவிர் குழாமும் - அரசமாதர்களும்; பாவையர் ஈட்டமும் - உயர்குலப் பெண்களும்; இனையன் பிறவும் - இவைகளும் பிறவும்; விசையாபிடேகம் செய்து - வெற்றிப் பட்டம் கட்டி; வயின் — இடம்.

கார்க்கடல் - கரிய கடல்; விறற்படைக் கலிங்கர்மன் வீரசலா மேகன் - வீரசலாமேகனிடம் கலிங்கர்படை யொன்றிருந்தமையின் இவ்வாறு அழைக்கப்பட்டான் போலும். மன் - தலைவன்.

கடகளிறு - மதயானை; பட - அழிய; கதிர்முடி கடிவித்து - முடியிழக்-ச் செய்து. மானாபரணன் காதலர் — மானாபரணன் மக்கள். இவன் இலங்கை மன்னன. களம் - போர்க்களம்.

*மாப்பெரும்புகழ் மிகவளர்த்த கோப்பரகேசரிவர்மரான*[63]
*உடையார் ஸ்ரீ ராசேந்திர தேவர்க்கு யாண்டு -*
*நாலாவது நாள் அம்பட ஐயங்கொண்ட சோழ மண்டலத்து செங்காட்டுக் கோட்டத்து மாகணூர் நாட்டு ராஜசூளாமணிச் சதுருப்பெதி மங்கலத்து மஹாசபையோம், இவ்வாட்டை ஸிம்ஹ நாயற்று அபரபக்ஷத்து அஷ்டமியும் வியாழக்கிழமையும் பெற்ற ரோஹிணி நாள் எம்மூர் ப்ரஹ்மஸ்தாந மண்டபத்தே கூட்டக் குறைவறக் கூடியிருந்து எங்களூர் ஸ்ரீமத் த்வாரபதியான ஸ்ரீ காமக்கோடி விண்ணகராழ்வார்க்கு குடுத்த நிலமாவது —*

*எங்களூர் தென்பிடாகை அமண்பாக்கத்து நிலம் கீழ்பாற்கெல்லை மண்ணிக்காலுக்கு மேற்கும், தென்பாற்கெல்லை மண்ணிக்காலுக்கு வடக்கும், மேல் பாற்கெல்லை அரைசங்*

---

பரகேசரி வர்மா: இது இராசேந்திரனுக்குரிய பட்டப்பெயர். இம்முறையில் இராசராசன் இராசகேசரி என்றும், இராசேந்திர சோழன் பரகேசரி என்றும், இராசாதிராசன் இராசகேசரி என்றும், அவனுககுப் பின்வந்த இராசேந்திரதேவன் பரகேசரி என்றும் அழைக்கப் பட்டிருத்தல் காண்க.

ராஜ சூளாமணிச் சதுருப்பேதி மங்கலம்: இதன் மற்றொரு பெயர் மணிமங்கலம் என்பது. இது இப்பொழுதுள்ள செங்கல்பட்டு ஜில்லாவிலுள்ளது. மஹாசபையோம் - ஊர்ச் சபையினர்.

இவ்வாட்டை - இவ்வாண்டு. அதாவது, இராசேந்திரதேவன் ஆட்சியின் நான்காவது ஆண்டு; ஸிம்ஹ நாயறு - ஐந்தாவது மாதம், ஆவணி மாதம் (Month of Avani=August—September); ஸிம்மம் - சிங்கராசி; நாயறு - சூரியகதியினால் ஏற்படும் மாதம். அபரபக்ஷம் - தேய் பிறை காலம்; அஷ்டமீ - எட்டாவது திதி; ரோஹிணிநாள் - நாலாவது நாள்.

ப்ரஹ்ம ஸ்தாநம் - வேதம் கற்பிக்கும் இடம்; கூட்ட - சபை கூட்ட; குறைவறக் கூடியிருந்து - எல்லாரும் கூடியிருந்து.

பிடாகை - உட்கிடையூர், சிறுகிராமம் (hamlet); கீழ்பாற்கெல்லை - கிழக்கு எல்லை; பாற்கு - பக்கம். அரைசங் குட்டம் -

குட்டத்துக்கும் நங்காசி யென்னும் புலத்துக்குங் கிழக்கும், வடபாற்கெல்லை பழூர் நக்கப்புத்தேரி கரைக்கு தெற்கும், இத்தேவர்க்கு முன்பு சிலாலேகை பண்ணின நிலத்துக்கு தெற்கும் ஆக, இன் னாற்பாற்கெல்லைக்கும் நடுவுபட்ட நிலமும் ஓடையு முடைப்பும், மேனோக்கின மரமும், கீணோக்கின கிணறும் இன் னாற்பாற்கெல்லைக்கும் நடுவுபட்ட தெல்லாம் ஸேனாபதிகள் ஜயங்கொண்ட சோழ ப்ரஹ்மாதிராஜர் தாயார் காமக்கவ்வையள் பக்கல் ஸ்வம்கொண்டு சந்திராதித்தவற் இன் நிலத்துக்கு இறையிறுத்துக் குடுப்போமானோம் மஹா சபையோம். ஸபையுளிருந்து கரையிட்டுக் கரைபொந்து பணித்த காராம்பிசெட்டு நாராயணக் கிரமவித்தனும், இரா யூர் சந்திரதேவ அத்தாழிக் கிரமவித்தனும், ஸஹணை மாத

---

அரச குட்டம்; குட்டம் - சிறு குளம். புலம் - நிலம்; ஏரி - பெருங் குளம்.

சிலாலேகை பண்ணின - சிலையில் எழுதிக்கொடுத்த; சிலை - கல். உடைப்பு - ஓடைக் கரை; நீர் எனினுமாம். மேநோக்கின - மேல் நோக்கி வளர்ந்த; கீணோக்கின - கீழ்நோக்கிக் குழிந்த. காமக் கவ்வையள்: இவள் சேனாபதி சயங்கொண்ட சோழ பிரமாதி ராசருக்குத் தாய். பக்கல் - இடம்; ஸ்வம் கோண்டு - சொந்தமாகப் பெற்று.

சந்திராதித்தவர் - சந்திர சூரியர் (உள்ள அளவும்); இறையிறுத்து - வரி நீக்கி; கரையிட்டு - கரை கண்டு; கரை - நிலபபகுதி (block of land); கரைபொந்து பணித்த - நிலத்தைப் பார்வையிட்டுக் கூறிய; 'போந்து' என்பதன் குறுக்கமே 'பொந்து' போலும்.

காராம்பி செட்டு: விவசாயத் தொழிலுக்குரிய கருவி வியாபாரம். அதைச் செய்து வந்தவன் 'காராம்பிசெட்டு நாராயணக் கிரமவித்தன்' எனப்பட்டான். காராம்பி - எருது பூட்டி நீரிறைக்கும் கருவி வகை. செட்டு - வியாபாரம். கிரமவித்தன் - வேதத்தின் கிரம பாடத்தில் வல்ல பார்ப்பாரது பழைய பட்டப்பெயர். (Ancient Brahman title, as one skilled in the Krama method of reciting the Vedas).

வக் கிரமவித்தனும் பணிப்பணியால் பணிகேட்டு எழுதினேன் — இவ்வூர் ஊர்க்கரணத்தான் அலங்காரன் சிராமனேன். இவை என் எழுத்து.

(பாட பேதம்) 1. தங். 2. மீதொளி, 3. யுயர்த்து. 4. பெயர்த்து. 5. வெறும் வலிக். 6. பொங்கிகல். 7. இருமடி சோழனென்றும். 8. மும்மடி. 9. சோழபாண்டியனென்றும். 10. படிபுகழ்க். 11. கரிகால சோழனென்றும். 12. மதுராந்தகனே. 13. சோழங்க னென்றும். 14. சோள 15. வயோத்திய ராஜனென்றும். 16. துயரத் 17. புகழ் ராஜேந்திர 18 சோழனென்றும். 19.விசயாலயனென்றும். 20.சோழ. 21. சொழ கௌளனென்றும். 22. சோள. 23. ஜனகராஜனென்றும். 24. பலபுகழ். 25 சோழனென்றும். 26. பிடிசல். 27. சோழனே. 28. ராஜனெனறும். 29. காதலர். 30. வல்லபனென்றும். 31. மான. 32. பொரானைச் செவகனே. 33. சோழனென்றும். 34 நெடு. 35. வெட்டெழுந்து. 36. வளவனென்னும். 37. திரத்த. 38. துடங்கிய. 39. துடையிலும். 40. குன்றுறள். 41. புயத்திலும். 42. தைய்க் கவும். 43. தொருதனி 44. புலக்கேசியும். 45. மன்னவரில். 46. மண்டலிக சோகனும. 47. புகழாளும். 48. முதலியர். 49. மய்யனு மென்றினன. 50. அரைசரொடு. 51. குலகுலை குலைந்து. 52. வெனுற னெளித்துப். 53. நோக்கி. 54. பாய. 55. கரபத்திரமூல. 56. எட்டுநடை. 57. ராஜ பரிச்சந்தமும். 58. மெனையன. 59. விஜய அபிஷேகம செய்து தெந்திசை வயிர்ப். 60. கடற். 61. ஒருடு மகப்பட. 62. திலஙகையற் கிறைவன் மாநாபரணக். 63. கோப்பர கெசரி பந்மராந.

---

பணித்த.........பணிப்பணியால்; மகாசபையிலுள்ள காராம்பி செட்டு நாராயணக் கிரமவித்தன், இராயூர் சந்திரதேவ அத்தாழிக் கிரமவித்தன், ஸஹஙே மாதவக்கிரமவித்தன் ஆகிய இவர்கள் பணித்த கட்டளையால்; பணி கேட்டு - அக்கட்டளையை அவர்கள் சொல்லக் கேட்டு.

ஊர்க்கரணத்தான்: ஊர்ச்சபை நிகழ்ச்சிகளை எழுதும் எழுத்தாளன; இவனுக்கு 'மத்தியஸ்தன்' என்ற பெயரும் உண்டு. அமண்பாக்கம் சாசனத்தை எழுதிய கரணததான், 'அலங்காரன் சிராமன்' என்போன்.

# 6. கணவதிநல்லூர் சாசனம்.

## முகவுரை.

கணவதி நல்லூர் என்பது, அதிராசராச மண்டலத்து வெங்கால நாட்டிலுள்ள ஒரு கிராமம். இராசேந்திரதேவன் இக்கிராமத்தைத் திருவாயிலை சிவன்கோயிலுக்குத் தானமாகக்கொடுத்த செய்தி கூறப்படுவதால் இச்சாசனம் 'கணவதி நல்லூர் சாசனம்' எனப்பட்டது. இது திருச்சிறுப்பள்ளி சில்லாவைச் சேர்ந்த கரூர் என்னும் ஊரிலுள்ள பசுபதீசுவரர் கோயில் தெற்குச் சுவரில் காணப்படுகிறது.

கொப்பம் என்னுமிடத்தில் இராசேந்திரதேவன் ஆகவமல்லனுடன் போர்செய்த செய்தி இதில் குறிக்கப்பட்டுள்ளது. அவன் தன் ஆட்சியின் ஒன்பதாவது ஆண்டில் கணவதிநல்லூர் என்னும் கிராமத்தைத் திருவாயிலை சிவன் கோயிலில ஏற்படும் செலவுக்காக கொடுத்த செய்தி இதன் பிற்பகுதியில் காணப்படுகிறது.

இச்சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 1020ஆம் ஆண்டு† என்னலாம்.

---

## இராசேந்திரதேவன் : மெய்க்கீர்த்தி.

ஸ்வஸ்தி ஸ்ரீ —

திருமகள் மருவிய செங்கோல் வேந்தன்றன்

---

* இச்சாசனம தென்னிந்திய சாசனத் தொகுதிகளில் மூன்றுவது தொகுதியின் முதற்பகுதியைச் சேர்ந்தது.

†. இராசேந்திர சோழன் மகன் இராசேந்திர தேவன்; இருவரும் பரகேசரி பட்ட முடையவர்கள். முன்னவன் ஆட்சி கி. பி. 1012-1044 வரை நிகழ்ந்தது; பின்னவன் ஆட்சி கி. பி. 1052-1064 வரை நிகழ்ந்தது. கொப்பத்துப்போர் ஆகவமல்லன் காலத்தில் (கி. பி. 1042-1068) நடைபெற்றதால், அப்போரைப் பற்றிக் கூறும் இச் சாசனம் இராசேந்திரதேவன் காலத்தினதாகவே இருத்தல் வேண்டும்; எனவே இராசேந்திரதேவன் ஆட்சியின் ஒன்பதாவது ஆண்டு என்பது, கி. பி. 1060-'61 என்று ஆகும்.

திருமகள் மருவிய.- இலக்குமி பொருந்தி இருக்கின்ற; செங்கோல் வேந்தன் - இராசேந்திர தேவன். 'திருமகள் மருவிய' என்ற தொடக்கம இராசேந்திர தேவனுடைய இரண்டாவது மெய்க்கீர்த்தியிலுள்ளது போலும்.

முன்னோன் சேனை பின்னது வாக
முன்னெதிர் சென்று இரட்டை பாடி
ஏழரை யிலக்கமுங் கொண்டு எதிரமர்
பெறுது எண்டிசை நகம்பறை யதுகறங்கப்
பேராற்றங் கரைகொப் பத்துவந் தெதிர்த்த
ஆஹவ மல்லன் றன்பெருஞ் சேனை
யெல்லாம் படப்பொருது பாரது நிகழப்
பசும்பிண மாக்கி ஆங்கவ னஞ்சிப்
புறக்கிட் டோட டவவன் ஆனையுங் குதிரையும்
பெண்டுபண் டாரமும் ஒட்டகத் தொடு
அகப்படப் பிடித்து திசையது நிகழ

---

தன்முன்னோன்: தன் தமையன், இராசாதித்தன். இவன் பேராற்றக்கரையிலுள்ள கொப்பமென்னுமிடத்தில் ஆகவமல்லனை எதிர்த்து, அவனால் கொல்லப்பட்டான். பின்னதுவாக - புறங்காட்ட.

முன்னெதிர் சென்று - பகைவர்க்கு முன்னே சென்று; இராசேந்திரதேவன் தன் தமையன் இறந்த போர்க்களத்திலேயே முடிசூடி ஆகவ மல்லனை எதிர்த்து வென்றான்; கொண்டு - வென்று, எதிரமர் பெறது - எதிர்த்துப் போரிடுவா ரின்றி; அமர் - போர்.

எண்டிசை நகம் - நாட்டின் எல்லாத் திசையும்; நகம் - பூமி, பறைது கறங்க - வெற்றிப் பறை முழங்க.

பேராற்றங்.........ஆகவமல்லன் - பேராற்றங் கரையிலுள்ள கொப்பம் என்னுமிடத்தில் தன்னுடன் வந்து எதிர்த்த ஆகவமல்லன் என்பது; பேராறு என்பதனை இப்பொழுதுள்ள கிருஷ்ணாநதி என்பர்.

படப்பொருது - மடியும்படிச் சண்டை செய்து;

பாரது நிகழ - பூமி நிரம்பும்படி; பசும் பிணம் - புதியபிணம்; அவன் - ஆகவமல்லன்; புறக்கிட்டு - புறக்கிட்டு, முதுகுகாட்டி.

பெண்டு பண்டாரம் - பெண்களின் ஆடையாபரணங்கள்; அகப்படப் பிடித்து - ஆனை, குதிரை, பெண்டுபண்டாரம், ஒட்டக முதலியன அனைத்தையும் பிடித்து; திசையது நிகழ - நாற்றிசையும் விளங்க. நிகழ்தல் - விளங்குதல்.

வீரர் அபிஷேகம் பண்ணி வீர
சிம்மா சனத்து வீற்றிருந் தருளிய
கோப்பர கேச ............. ரான
உடையார் ஸ்ரீ ராசேந்திர தேவர்க்கு யாண்டு —

கூவது, அதிராசராச மண்டலத்து வெங்காலநாட்டு கணவதி நல்லூர் கிழ்ப்பாக்கெல்லை எருத்துக் குளத்துக்கு மேற்கும், வடபாக் கெல்லை நாட்டுப் பெருவழிக்குத் தெற்கும், தென்பாக் கெல்லை ஆற்றுக்கு வடக்கும், மேல்பாக் கெல்லை இராஜமஹேந்திரன் வதிக்குக் கிழக்கும் இன்னான் கெல்லைக் குட்பட்ட நில நஞ்சை புஞ்சை திருவாநிலை மஹாதேவற்கு வேண்டும் நிமந்தங்களுக்குத் திருநாமத்துக் காணியாக உடும்

---

வீரர் அபிஷேகம் பண்ணி - வீரர் எனப் பட்டங் கட்டி; வீர ஸிம்மாசனம் - வெற்றிச் சிம்மாசனம்; கோப்பரகேசரி - பரகேசரி வர்மர். இது இராசேந்திரதேவன் பட்டப் பெயர்.

அதிராசராசமண்டலம் - இது கொங்குமண்டலத்திற்கு இடப் பட்டபெயர். அக்காலத்தில் மண்டலம் பல நாடுகளாகவும், ஒவ்வொரு நாடும் பல ஊர்களாகவும் வகுக்கப்பட்டிருந்த தென்பது 'அதிராசராச மண்டலத்து வெங்காலநாட்டு கணவதி நல்லூர்' என்ற தொடரால் விளக்கும்.

கணவதி நல்லூர்: இது கொங்குமண்டலத்திலுள்ள ஒரு ஊர். கிழக்கே எருத்துக் குளத்தையும், வடக்கே நாட்டுப் பெருவழியையும். தெற்கே ஆற்றையும், மேற்கே இராசமகேந்திரன் வதியையும் எல்லைகளாகக் கொண்டிருந்தது. இராசேந்திரதேவன் ஆட்சியின் ஒன்பதாவது ஆண்டில் அவன் இதனைத் திருவாநிலை சிவன் கோயில் செலவுக்காகக் கொடுத்தான்.

கீழ்ப்பாக்கு - கீழ்ப்பக்கம்; பாக்கு - பகுதி, திசை. வதி - வழி, நில நஞ்சை புஞ்சை - நஞ்சை புஞ்சை நிலம்.

திருவாநிலை மஹாதேவன் - திருவாநிலை என்னுமிடத்து கோயில் சிவபெருமான். வேண்டும் நிமந்தம் - வேண்டிய செலவு.

திருநாமத்துக் காணியாக - கோயில் நிலமாக; காணி - நிலம்.

போடி ஆமைதவழ்புற்று எழுந்த இடம், கற்றுப்புல் பெரகர முற்றூட்டும் இறுப்பதாக நம் ஓலை குடுக்க திருவாய்மொழிந் தருளினாரென்று திருமந்திரவோலை க்ஷத்திரிய சிகாமணி வள நாட்டு, பனையூர் நாட்டு நேர்வாயிலுடையான் தாழி திருப் பனங் காடு உடையானான வானவன் பல்லவதரையன் எழுத்து. திருமந்திரவோலை நாயகம் இராஜராஜனான தொண்டைமான் எழுத்து. ஊரான் உத்தமசோழனான இராஜராஜ பிரஹ்மாதிராயன் எழுத்து. அரையன் இராச ராசனான வீரராஜேந்திர ஜெயமுரி நாடாழ்வான் எழுத்து. உடன் கூட்டத்து அதிகாரிகளில் க்ஷத்திரிய சிகாமணி வள நாட்டுப் பனையூர்நாட்டு ஜெயங்கொண்ட சோழநல்லூருடையார் உதையதிவாகரன் கூத்தாடியாரான வீரராஜேந்திர மழவராயன் எழுத்து. இவை பந்மா ஹேச்வர ரக்ஷை.

---

உடும்போடியாமை தவழ்புற்று: உடும்பு, ஆமை இவை தங்கும் மண்புற்று புற்று - எறும்பு புற்று (Ant-hill). எழுந்த இடம் - உண்டான இடம்.

கற்றுப்புல் - கன்று + புல், கன்றுகள் மேய்வதற்கு விடப் பட்ட புல்லுள்ள இடம் (the grass left for the calves.); பேரகர முற்றூட்டு - கிராமத்தாரால் அநுபவிக்கப் பெறும் பொதுவிடம் (Land enjoyed in full by the great village); முற்றூட்டு - தான மாகக் கொடுக்கப்படும் நிலம்,

இறுப்பதாக - அமைவதாக; நம் ஓலை துடுக்க - நாம் எழுதும் படி; திருவாய் மொழிந்தருளினர் - கட்டளையிட்டார்.

திருமந்திர வோலை - அரசாங்கக் காரியதரிசி. (Royal Secretary). திருமந்திர வோலை நாயகம் - தலைமைக் காரியதரிசி (Chief Secretary).

ஊரான் - கிராமத்தான் (Citizen); அரையன் - அரசன்; உடன் கூட்டத்து அதிகாரி - கிராமத் தலைவன்; சோழர் காலத்தில் கிராமச் சபைகள் இருந்ததென்று இதனுல் தெரிகிறது.

எழுத்து - கையெழுத்து; கணவதி நல்லூர் சாசனத்தில், திருமந்திரவோலை வானவன் பல்லவதரையன், திருமந்திரவோலை நாயகம் இராசராசனான தொண்டைமான். அரையன் இராசராசனான வீரராசேந்திர ஜெயமுரி நாடாழ்வான், உடன் கூட்டத்து அதிகாரி வீரராஜேந்திர மழவராயன் என்னும் ஐவரும் கையெழுத் திட்டனர்.

பந்மா ஹேச்வரர் - சிவனடியார் கூட்டம் (Company of Saiva devetees); ரக்ஷை - இரட்சிக்க.

## 7. பாக்கூர் சாசனம் *

### முகவுரை.

பாக்கூர் என்பது ஓர் ஊர்; அவ்வூரைத் திருவாகிலே சிவன் கோயிலுக்குக் கொடுத்த செய்தி பற்றிய சாசனம், 'பாக்கூர் சாசனம்' எனப்பட்டது. இது திருச்சிறுப்பள்ளி ஜில்லாவைச் சேர்ந்த கரூரிலுள்ள பசுபதீசுவரர் கோயில் † தெற்குச் சுவரில் காணப்படுகிறது.

இதன் முற்பகுதியில் கூடல் சங்கமம் †† என்னுமிடத்தில் இராசகேசரிவர்மன் என்னும் வீர ராசேந்திரதேவனுக்கும் சாளுக்கிய மன்னனான ஆகவமல்லனுக்கும் நடந்த போரைப் பற்றியும், அப்போரில் ஆகவமல்லனும் அவன் மக்களான விக்கலன், சிங்களன் என்பவர்களும் அடைந்த தோல்வியைப் பற்றியும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. வீர ராசேந்திரதேவன் சாளுக்கிரை மூன்றுவது தடவை வென்ற செய்தி இதுவாகும். பிற்பகுதியில் அவன், தன் ஆட்சியின் நான்காவது ஆண்டு × கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்து பாக்கூர் என்னும் கிராமத்தைத் திருவாகிலே சிவன் கோயிலுக்குத் தானமாகக் கொடுத்த செய்தி காணப்படுகிறது.

இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 1066ஆம் ஆண்டு என்னலாம்.

---

* இது தென்னிந்திய சாசனத் தொகுதிகளில் மூன்றுவது தொகுதியின் முதலாவது பகுதியைச் சேர்ந்தது.

† திருவாகிலே சிவன் கோயில்.

†† இது கிருஷ்ணு பஞ்சகங்கா (துங்கப் பத்திரை) நதிகள் கூடுமிடம்.

× வீர ராஜேந்திரதேவன் கி. பி. 1063 முதல் 1070 வரை சோழநாட்டை ஆண்டான்.

## வீர ராசேந்திர தேவன் : மெய்க்கீர்த்தி.

ஸ்வஸ்தி ஸ்ரீ —
திருவளர் திரள்புயத் திருநில வலையந்
தன்மணிப் பூணெனத் தங்கிப்[1] பன்மணிக்
கொற்றவெண் குடைநிழற் குவலயத் துயிர்களைப்
பெற்ற தாயினும்[2] பேரமற் றுள்ள[3]
அறைகழ லரசர்[4]தன் னடியினி[5] லொதுங்க
உறைபிலத் துடைய்[6]கலி யதுவொதுங்க[7] முறைமையில்
அரும்பெறல் தமையனை முன்வந் தானை
யிரும்புவி புகழ் இராஜ ராஜனென் றொளிர்மணி
முடிசூட்டி தன்திரு மைந்த னாகிய
கங்கைகொண்ட சோழனை யெழுபரி யானைச்

---

ஸ்வஸ்தி ஸ்ரீ: சாசனங்களின் துவக்கத்தில் மங்கலமாக வரும் வடமொழித்தொடர்.

திருவளர் திரள்புயத்து: இது வீரராசேந்திர தேவன் சாசனத்தின் தொடக்கத் தொடர். இருநில வலையம் - பெரிய பூமிவட்டம். இரு நிலம் - பூமி; வலையம் - வட்டம். வலயம் என்றும் பாடம்.

மணிப் பூண் - அழகிய ஆபரணம். புயத்து நிலவலையம் பூணெனத் தங்கி என்று முடிக்க. மணி - முத்து.

குவலயம் - உலகம்; உயிர் - உயிரினங்கள். பெற்ற தாயிலும் பேர - பெற்ற தாயினைவிட அதிகமாய்ப் பேணி. பேர - பேணி என்றும பாடம். அறைகழல் - ஒலிக்கும் வீரக்கழல்.

உறை பிலத்துடைய் கலியது வொதுங்க: நீண்ட பாதாளத்தில் கலிபோய் ஒதுங்க, துன்பம் நீங்க என்றபடி; கலி - துன்பம், தரித்திரம். முறைமையில் - முறையாக.

அரும் பெறல் தமையனை முன்வந்தானை: பெறுதற்கரிய தமையனாகிய முன்னேனை என்பது; முன் வந்தான் - மூத்த சகோதரன்; அவன் பெயர் ஆளவந்தான் என்பர்.

ஒளிர் - ஒளி; மணி முடி - அழகிய கிரீடம்.

திருமைந்தன் - எல்லாராலும் விரும்பப் படத்தக்க மகன்.

எழுபரி யானைச் சேனை - எழு உயர்ந்த யானைகளையுடைய சேனை (An army of very tall elephants),

செனைச் சோழ பாண்டியனென் றண்டுயர்
மணிமுடிப் பாண்டிமண் டலங்குடுத் தருளிய
வாட்கை வடிகொண்ட கதிர்வேல் முடிகொண்ட
சோழனை சுந்தர சோழ னெனச்சுடர்
முடிசூட்டி யந்தமில் பெருஞ்சிறப் பருளித்
தன்கிளை வருலகத் தவற்க் குரிய
அகலிடம் வேறுவே றருளி இகல்வினை
விருதொடு மலைக்கும்[8] விக்கலன் றன்னொடும்
வெஞ்சிலைத்[9] தடக்கை[10] மாசா மந்தரைக்
கங்க பாடிக் களத்திடை னின்று[11]
துங்கப் பத்திரிக்கரை புகத்துரந்து[12] அங்கவர்

---

என்றுண்டு - என்றுகொண்டு; உயர் மணிமுடி - நல்லமணி முடி சூடிய; பாண்டி மண்டலம் குடுத்தருளிய - பாண்டிய மண்டலத்தைச் செய்த. வீரராசேந்திரதேவன் தன் மூத்த சகோதரனுக்கு இராசராசனென்றும், மைந்தனாகிய கங்கைகொண்ட சோழனுக்குச் சோழபாண்டியனென்றும், முடிகொண்ட சோழனுக்குச் சுந்தரசோழனென்றும் பெயரிட்டு தன் நாட்டின் பலபகுதியையும் ஆளச் செய்தான் என்று தெரிகிறது.

வடிகொண்ட - வடித்துக் கூர்மை யாக்கிய; அந்தமில் - முடிவில்லாத; தன் கிளைவருலகம் - தன் இனத்தவர் கூட்டம்; அகலிடம் - நாடு; இகல் வினை - வினை இகல், போரில்.

விருதொடு மலைக்கும் - வெற்றியோடு போர் செய்யும்; விருது - வெற்றிச் சின்னம்; விக்கலன் - விக்கிரமாதித்தான், இவன் ஆகவமல்லன மக்களில் ஒருவன்; இவன் ஆகவமல்லன் படைத் தலைவர்களில் ஒருவன் என்பாருமுளர்.

மாசாமந்தர் - தானைத் தலைவர்; கங்கபாடி களம் - கங்கபாடியிடத்துப் போர்க்களம்; துங்கப் பத்திரிக்கரை - துங்கபத்திரா நதிக்கரை; இந் நதியும் கிருஷ்ணா நதியும் சந்திக்குமிடத்தில்தான் 'கூடல் சங்கமம்' இருந்தது. புகத் துரந்து - செல்லும்படித் துரத்தி.

ஆகவமல்வன், தன் மகன் விக்கிரமாதித்தனை சோழநாட்டு எல்லையைச் சேர்ந்த கங்கபாடி, வனவாசி, சாந்தனிகே, நுளம்பபாடி முதலிய மாகாணங்களுக்கு அதிகாரியாக நியமித்தான். வீரராசேந்திர தேவன் தன் ஆட்சியின் இரண்டாவது ஆண்டு (கி. பி.

16/2

வேங்கை[13] நாட்டிடை மீண்டவர் விட்ட[14]
தாங்கரும் பெருவலித் தண்டுகெடத் தாக்கி
மாதண்ட நாயக்கன்[15] சாமுண்ட ராஜனைச்[16]
சென்றவன்[17] சிரத்தினை யறுத்து மற்றவ
னொருமக ளாகிய விருகயத்[18] தேவி
நாகலை[19] யென்னுந் தோகையம் சாயலை
முகத்தொடு மூக்குவே றாக்கி பகைத்தெதிர்
மூன்றும் விசையினும் மேன்றெதிர் பொருது
பரிபவந் தீர்வதெனக் கருதி[20] பொருதபுனல்[21]
கூடல்[22] சங்கமத் தாகவ மல்லன்

---

1064) இவனோடு பொருது பல சாமந்தர்களைக் கொன்று, பகைவ ரைத் துங்கபத்திரைவரை துரத்தினான். இது வீரராஜேந்திர தேவன் ஆகவமல்லனோடு செய்த முதற் போராகும்.

மீண்டு - கூடி, அவர் விட்ட - சாளுக்கியர் விட்டு வைத்திருந்த; பெருவலித்தண்டு - பலமிக்க பெருஞ்சேனை; கெடத் தாக்கி - அழியும் படித் தாக்கி; மாதண்ட நாயக்கன் - மாபெருஞ்சேனைத் தலைவன்; இங்கு, சாமுண்ட ராசனைக் குறித்தது. இவன் வேங்கை நாட்டிடை பெருஞ் சேனையுடன் தங்கியிருந்தான். வீரராசேந்திர தேவன் வேங்கைநாட்டில் புகுந்து இவன் சேனையைத் தாக்கி, தலையையும் அறுத்தான். இது வீரராஜேந்திர தேவனுக்கும் சாளுக்கிய ஆகவ மல்லனுக்கும் நடந்த இரண்டாவது போராகும்.

மற்றவ னொருமகளாகிய விருகயத்தேவி நாகலை: இருக்கை யன் தேவி நாகலை என்பாள், ஆகமல்லன் ஒரே மகள் போலும். இவள் அழகு மிக்கவள் என்பது, 'தோகையஞ் சாயலை' என்ற தொடரால் விளங்குகிறது. வீரராசேந்திரன் இவளைப் பிடித்து முகம் மூக்கு வேறாக அரிந்து அவமானப் படுத்தினன். தோகை - மயில்; சாயல் - அழகு.

பகைத் தெதிர் மூன்றும் விசையினும் - பகைத்து எதிர்த்து மூன்றா வது தடவையும். மேன்று எதிர் பொருது - பொருந்தி எதிர் நின்று போர் செய்து.

பரிபவம் - இழிவு, அவமானம். பொருத புனல் - பொரு புனல், மோதும் அலை நீர்; கூடல் சங்கமம் - கிருஷ்ணை பஞ்ச கங்கை நதிகள் கூடுமிடம்.

முதலி யாகிய மதுவண னொடு[22]
விரித்த தலையொடு விக்கல னொடுச்
மகனாகிய[23] விக்கலன் சிங்கள[24]
னென்றிவர் தம்மொடு மெண்ணில்சா[25] மந்தரை
வென்றடு தூசிமுன் விட்டுத்[26] தன்றுணை
மன்னன் தானும்[27] பின்னடுத் திருந்து
வடகட லென்ன வகுத்தவன் தானையை[28]
கடகளி றொன்றால் கலக்கி யுடல்புரிக்[29]
கோசலச் சிங்களக்[30] கொடிப்படை[31] முன்னார்த்[32]
தூசிவெண் களிற்றொன்[33] துணித்து கேசவ[34]
தண்ட நாயக் கன்[35]கேத் தரசன்[36]
திண்டிறல் மாரயன்த்[37] திறற்போத் தயனிகல்[38]
செய்ய[39] பொற்கோ தைமூ வேந்தி[40]யென்
றார்தடுத் துப்பில[41] னேகசா மந்தரைச்
சின்னா[42] பின்னஞ் செய்து பின்னை

---

விக்கலன், சிங்களன் - இவர்கள் இருவரும் ஆகவமல்லன் மக்கள்.

எண்ணில் - கணக்கில்லாத; சாமந்தர் - தானைத் தலைவர்.

அடுதூசி.........கலக்கி - போர்செய்து அடுதலில் வல்ல தூசிப் யாக வந்த படையை முன்னர் செலுத்தி அதன்பின் தானும், தனக் குத் துணையாக வந்த மன்னர்களும் செல்லும்படி வகுக்கப்பட்ட அச் சேனையை ஒரு யானைப்படையை விட்டுக் கலங்கச் செய்து என்பது. அடுதல் - கொல்லுதல். தூசி - தூசிப்படை, படைவீரர். துணைமன் னன - துணையாக வந்த மன்னன. வடகடல் - வடவைக் காலத்துக் கடல். தானை - சேனை, கடகளிறு - மதயானை. உடல்புரி - அடல் புரி, போர்செய்யும்.

கோசலச், சிங்களக் - கோசல நாட்டு, சிங்கள நாட்டு; கோடிப் படை - முன்னணிச் சேனை; கொடி பட என்றும் பாடம். மூன் றார்த் - முன்னர்த்.

தூசி வெண்களிற்றென் துணித்து - குதிரை, வெக்களிறு ஆகியவற்றை வெட்டி; தூசி - குதிரை. வெண்களிறு - வெங்களிறு.

கேசவதண்ட...............லநேக சாமந்தரை சின்னபின்னம் செய்து: கேத்தரசன், மாரயன், போத்தரயன், பொற்கோதை மூவந்தி என்று சொல்லப்பட்ட போரில் வல்ல தானைத் தலைவர்களை அழித்து எனபது. சின்னா - சின்ன என்றும் பாடம்.

என்றார் தடுத்துப்பி லநேக சாமந்தர் - என்று ஆர்த்து அடு துப் பில் அநேக சாமந்தரை எனபது. முதலி - போர்த் தலைவன்.

செருக்கெழி[43] லழிந்து சிங்கண[44] னோட
அண்ணல முதலிக ளனைவரு மமர்பொற்[45]
பண்ணின[46] பகடிழிந் தோட நண்ணிய[47]
ஆகவ மல்லனு மவற்கு[48]முன் னோடதன்
வேகவெங் களிற்றினை விலக்கி வாகைகொண்
டங்கவர் தாரமும் அவர்குல தனமும்
சங்குமன்[49] தொங்கலுந் தாரையும் பேரியும்
மேகட மயமும் வெண்சா மரையும்[50]
காக்கைக்[51] கொடியும் மகரதோ ரணமும்
புஷ்ப கப்பிடி[52] போர்க்களிற் றீட்டமும்[53]
பாய்ப்பரித் தொரையொடும்[54] பறித்து செய்யொளிர்[55]
விசையமணி[56] மகுட மிசையொடும் திசைதொறும்[57]

---

செருக் கெழிலழிந்து - செருக்கும் எழிலும் அழிந்து; செருக்கு-பெருமை; எழில - அழகு. அண்ணல முதலிகள் - ஆண்மை மிக்க தலைவர்கள்; பொற்பண்ணின - போர்ப்பண்ணிய, போர் செய்த.

பகடிழிந்தோட - யானையைவிட்டு இறங்கியோட; பகடு - யானை, நண்ணிய - போர்செய்த; அவர்க்கு முன்னோட - மதுவணன், விக்கலன், சிங்கணன், எனைய அண்ணல் முதலிகள் இவர்களுக்கு முன் ஆகவமல்லன் ஓட என்பது.

விலக்கி - செலுத்தி; வாகைகொண்டு - வெற்றிகொண்டு.

அவர் தாரம் - அவர்கள் மனைவியர்; குலதனம் - பெருஞ் செல்வம்; சங்கு - சங்கினால் செய்த கைவளைகள்; வெற்றிச் சங்கு எனினுமாம். தொங்கல் - காதணிவகை; தாரையும் பேரியும் - தாரை, பேரி இரண்டும் ஊதும் பெரிய குழல் (trumpets); மேகடமயம் - மேகாடம்பரம், நிழல் செய்யும் மேற்கட்டி. வெண் சாமரை — இராசச் சின்னமாகக் (Canopies) கொள்ளப்படும் கவரி மானின் மயிர்க்கற்றை.

காக்கைக் கொடி - இது மேலைச் சாளுக்கியருக்குரிய கொடி; மகரதோரணம் - மகரவடிவிலுள்ள ஆபரணம்; மகரம் - ஒருவகைமீன்.

புஷ்பகப் பிடி - புஷ்பகம் என்னும் பெயருடைய பிடி; பிடி — பெண்யானை, களிற்றீட்டம் - யானைத் தொகுதி; பரித்தொரை - பரித் தொகை, குதிரைத் தொகுதி. பறித்து - எடுத்து.

விசையமணி மகுடம் - வெற்றிமுடி. மிசையோடும் - மிசைத்து, சூடி; திசைதோறும் - நாற்றிசையும், சினப்புலி - புலிக்கொடி; இது சோழனுக் குரியது.

*இனைப்புலி செலுத்திக் குசைகொளுத் தும்புரவிப்[58]*
*பொத்தப்பி வேந்தனை வாரனை[59] வனைகழல்[60]*
*தொன்றனைத்[61] தாராசா ஞதன்[62] றம்பியைப்*
*போர்க்களத் தலங்கல் சூழ்ப்[63] பசுந் தலையரிந்து*
*பொலங்கழல்த் தென்னனைசி[64] வல்லவன் மகன்சிறுவனை[65]*
*மின்னவில் மணிமுடி வீரகே சரியை*
*கதகட களிற்று லுதைத்திட்டு மதகொடு[66]*
*செயித்து வரப்பாகாச்[67] செங்கோல் செலுத்தி*
*வேத நீதியை[68] விளக்கி மீதுயர்*
*வீரத் தனிக்கொடித்[69] தியாகக் கொடியொடும்*
*ஏற்பவர் வருகென்று நிற்றம்ப[70] போர்த்தொழி[71]*
*வாய்மையில் நெய்த[72] வீற் றிருந்த மேவரு[73]*
*மனுநெறி விளங்கிடக்[74] கோ இராசகேசரி பர்ம்மரான[75]*
*உடையார் ஸ்ரீ வீரராஜேந்திர தேவற்கு*

---

துசைகோளுந்தும் புரவி - *கடிவாளமிட்ட குதிரை;* பொத்தப்பி வேந்தன் - *பொத்தப்பி நாட்டிற்கு அரசன். பொத்தப்பி நாடு, சித்தூர் ஜில்லாவிலுள்ள காளத்தியைச் சார்ந்ததென்பர்.*

போத்தப்பி வேந்தனை.........தலையரிந்து: *பொத்தப்பி வேந்தன், வாரன், தொன்றன் (சோளன்), தாராசாஞதன் (சனநாதன்) தம்பி ஆகிய இவர்களுடன் பொருது, இவர்கள் தலைகளைத் துணித்து என்பது. தாராசஞதன - சக்கரக் கோட்ட மண்டலத்தை யாண்ட அரசன் அவன 'தாராவர்சன்' என்றும் அழைக்கப் பட்டான். அலங்கல் - மாலை.*

பொலங் கழலி - *பொன்னாலான கழல்;* தேன்னன் - *பாண்டியன் போலும்.* சீவல்லவன மகன் சிறுவன் - *சீவல்லவ பாண்டியன் மகன்; இவன் பெயர் வீரகேசரி என்பர்.*

மதகோடு: *ஒரு மன்னன் பெயர் என்பர்.*

வரப்பாகா - *வரம்பாக, முறையாக.* வேத நீதியை விளக்கி - *வேத நீதிக்கு எடுத்துக்காட்டாய் நின்று;* மீதுயர்........வருகேன்று - *வீரம், தியாகம் செறிந்தவர்களை வரவேற்று.* நிற்றம்ப - *நிற்ப.*

வாய்மையில் நெய்த - *வாய்மையில் கொண்டு; உரிமையில் எய்தி என்றும் பாடம்.*

மனு நேறி விளங்கிட - *மனுநெறி விளக்கிய என்றும் பாடம்.*

## செய்தி.

கெங்கைகொண்ட சோழபுரத்துக் கோயிலுள்ளால் திருமஞ்சனசாலையில் எழுந்தருளியிருந்து உதகம் பண்ணி அருளின அதிராஜராஜ மண்டலத்து வெங்காலனாட்டுப் பாக்கூர் வெள்ளான் வகையி லிறைமுதல் தவிர்த்து யாண்டு நவதுக் கெதிராவது முதல் இவ்வூர் இறையிலி தேவதானம் திருனுமத்துக் காணியாக இறை புரவு சிற்றாயம் ஏலவை யுகவை மன்றுபாடு தெண்ட குற்றம் உடும்போடி ஆமை தவழ்புற்றும் எழுவன முளைப்பன கற்றுப்புற் பொக்கர முற்

கெங்கை கொண்ட சோழபுரத்துக் கோயிலுள்ளால் - *கங்கை கொண்ட சோழபுரத்து அரண்மனையினுள்ளே*; திருமஞ்சனசாலை - *கடவுள், அரசா முதலியோர் அபிஷேகம் செய்யும் இடம்.* திருமஞ்சனம் — *அபிஷேகம்.* எழுந்தருளியிருந்து - *வீற்றிருந்து*; உதகம் பண்ணியருளின - *நீர் வார்த்துக் கொடுத்த; அக்காலத்தில் நீர் வார்த்து ஒரு பொருளைக் கொடுத்தல் வழக்கம்போலும்.*

பாக்கூர் வெள்ளான் வகையில் - *பாக்கூர் வேளாளர்க்குரிய கிராமப் பங்கு முதலியவற்றில்* (That which belongs to the velaja class as Lands in a village); இறை முதல் தவிர்த்து - *வரி முதலியவை நீக்கி.*

யாண்டு நவதுக் கெதிராவது - *நான்காவது ஆண்டு முதல்.* தேவதானம் - *கோயிற்கு விடப்பட்ட இறையிலி நிலம்.* திருனுமத்துக் காணி - *தேவதானம், கோயில் நிலம்; அதற்கு அக்கோயில் பெய ரிடப்படும்.*

இறை - *நிலவரி* (Revenue); புரவு - *குடிவரி* (Taxes); சிற்றாயம் - *சிறுவரிகள்* (small tolls); ஏலவை - *ஏலவை, வரிவகை* (A Tax); உகவை - *காசாயவகை* (A Tax in money); *இறை, புரவு, சிற்றாயம், ஏலவை, உகவை எனபன அக்கால வரிவகைகளாகும்.*

மன்றுபாடு, தண்டா, குற்றம் - இவை *அக்காலத்து மூவகைத் தண்டனைகள். மன்றுபாடு - தருமாசனத்தின்முன் இருக்கும் தண்டப் பொருள். தண்டா - தண்டம்; இக்காலத்தில 'தெண்டம்' என்பர். குற்றம் - அபராதம்.*

தவழ்புற்று - *தங்கும் மண்புற்று; உடும்பு வாண்ட நிலத்திலும், ஆமை சேற்று நிலத்திலும் தங்குமாதலின் 'உடும்போடியாமை தவழ்*

ரூட்டும். இவ்வூர் இறைகட்டின காணிக்கடன் பொன் முன்னூற்று முக்கழஞ்சரையே மஞ்சாடி அரைமாவும், நெல்லு மூவாயிரத்து அஞ்ஞூற்று முப்பத்தொருகலனே தூணியும் இந்நாட்டுக் கருவூர்த் திருவானிலை மஹாதேவர்க்கு இறுப்பதாக யாண்டுமுதல் இறையிலி தேவதானம் திருநாமத்துக் காணியாக வரியிலிடத் திருவாய் மொழிந்தருளினபடிக்கு, திருவாய் மொழிந்தருளினரென்று திருமந்திரவோலை க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டு, பனையூர் நாட்டு நேர்வாயிலுடையான் தாழி திருப்பனங்காடுடையான் வானவன் பல்லவரையனெழுதினானும், திருமந்திரவோலைநாயகம் அச்சுதன் இராஜராஜனான தொண்டைமானும், ஊரன் உத்தம சோழனான இராஜராஜ ப்ரஹ்மாதிராயனும், அரையன் 'இராஜராஜனான வீர ராஜேந்திர ஜயமுரிநாடாழ்வானும், வீர

---

புற்று' என்பதற்கு வரண்ட நிலமும, சேற்று நிலமும் எனப் பொருள் கொள்வர்.

எழுவன - எழுந்து செல்லும் உயிரினங்கள்; பூப்பன - மரம் புல் பூண்டுகள், கற்றுப்புல் - கன்றுக்கு விடப்பட்ட புற்றரை. பொக்கா முற்றூட்டு - நிலவரி, குடிவரியாகிய முற்றூட்டு; முற்றூட்டு- பூரண அநுபமுள்ள நிலம். இறை கட்டின் - இறையாகச் செலுத்திய; இறை - வரி.

காணிக் கடன் - காணி வரி; காணி - நிலம். முக்கழஞ்சி - அரையே - மூன்றரைக் கழஞ்சு; கழஞ்சு - 20 மஞ்சாடி எடை. மஞ்சாடி அரைமா - அரைமா மஞ்சாடி; அரைமா - $\frac{1}{20}$; மஞ்சாடி - 2 குன்றிமணி எடை. கலன் - 12 குறுணி; தூணி - 4 குறுணி. 303½ கழஞ்சியே அரைமா ($\frac{1}{20}$) மஞ்சாடி பொன்னும், 3531 கலனே தூணி நெல்லும் பாக்கூர் கிராம வருமானம் போலும்.

இந்நாட்டு - அதிராசராச மண்டலத்து வெங்கால நாடு; கருவூர்த் திருவானிலை மஹாதேவர் - கருவூர் பசுபதீசுவரர்; இறுப்பதாக - கொடுப்பதாக; யாண்டு முதல் - நானகாவது யாண்டுமுதல்.

வரியிலிட - வரிப் புத்தகத்தில் எழுதுக, (to be entered in the Revenue Register); திருவாய் மொழிந்தருளின படிக்கு - சொன்னபடியே; 'திருமஞ்சனசாலையி லிருந்து, உதகம்பண்ணி, திருவாய் மொழிந்தருளின படிக்குத் திருவாய் மொழிந்தருளினர்' என்று கூட்டுக. திருமந்திர வோலை - இராசாங்கக் காரியதரிசி, (Royal Secretary); திருமந்திரவோலை நாயகம் - தலைமைக் காரியதரிசி, (Chief Secreary); ஊரன் - ஊரான், நகரவாசி, (Citizen)

ராஜேந்திர மங்கலப் பேரரையனும் இவர்களுடன் ஒப்பிட்டுப் புகுந்த கேழ்விப்படியே நம் வரியிலிட்டுக் கொள்கவென்று வீரபத்திரன் தில்லை விடங்கனான வில்லவ ராஜராஜன் ஏவ, இவன் ஏவினபடியே உடன் கூட்டத்து அதிகாரிகள் க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டு பனையூர் நாட்டு ஜயங்கொண்ட சோழநல்லூருடையான் உதைய திவாகரன் கூத்தாடுவானான வீர ராஜேந்திர மழவராயரும், வீர ராஜேந்திர ப்ரஹ்மாதிராயரும், அருமொழிதேவ வள

---

இவர்களுடன் ஒப்பிட்டு: *திருமந்திரவோலை வானவன் பல்லவரையன், திருமந்திரவோலை நாயகம் அச்சுதன் (இராச நாராயணன்) தொண்டைமான, ஊரான் உத்தமச்சோழனான இராசராச பிரமாதிராயன், அரையன் இராசராசனான வீரராசேந்திர செயமுரி நாடாழ்வான், வீரராசேந்திர மங்கலப் பேரரையன் ஆகிய இவர்கள் ஐவருடன் சரிபார்த்து; ஒப்பிட்டு - சரி பார்த்து, ஒத்துப் பார்த்து; இங்கு பல்லவையன், தொண்டைமான், பிரமாதிராயன், அரையன், பேரரையன் என்பன அரசராலிடப்பட்ட பட்டப்பெயர்கள் போலும்.*

புகுந்த கேழ்விப்படியே - *அறிந்தபடி; எழுதிய எழுத்துப் படியே எனினுமாம். நம்வரியி லிட்டு-நமது வரிப்புத்தகத்திலெழுதி.*

ஏவ - *கட்டளையிட; இங்கு, வரியிலிட ஏவியது வீரபத்திரன் தில்லை விடங்கனான விலலவ ராசராசன் என்பவனாகும், வில்லவ ராசராசன என்பதும் ஒரு பட்டப்பெயர்* உடன் கூட்டத்து அதிகாரிகள் - *ஊர்ச் சபைத்தலைவர்கள்* (the heads of the Assembly); *அரசனது அவையிலுள்ளார் என்றும் கூறுவர்.*

வீர ராஜேந்திர மழவராயன்: *இவனுடைய இயற்பெயர் உதைய திவாகரன் கூத்தாடுவான் என்பது. இவன், சத்திரிய சிகாமணி வளநாட்டு, பனையூர்நாட்டுச் செயங்கொண்டசோழநல்லூரிலுள்ளவன். கணவதி நல்லூர சாசனத்தில் கையெடுத்திட்ட ஐவருள் ஒருவனும் இவனே.* மழவராயன் - *போர்வீரர்களுக் குரிய பட்டப் பெயர்; மழவர் - வீரர்.* பிரமராயன் - *பிரமாதிராயன், பார்ப்பன அமைச்சர்களுக்குரிய பட்டப்பெயர். 'தென்னவன பிரமராயன்' என்பது காண்க.*

அருமொழி தேவ வள நாடு: *இது சோழமண்டலத்தின் உட் பிரிவுகளான ஒன்பது வளநாடுகளில் ஒன்று. நித்த விநோத வளநாடும், சத்திரியசிகாமணி வளநாடும் சோழமண்டலத்*

நா[illegible]ட்டு வெ[illegible]ணிநாட்டு [illegible]ரிப குடையூர் அரங்கன் இருச் சிற்ற[illegible]லமுடையான் [illegible]வானவன் மூவேந்த வேளானும், அ[illegible]ராசகேசரி நாட்டு தெனூர்நாட்டு பனைக்குடி உடையான் நாடன் [illegible] ஜயங்கொண்டசோழ விழுப் பரையரும், விசைய ராஜேந் திருவளர் நாட்டு புலியூர் நாட்டுப் பூங்குடியுடையான் அத்தாணிச் சியாரூரன் முடிவிழுப் பரையனும், ப............இராஜேந்திரப் பட்டரும், இராஜராஜப் பாண்டி குலவாநாட்டு உத்தமசோழவளநாட்டு முள்ளி நாட்டு திகரிலி சோழநாட்டு மதிமங்கலத்து கொச்சாக்காற் புறத்து விண்ணவ நாராயணபட்டனும், விடையில் அதிகாரிகள் உய்யக்கொண்டானும் இப்படி.........கத் திருவாய் மொழிந்தருளினபடிக்கு நம் வரியிலார் வரியிலே இட்டு

---

ததைச் சேர்த்ததே யாகும். மூவேந்த வேளான்: அரசரால் இடப்படும் பட்டப் பெயர்களில் இது ஒன்று. விழுப்பரையன் - தமிழரசர்க்குக் கீழ்ப்பட்ட தலைவர்களில் ஒரு சாராருக்கும், கோயிலில் சுவாமி திருமுன்பு கணக்கு வாசிக்கும் உரிமையுடைய ஒருசார் மரபினருக்குமுரிய பட்டப் பெயர் இது.

பட்டர்: கோயில் அருச்சகன் அல்லது புலவனுக்குரிய பட்டப் பெயர்; இங்கு, இராசேந்திரப் பட்டர், விண்ணவ நாராயணபட்டன் என இருவர் குறிக்கப்படுகின்றனர். விடையில் அதிகாரிகள் - அரசன் ஆணையை விடுக்கும் அதிகாரிகள் (Officers who issue the Royal orders). இச்சாசனத்தில் வரும் விடையிலதிகாரி பெயர், உய்யக் கொண்டான் என்பது.

இப்படி.........கத் திருவாய்மொழிந்தருளின படிக்கு: உடன் கூட்டத்து அதிகாரிகள் வீரராசேந்திர மழவராயர், வீரராசேந்திர பிரமாதிராயர், வானவன் மூவேந்த வேளான், செயங்கொண்ட சோழ விழுப்பரையர், அத்தாணிச் சியாருரன்முடி விழுப்பரையன், இராசேந்திரப் பட்டன், விண்ணவ நாராயணப் பட்டர், விடையில் அதிகாரிகள் உய்யக்கொண்டான ஆகிய இவர்கள் எழுவரும் சொல்லியபடியே. திருவாய் மொழிதல் - சொல்லுதல்.

வரியிலார்: வரி வாங்கும் அதிகாரிகள் (Revenue Officers); வரியிலே இட்டு - வரிப்புத்தகத்தில் எழுதி.

இறையிலி தேவதானம் திருநாமத்துக் காணியாகத் திருவா நில மறநா விருந்து அவிபெலி அற்சனை போகத்துக்குச் செம்பிலும் கல்லிலும் வெட்டிக் கொள்க,

இப்படிக்கு அற்சுதன் இராஜநாராயணன் தொண்டைமான் எழுத்து. ஊரான் உத்தம சோழனான இராராஜப்ரஹ்மாதிராயன் எழுத்து. இப்படிக்கு அரையன் வீராஜே..............ன்ஜயமூரி நாடாழ்வான் எழுத்து. இப்படிக்கு வீராஜேந்திர மங்கலப் பேரரையன் எழுத்து. இப்படிக்கு அதிகாரி க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டு பனையூர் நாட்டு ஜயங்கொண்ட சோழ நல்லூருடையான் உதைய திவாகரன் கூத்தாடுவான் வீராஜேந்திர மழவராயன் எழுத்து. இப்படிக்கு வானவன் மூவேந்தவேளான் எழுத்து. இப்படிகரு ஜயங்கொண்ட சோழ விழுப்பரையன் எழுத்து. இப்படிக்கு

---

அவிபெலி அற்சனைபோகம்: தேவர்க்குக் கொடுக்கு முணவுக்காக கோயில் அர்ச்சகர்களுக்கு விடப்பட்ட நிலம்; அவிபெலி - அவிப்பெலி, தேவர்க்குக் கொடுக்கு முணவு; அற்சனை போகம் - அர்ச்சனைபோகம், கோயில் அர்ச்சகர்களுக்கு விடப்பட்ட மானியம்.

செம்பிலும் கல்லிலும் வெட்டிக்கோள்க: அரசன் கட்டளையைச் சரிபார்த்தலும், சரிபார்த்துச் சொல்லுதலும், அறைவரியிலார் வரிப்புத்தகத்தில் எழுதி, பின் கல்லிலும் செம்பிலும் எழுதுவதும் பண்டை வழக்கமென்று இதனால் தெரிகிறது. எனவே கல்வெட்டு, கல்லில்மட்டுமல்லாமல், செம்பிலும் வெட்டப்பட்டதென்பது வெளிப்படை.

அற்சுதன் இராசநாராயணன் தொண்டைமான்: இவன் பெயர் முன்னர் 'திருமந்திரவோலைநாயகம் அச்சுதன் இராசராசனான தொண்டைமான்' என்று குறிக்கப்பட்டுள்ளது. பாக்கூர் சாசனத்தை ஒப்பிட்டுப் பார்த்தவர்களில் இவன் ஒருவன். தொண்டைமான் - இது முன்னர் அரசர் சிலருக்குரிய பட்டப் பெயராக வழங்கி வந்துள்ளது.

அற்சுதன் இராச நாராயணன் தொண்டைமான், ஊரான் உத்தமச் சோழனான இராசராசப் பிரமாதிராயன், அரையன் வீராசேந்திர செயமூரி நாடாழ்வான், வீராசேந்திர மங்கலப் பேரையன், அதிகாரி உதைய திவாகரன் கூத்தாடுவானான வீராசேந்திர மழவராயன், வானவன் மூவேந்த வேளான், ஜயங்கொண்ட சோழ விழுப்பரையன், அத்தாணிச் சியாரூரான் முடிவிழுப்பரையன், விடையதிகாரி உய்யக்கொண்டான் என்னும் பெயருடைய ஒனபதின்

அத்தாணி...........விழுப்பரையன் எழுத்து. இப்படிக்கு விடையதிகாரி உய்யக் கொண்டான் எழுத்து. இது பன் மாஹேஸ்வர ரக்ஷை. இத்தன்மம் நோக்குவான் ஸ்ரீபாதம் என் தலைமேலே.

(பாட பேதம்) 1. தயங்கப். 2. தாயினும். 3. மற்றுள. 4 அரையர். 5 அடிநிழல், 6. துடை 7. யொதுங்க. 8. விறைமலர்த் தெரியல் 9 வரிசிலைத். 10. தடங்கை. 11. திறைக். 12 துங்கப் பத்திரை புகத்துரத்தி. 13. வேங்கை நல். 14. மீடுமவர். 15. நாயகன். 16. ராயனைச். 17. செற்றவன். 18. இருகையன. 19. நாகலை. 20. நீர்வலெனைக் கருதிப். 21. பொருபுனற். 22. கூடல. 23. மக்களாகிய. 24. சிங்கணன. 25 தம்மொடு மெண்ணில். 26. ஊசிமுனை. 27. மன்னருந்தானும். 28. வருத்த வத்தானையை. 29. யடல்பரிக். 30. சிங்கனை. 31. கொடிபட. 32. முன்னர்த். 33. வெங்களிற்றொடுக் 34, துணித்துக் கேசவ. 35. நாயகன். 36. தார்க் கேத்தரையன் 37 மாரயன். 38. சினப்போத் தலையணிரேச் சய ணிகல். 39 செய் 40. மூவத்தியென 41. ஆர்த்தடுதுப்பி. 42. சின்ன 42. முதலியான மதுவணனோடு. 43. செருத்தொழில். 44. சிங்க ணன். 45. அண்ணன் முதலியானைவரு மமர்போர்ப். 46. பண் ணிய. 47 நண்ணிய. 48 அவர்க்கு. 49. சங்குந் 50 வெண் சாம ரையும் மேகடம்பமும். 51. சுகரக். 52. புஷ்பகப் பிடியும். 53. பொருகளிற் றீட்டமும். 54. பாய்பரித் தொகையொடும் 55 பறித் துச் சேயொளி. 56 . விசய மணி. 57 மேய்ந்தே யெழில் கொள். 58 .........தத்துமாப் புரவிப். 59 வாரணை. 60 வன்கழல் 61. கோளனை தன்னைச். 62 சனநாதன்றன். 63 அலங்கல் சூழ். 64. தென்னனைச்சிரீ. 65. மகன் சிறுவன். 66. மதவரையொரு

---

மரும் பாக்கூர் சாசனத்தில் கையெழுத் திட்டவராவர். இச்சாசனத் தில் வரும் வானவன் அச்சுதன், ஊடான், அரையன், வீரபத்திரன், காடன, அத்தாணி, அதிகாரி எனும் பெயர்கள் அக்காலத்தியர் குலப் பெயர்கள போலும்.

விடையதிகாரி - விடையில் அதிகாரி, அரசன் ஆணையை விடுக் கும் அதிகாரி. பன்மாஹேஸ்வரர் - சிவனடியார் கூட்டம்; ரக்ஷை - இரட்சிக்க. தன்மம் - தானம, தருமம். நோக்குவான் - பாதுகாப் பவன; ஸ்ரீபாதம் என் தலைமேலே - பாதங்களுக்கு என் வணக்கம் என்றபடி.

லுதைப்பித் துதலைகயிற், 97. செய்து வரம்பாகச், 68. மேதினி விளக்கி, 69. தனிக்கொடி, 70. நிற்பப், 71. போர்த் தொழில், 72. உரிமையில் எய்தி, 73. யாகசு வீற்றிருந்து, 74. மனுநெறி விளக்கிய, 75. வர்மரான.

# 8. சிறுபழூவூர் சபையோர் நில விக்கிரய பத்திரம்.*

## முகவுரை.

சிறுபழூவூர்ச் சபையினர் ஒரு நிலத்தை விற்ற கிரய பத்திரம் பற்றிய சாசனம் 'சிறுபழூவூர் சபையோர் நிலவிக் கிரய பத்திரம்' எனப்பட்டது. பத்திரம் — சாசனம். இது திருச்சிறுப்பள்ளி சில்லாவிலுள்ள கீழப்பழூவூர் † என்னும் கிராமத்து வாட்டமூலேசுவர்க் கோயில் இரண்டாவது பிரகாரத்தின் மேலைச்சுவரில் காணப்படுகிறது.

இதன் முற்பகுதியில் குலோத்துங்கன்†† வெற்றிகளையும், கன்னியாகுமரி முதல் துங்கபத்திரை வரையுமிருந்த அவன்

---

* இச்சாசனம் தென்னிந்திய சாசனத் தொகுதிகளில் மூன்றுவது தொகுதியின் இரண்டாவது பகுதியைச் சேர்ந்தது.

† இதுவே முற்காலத்தில் சிறுபழூவூர் எனப்பட்டது போலும்.

†† இவனுடைய இயற்பெயர் இராசேந்திரன் என்பது. இவன் முதலாம் இராசேந்திர சோழன் என்னும் கங்கைகொண்ட சோழன் மகள் அம்மங்காதேவிக்கும், கீழைச்சாளுக்கிய மன்னனான இராசராசேந்திரனுக்கும் பிறந்தவன். இராசராசேந்திர சோழன் மக்களான இராசாதிராசன், இராசேந்திரதேவன், வீரராசேந்திரன் ஆகியவர்களில், இராசேந்திரதேவன் மகன் இராசமகேந்திரன் இளவரசனுயிருந்த பொழுதே (கி. பி. 1062) இறந்துவிட்டான். வீரராசேந்திரன மகன் அதிராசேந்திரதேவன் சிலகாலம் (கி. பி. 1070) சோழநாட்டிற்கு அரசனுயிருந்து, உரிமையில்லாததால் தள்ளப் பட்டான். எனவே அவனுக்குப் பின சாளுக்கிய இராசேந்திரனே தாய்வழி உரிமை பாராட்டி, பட்டத்திற்கு வந்து குலோத்துங்கன் என்ற பெயரோடு சோழநாட்டை கி. பி. 1070 முதல் 1119 வரை ஆண்டான். இரண்டாம் இராசேந்திரன் என்றும இவன் அழைக்கப்பட்டான்.

நாட்டுப் பெருக்கினையும் கூறும் மெய்க்கீர்த்தி அமைந்துள்ளது. குலோத்துங்கன்—கங்கமண்டலம், சிங்கணம், பாண்டிய நாடு முதலியவற்றைச் செயித்து, அவைகளில் அவனது வெற்றித் தூண்களை நாட்டினான் என்று சொல்லப்படுகிறது. பிற்பகுதியில் சிறுபழுவூர்ச் சபையோர் ஒரு சிறு நிலப்பகுதியை ஒருவனுக்குக் கிரயமாகக் கொடுத்த செய்தி காணப்படுகிறது. இது சோழமன்னனான இராசகேசரிவர்மன் என்னும் முதலாவது குலோத்துங்கன் ஆட்சியின் இருபதாவது ஆண்டில் நடைபெற்றது.

எனவே, இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 1090 ஆம் ஆண்டு என்னலாம்.

---

## முதற் குலோத்துங்கன் : மெய்க்கீர்த்தி.

ஸ்வஸ்தி ஸ்ரீ —
புகழ்சூழ்ந்த புணரி யகழ்சூழ்ந்த புவியிற்
பொற்நேமி[1] யளவுந் தந்நேமி[2] நடப்ப
விளங்கு ஜெய[3]மகளை யிளங்கோப் பருவத்துச்
சக்கர கோட்டத்து[4] விக்ரமத் தொழிலாற்

---

புகழ் சூழ்ந்த புணரி யகழ்சூழ்ந்த புவியில்: இது முதற் குலோத்துங்கன் கல்வெட்டுகளின் துவக்கத் தொடர். இவனுடைய கல்வெட்டுகளில் சில 'புகழ்மாது விளங்க செயமாது விரும்ப' என்றும், வேறு சில 'திருமன்னி விளங்கும்' என்றும் தொடங்கும்.

புணரியகழ் - கடலாகிய அகழி; புணரி - கடல். புகழ் சூழ்ந்த புவி, புணரி யகழ்சூழ்ந்த புவி என்று கூட்டுக.

பொற்நேமி யளவும் — பொன்மலைவரையும்; பொன்மலை - மேருமலை. தந்நேமி - தன் ஆணை; நேமி - ஆஞ்ஞாசக்கரம்.

விளங்கு ஜெயமகள் - புகழ் விளங்கும் வெற்றி; இங்கு வெற்றியைப் பெண்ணாக உருவகம் செய்துள்ளது. இளங்கோப் பருவத்து - இளவரசனாயிருந்த காலத்தில்.

சக்கர கோட்டம்: இது மத்திய மாகாணத்திலுள்ள வத்ஸ ராச்சியத்தில் உள்ளது. இதனை, இந்திராவதி நதிக்கரையில் இப்போதுள்ள 'சித்திரக் கூடம்' என்பர். இதைத் தலைநகராகக் கொண்

புதுமணம்[5] புணர்ந்து மதவரை யீட்டம்
வயிரா கரத்து வாரி யயிநுனைக்[6]
கொந்தள வரைசர்[7] தந்தள மிரிய
வாளுறை கழித்துத் தோள்வலி காட்டிப்
போர்ப்பரி நடாத்தி[8] கீர்த்தியை நிறுத்தி
வடதிசை வாகை சூடித் தெற்றிசை[9]

---

டது சக்கரக்கோட்ட மண்டலமாகும். இராசேந்திரன் என்னும் குலோத்துங்கன் இளவரசனுயிருந்த காலத்தில், திக்கு விசயம் செய்தற் கெண்ணி வடபுலம் நோக்கிச் சென்று, இதை யாண்ட தாராவர்ஷனைச் செயித்து, திறை செலுத்தச் செய்தான் என்பது வரலாறு, விக்கிரமத் தொழில் – வீரத்தொழில்; விக்ரமம் - வீரம்.

புதுமணம் புணர்ந்து - சயமகளை இளங்கோப் பருவத்து புது மணம் புணர்ந்து என்றபடி. அஃதாவது, குலோத்துங்கன இளவரசனுயிருந்த காலத்தில் வடபுலம் சென்று தன் வீரத் தொழிலால் சக்கரக்கோட்டம் முதலிய புதிய நாடுகளைச் செயித்து என்பது. மதவரை யீட்டம் - யானைகளின் தொகுதி; வரை - மலை; மலைபோன்ற யானை 'மதவரை' எனப்பட்டது.

வயிராகரத்து வாரி - வயிராகரம் என்னும் இடத்தில் கைப்பற்றி; வயிராகரம் என்பது, மத்தியமகாணத்திலுள்ளதோரூர். அங்கு யானைகளும், வைரச்சுரங்கங்களும் அதிகம் உண்டு என்பர். குலோத்துங்கன தன வடபுல யாத்திரையில அவ்வூரிலுள்ள எண்ணிறந்த யானைகளைக் கைப்பற்றினன் என்று தெரிகிறது; அயிநுனை - அயிர்முனை, கூரிய முனை; இங்கு, வாள் முனையைக் குறித்தது.

கொந்தள வரைசர்தந் - சாளுக்கிய அரசர்களுடைய; கொந்தளம் - மேலைச் சாளுக்கிய ராண்ட நாடு. குலோதத்துங்கன வடபுல யாத்திரையில் சாளுக்கியராண்ட பகுதியையும் தாககினன் என்று இதனுல் தெரிகிறது. தளம் - சேனை; இரிய - பின்வாங்க.

வாளுறை கழித்து - வாளெடுத்து; தோள்வலி காட்டி - போர் செய்து; போர்ப்பரி நடாத்தி - போர் செய்யும் குதிரையில் சென்று.

வடதிசை வாகை சூடி - வடக்குத் திசையில் பகைவர்களை வென்று வெற்றிமாலைச் சூடி; மத்திய மாகாணத்திலுள்ள வயிராகரத்தை எரியூட்டி அதிலுள்ள யானைகளைக் கைப்பற்றியதும், சக்கரக் கோட்ட மண்டலத்தையாண்ட தாராவர்ஷனைச் செயித்துத் திறை

தேமரு கமலப் பூமகள் பொதுமையும்
பொன்னி யாடையும் நன்னிலப் பாவை[10]
தனிமையுந் தவிர[11] வந்து புனிதத்[12]
திருமணி மகுட முரிமையிற் சூடி[13]
தன்னடி[14] யிரண்டுந் தடமுடி யாகத்
தொன்னில[15] வேந்தர் சூட முன்னை
மனுவா றுபெருக[16] கலியா றுவறப்ப[17]
செங்கோல் திசைதோறுஞ்[18] செல்ல வெண்குடை

---

கொண்டதும், கொந்தளர் சேனையை முறியவடித்ததும் குலோத்துங்கன் வடதிசையில் கொண்ட வெற்றிகளாகும். தெந்திசை - தென்றிசையிலுள்ள சோழநாட்டில்.

தேமரு கமலப்............தனிமையும் தவிர: வீரராசேந்திரன் இறந்த பின்னர் சோழநாட்டை ஆளுதற்குரியார் இல்லாமல், உள் நாட்டுக் கலகங்கள் உண்டாகத் தலைப்பட்டன; தெற்கே பாண்டிய மன்னர் போரிட்டு தங்கள் அடிமைத் தளையை நீக்க முயன்றனர். இவ்வாறு பொதுமையிலும், தனிமையிலும் கிடந்து வாடிய சோழ இராச்சியத்திற்குத் துணை செய்வான்வேண்டி வேங்கிநாட்டை யாண்ட இரண்டாம் இராசேந்திரன், தாய்வழி உரிமை பாராட்டி குலோத்துங்கன் என்னும் பெயரோடு சோழநாட்டிற்கு அரசனானான். அச்செய்தியை இவ்வடிகள் புலப்படுத்துகின்றன.

தேமரு கமலப் பூமகள் - இலக்குமி; இங்கு சோழ ராச்சியமாகிய செல்வத்தைக் குறித்து நின்றது. பொதுமை - பொதுத் தன்மை. பொன்னி - காவிரி; காவிரி நதி பாயப்பெற்ற சோழ நாடு 'பொன்னியாடையும் நன்னிலப் பாவை' எனப்பட்டது. தனிமை - உதவியற்ற நிலை; தவிர - நீங்க.

உரிமையில் சூடி-உரிமை கொண்டாடி முடி சூடி; குலோத்துங்கன் முதலாம் இராசேந்திர சோழனுக்குப் பௌத்திரனும், வீரராசேந்திரனுக்கு மருமகனுமாவானாதலின் சோழராச்சியத்திற் குரியவரில்லாத நிலையில், தாய்வழி யுரிமை கொண்டாடி முடிசூடினான்.

தந்நடி.............வேந்தர் சூட: தன் பாதங்களில் நிலவேந்தர் பலர் விழுந்து வணங்க; தடமுடி - கிரீடம், முன்னை - ஆதி.

மனுவாறு - மனு நெறி; கலியாறு வறப்ப - துன்பமாகிய தொடர் குறைய, கலியாறு துன்பக்கடல் எனினுமாம்.

செங்கோல் - ஆட்சி; திசைதோறும் - நாற்றிசையும்.

இருநில விளாக[18] மெங்கணுந் தனது[19]
திருநிழல்[20] வெண்குடை வெண்ணிலாத்[21] திகழ வொருதனி
மேருவிற் புலிவிளை யாட வார்கடற்
றீவாந் தரத்து[22] பூபாலர் திறைவிடுத்த[23]
கலஞ்சொரி களிறுமுறை முறை[24] நிற்ப விலங்கிய
தென்னவற்[25] கருந்தலை பருந்தலைத் திடத்தந்[26]
பொன்னகர்ப் புறத்திடைக் கிடப்ப இஞ்ஞாள்[27]
பிற்குலப் பிறைபோல் நிற்பிழை[28] யென்னுஞ்
சொல்லெதிர்க்[29] கோடிற் றல்லது தங்கை[30]

---

இருநில விளாகம் - உலகம். இருநில விளாகம் எங்கணும் வெண்குடை திருநிழல் வெண்ணிலா வெனத் திகழ என்று கொள்க.

ஒருதநி மேரு - ஒப்பற்ற மேருமலை; புலி விளையாட - புலிக் கொடி பறக்க; புலிக்கொடி சோழருக் குரியது.

வார்கடற் றிவாந் தரத்து பூபாலர்: கடல் நடுவணுளதாய தீவு களிலுள்ள அரசர்கள்; வார்கடல் - நீண்ட கடல். திறை விடுத்த - திறையாகச் செலுத்திய.

கலஞ்சோரி களிறு - மதக் களிறு; கலஞ்சொரி - கலமளவாக மதத்தைச் சொரியும். முறை முறை நிற்ப - வரிசை வரிசையாக நிற்ப; விலங்கிய-புகழ் விளங்கும்; பகைத்து வேறுபட்ட எனினுமாம்.

தேந்னவந் - பாண்டியன்; கருந்தலை - பெரிய தலை; பருந் தலைத்திட - பருந்து உண்ணும்படித் துணித்து என்பது.

பொனனகர்ப் புறத்திடைக் கிடப்ப: தென்னவன் கருந்தலை பொன்னகர்ப் புறத்திடை பருந்தலைத்திடக் கிடப்ப என்பது. பொனனகர் என்பது, கங்கைகொண்டசோழபுரத்தினைப் போலும். இது சாளுக்கிய விக்கிரமாதித்தனுக்குத் துணையாக திரிபுவன பாண்டியனுடன் குலோத்துங்கன நடாத்திய போராய் இருத்தல் வேண்டுமென்றும், அவனுடைய ஆட்சியின் ஐந்தாவது ஆண்டில் நடந்திருத்தல் வேண்டுமென்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். இஞ்ஞாள் - இதே சமயத்தில்.

பிறதுலப் பிறைபோல் - இளம் பிறைச் சந்திரனைப் போல, நிற்ப் பிழை - நிலையான குற்றம். சோல்லேதிர்க் கோடிற்றல்லது - சொல்லுக்குமாறுகக் கோடிற்று அல்லாமல்; அஃதாவது நிற்பிழை என்னும் சொல் பிழைபட்டதல்லாமல் என்பது.

வில்லெதிர்[31] கோடா விக்கலன் கல்லதர்[32]
நங்கிலி தொடங்கி மணலூர் நடுவித்[33]
துங்கபத்திரை யளவுற் றெங்கணும்[34]
பட்டவெங் களிறும்[35] விட்டதன்[36] மானமுங்
கூறிய[37] வீரமும் கிடப்ப வேறிய[38]
மலைகளு முதுகு நெளிப்ப விழிந்த
நதிகளுஞ் சுழன்றுடைந் தோட விழுந்த
கடல்களுந் தலைவிரித் தலமர[39] குடதிசைத்
தந்நா ளுகந்து தானும் தானையும்[40]
பந்நா ளிட்டமும்[41] பலபல முதுகும்
பயந்தெதிர்[42] மாறிய ஜெயப்பெருந்[43] திருவும்

---

தந்கை வில்லெதிர் கோடா விக்கலன் - தன்னுடைய கை வில்லின் குறிதவறாத விக்கலன்; விக்கலன் - விக்கிரமாதித்தன். கல்லதர் - குன்றுகளுக் கிடையிலுள்ள பாதை (Rocky roads); அதர் - வழி.

நங்கிலி துடங்கி மணலூர் நடுவிந்: குலோத்துங்கன் ஒரு படையுடன் வடக்கு நோக்கிச் சென்று விக்கிரமாதித்தன் தம்பி செயசிங்கன் ஆண்டுவந்த வனவாசியைக் கைப்பற்றினன்; அதனால் விக்கிரமாதித்தன் கோலார் ஜில்லாவிலுள்ள நங்கிலி என்னுமிடத்தில் அவனை எதிர்த்துப் போர் புரிந்தான். போரில் குலோத்துங்கன் வெற்றிகொண்டு விக்கிரமாதித்தனைத் துங்கபத்திரைக்கு அப்பால் போகத் துரத்திச் சென்றான். அங்ஙனம் துரத்திச் சென்றவன் இடையுள்ள மணலூர், அளத்தி முதலான இடங்களில் மீண்டும் அவனைப் புறங்கண்டான் என்பது. இப்போர் குலோத்துங்கனது ஆட்சியின் பதினொன்றாம் (கி. பி. 1081) ஆண்டில் நடைபெற்றிருக்க வேண்டுமெனபர்.

துங்கப்பத்திரை யளவுற்று எங்ஙனும்: நங்கிலி தொடங்கித் துங்கபத்திரை அளவாகவுள்ள எல்லா இடங்களிலும் என்பது. இது இறுதியில் துங்கபத்திரை நதிக்கரையில் நடந்த போரைப் பற்றியது.

பட்ட வெம்பரி: இறந்துபட்ட யானைகள்; விட்ட தந் மானம் - அவமானம்; கூறிய வீரமும் கிடப்ப - வீரக் கூற்றும போர்க்களத்தே நிற்க; ஏறிய மலைகளும் முதுத நெளிப்ப - ஏறிச் சென்ற மலைகளிலெல்லாம பாதைகள் உண்டாக. இழிந்த நதிகள் - சேனைகள் இறங்கிய நதிகள்.

கடல்களும் தலைவிரித் தலமர-கடல்கள் ஒலிக்க; இங்கு சேனைத் திரளைக் குறிக்கும்.

குடதிசைத் தந்நா ளுகந்து............கைக்கோண் டீண்டிய புகழொடு: துங்கப்பத்திரைக் கரையில் நடந்த போரில், விக்கிரமாதித்தனும் அவன் தம்பி சயசிங்கனும் தோல்வியுற்று ஓடி ஒளிந்தனர்.

பழியிகந்து குடுத்த[44] புகழின் செல்வியும்
வாளா ரொண்கண் மடந்தைய ரீட்டமும்
மீளாது குடுத்த[45] வெங்கரி நிரையும்
கங்கமண் டலமுஞ் சிங்கண மென்னும்[46]
பாணி யிரண்டு மொருவிசைக் கைக்கொண்டு[47]
இணைவியப்[48] புகழொடும்[49] பாண்டி மண்டலங்
கொள்ள[50] திருவுளத் தடைத்தருளி வெள்ள[51]
வருபரி[52] தரங்கமும் பொருபரிக் கலங்களும் பொல்[53]
தந்திர வாரியும் முடைத்தாய் வந்து[54]
வடகடல் தெற்கடல்[55] படர்வ துபோல்[56]

---

பொருட் குவியலும், மடந்தைய ரீட்டமும், எண்ணிறந்த யானைகளு மன்றி, கங்கமண்டலம், சிங்கணம் என்னும் இருநாடுகளும் குலோத்துங்கன் வசமாயின என்பது.

குடதிசைத்து - மேலைத்திசையில்; பந்நாளீட்டமும் பலபல முதுகும் - பல நாட்களாகப் புறங்காட்டிய வீரர்களும்; பயந்தெதிர் மாறிய - பயந்து பின் வாங்கிய; ஜயபெரும் திரு - வெற்றி, வானா ரொண்கண் மடந்தையர் - வாள்போன்ற கூரிய கண்களையுடைய பெண்கள். ஈட்டம் - கூட்டம், தொகுதி; மீளாது கொடுத்த - மீட்க இயலாது விட்ட; வெங்கரி நிரை - யானைக் கூட்டங்கள். சிங்கணம் - சிங்கணம் என்னும் நாடு; இதனைக் கொண்கானம் என்றும் கூறுவர். பாணி இரண்டும் - நாடுகள் இரண்டையும்.

இணைவிய - பொருந்திய, நிறைந்த. திருவுளத் தடைத்தருளி - எண்ணங் கொண்டு; வெள்ளவரு பரி தரங்கமும் - வெள்ளமாய் வரும் குதிரைகளாகிய அலைகளும; வெள்ளம் - கூட்டம். பொருகரிக் கலங்கள் - போர் செய்யும யானைகளாகிய கலங்களும்; கலம் - மரக்கலம். தந்திரவாரியும் - போர் வீரர்களாகிய கடலும். இங்கு குலோத்துங்கன் காலாட்படை கடலாகவும், குதிரைப் படை அக் கடலிடை எழும்பும் அலைகளாகவும், யானைப்படை மரக்கலங்களாகவும் உருவகிக்கப்பட்டுள்ளன.

வடகடல் தெற்கடல் படர்வதுபோல் - வடகடல், தென்கடல் மேல் படர்வது போல, வடக்கேயுள்ள சோழர்படை தெற்கேயுள்ள பாண்டியர்படைமேல் பாய்ந்து என்பது.

தன்பெருஞ் சேனையை யேவிப்[57] பஞ்சவர்
ஐவரும் பொருத போர்களத்[58] தஞ்சி
வெருவிநெளித்[59] தோடி யரணெனப்[60] புக்க
காடறத் துடைத்து நாட்டடிப்[61] படுத்து
மற்றவர் தம்மை வனசரர்[62] திரியும்
பொச்சை[63] வெஞ்சுர மேற்றி[64] கொற்ற
விஜய ஸ்தம்பம்[65] திசைதொறும் நிறுத்தி
முத்தின் சிலாபமு முத்தமிழ்[66] பொதியிலும்
மத்தகவெங் கரிபடு மையச் சையமும்[67]
கந்நியுங்[68] கைக்கொண் டருளி தென்னாட்[69]

---

பஞ்சவர் ஐவரும் பொருத: வீரராசேந்திரதேவன் காலம் வரை சோழமன்னர்களின் ஆட்சிக்குட்பட்டு திறை செலுத்தி வந்த பாண்டியர்கள், அதிராசேந்திரன் பட்டமெய்தியதும், சுயாதீனமடைந்து பாண்டிய நாட்டை ஐந்து பிரிவுகளாய்ப் பிரித்து தனிதனி யாட்சி புரிந்து வந்தனர். அவர்களே 'பஞ்சவர் ஐவர்' எனப்பட்டனர். அவர்களைத் தன்னடிப்படுத்த குலோத்துங்கன் கி. பி. 1084 ஆண்டு படையெடுத்து வாகை சூடினான். பாண்டியர் ஐவரும் புறங்காட்டி ஓடி ஒளிந்தனர். குலோத்துங்கன் தான் வென்ற பகுதிகளில் வெற்றித் தூண்களை நாட்டினான். கோட்டாறு என்னும் இடத்தில் தன் படைகள் தங்குவதற்கு ஒரு படைவீடு அமைத்தான். இப்போரில் இவன் கைப்பற்றிய நாடுகளுள் முத்துச்சலாபத்திற்குரிய மன்னார் குடாக் கடலைச் சார்ந்த நாடும், பொதியில் கூற்றமும், கன்னியாகுமரிப் பகுதியும் சிறந்தவைகளாகும்.

வெருவி - பயந்து; நெளித்தோடி - புறங்காட்டி ஓடி; அரணெனப் புக்க காடு அறத் துடைத்து - தக்க காவல் என்று புகுந்த காட்டை அழித்து; நாட்டடிப் படுத்து - நாட்டைத் தனக்கு அடிமைப் படுத்தி.

வனசரர் - வேடர்; பொச்சை வெஞ்சுரம் - சிறு குன்றுகளையுடைய பாலைவனம்; ஏற்றி - துரத்தி; கொற்ற விஜய ஸ்தம்பம் - வெற்றித் தூண்கள்.

முத்தமிழ் பொதியிலும்: முத்தமிழ் பேசப்படும் பொதியில் கூற்றமும்; கூற்றம் - நிலப்பகுதி. மத்தகவெங் கரிபடு - யானைகள் நிறைந்த; மையச் சையமும் - மேலைத் தொடர்ச்சி மலைப்பகுதியும்; சையம் - மலை.

கந்நி - கன்னியாகுமரிப் பகுதி; தென்னாட் டெல்லை காட்டி - கன்னியகுமரியைச் சோழநாட்டின் தெற்கு எல்லையாகக் காட்டி என்பது.

டெலைக் காட்டி குடமலை நாட்டுள்ள[70]
சாவெ[71] றெல்லாந் தனி[72]விசும் பேற
மாவெ றியதந்[73]வருதினித் தலைவரை[74]
துறுகலர் தலைய[75] கோட்டா றுள்ப்பட[76]
நெறிதொறு நிலைகள்ளிட் டருளி[77] திறல்கொள்
வீரஸிம் ஹாஸநம்[78] திரியவிட் டருளி
பொங்கொளி[79] ஆரமுந் திருப்புயத் தலங்கலும் பொல்[80]
வீரமுந் தியாகமும் விளங்க பார்மிசை[81]
மேவலர் வணங்க வீரஸிம் ஹாஸநத்து[82]
அவனி[83]முழு துடையாளொடும் வீற்றிருந்தருளிய

---

குடமலை நாடு - கொங்கு நாடு; சாவெறு - சாவேறு, பகையர சனைச் சூழ்ந்து காக்கும் படைமீது ஒரு முகமாய்ப் பாய்ந்து ஊடறுத்துச் செல்ல முயன்று அந்நிலையில் உயிர் துறத்தலையே விரதமாகக்கொண்ட வீரர்தொகுதி (heroes); தனிவிசும்பேற - மடிய.

மா - குதிரை; வருதினித் தலைவர் - படைத் தலைவர்; துறுகலர் - தலைய - பகைவர் அழிய; கோட்டாறு - கன்னியாகுமரியை யடுத்த ஒரு நகர்; இதில் குலோத்துங்கன் படைவீடு ஒன்றிருந்தது.

நெறிதொறு நிலைகள்ளிட்டருளி: குலோத்துங்கன் படை எடுத்துச்சென்ற வழிதோறும் படைவீடு அமைத்து என்பது. திறல் கோள் - வெற்றி கொண்ட; திரிய - விளங்க. ஆரம் - முத்துமாலை. அலங்கல் - பூமாலை; ஆரமும் அலங்கலும் போல வீரமும் தியாகமும் விளங்க என்றபடி.

பார்மிசை - உலகில்; மேவலர் - பகைவர்

அவனி முழுதுடையாளோடும் - பட்டத்தரசியோடும் என்பது. குலோத்துங்கன மனைவியருள் பட்டத்தரசியாக விளங்கியவளைப், 'புவனமுழுதுடையாள்' என்றும், மற்றையோரை 'எழுலகுடையாள்' 'திரிபுவன முடையாள்', 'உலகுடையாள்' என்றும் அக்காலத்தில் சொல்லி வந்தனரென்று கல்வெட்டுகளால் தெரிகிறது. அவன மனைவியர் மூவருள் மதுராந்தகி என்பாள் அவனாட்சியின் இருபத்தாறும் ஆண்டளவும் பட்டத்தரசியாயிருந்து இறந்தனள். அவளுக்குப் பின் அவன மனைவி தியாகவல்லி என்பவள் பட்டத்தரசி யாயினள். இக்கல்வெட்டு அவனாட்சியின் இருபதாம் ஆண்டததாதலால், இங்கு குறிக்கப்படுபவள் மதுராந்தகி என்பாள் என்று அறிக.

கோராஜ கேசரி வர்மரான[84] திரிபுவனச் சக்கரவத்திகள்[85] ஸ்ரீ கொலாத்துங்க[86] சோழதேவர்க்கு யாண்டு—

## செய்தி.

இருபதாவது, உத்தொங்க தொங்க வளநாட்டுக் குந்றக் கூற்றத்து ப்ரஹ்மதேயம் சிறுபழூவூர் ஸபையோம். விருத ராஜ பயங்கர வாணகோ வரையர் தங்கள்ளாச்சி சோழகுல சுந்தரந் விச்சாதிரியாழ்வார்க்கு ஸபை விலையாக விற்றுக் குடுத்த நிலமாவது —

ராஜேந்திரசோழ வாய்க்காலுக்கு வடக்கு, பவித்திர மாணிக்க வதிக்குக் கிழக்கு —முதல கண்ணாற்று இரண்டாம் சதுரத்து நிலம் நாலுமாவில் வடக்கடைய் நிலம் ஒருமாவில்

---

ராஜகேசரி வந்மன்: இது குலோத்துங்கன் பட்டப்பெயர். இவனுக்குமுன் முடிசூடிய அதிராஜேந்திரன் பரகேசரி என்று அழைக்கப்பட்டான்.

திரிபுவன சக்கிரவத்திகள் - சோழ அரசர்கள் பெரும்பாலும் உடையார் என்றே அழைக்கப்படுவர். குலோத்துங்கன் கால முதல் அவர்கள் 'திரிபுவன சக்கரவர்த்திகள்' என்றும் அழைக்கப் பட்டனர். திரிபுவனம் என்பது சேர, சோழ, பாண்டிய நாடுகளைக் குறிக்கும்.

குந்றக் கூற்றம் = குன்றக் கூற்றம்; கூற்றம் - வளநாட்டின் பகுதி; இது நாடு என்றும் அழைக்கப்படும். ப்ரஹ்மதேயம் - பிராமணருக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட ஊர்; இங்கு சிறுபழூவூர் ஒரு பிரமதேயமாக இருந்தது போலும்

விருதராஜ பயங்கர வாணகோவரையர்: விருதராச பயங்கரன், வாணகோவரையன் என்பன குலோத்துங்கன் பட்டப் பெயர்கள். தங்கள்ளாச்சி - தங்களாட்சியிலடங்கிய, சோழகுல சுந்தரந் விச்சாதிரியாழ்வார் - இவன் சோழராட்சிக் குட்பட்ட ஒரு தலைவன் போலும். இவனே சிறுபழூவூர் சபையினரிடம் நிலம் விலைக்கு வாங்கியவன்.

ஸபை - சபையோர்; விற்றுக் குடுத்த - விலையாகக் கொடுத்த.

வதி - வழி; கண்ணாறு - நீர்ப்பாசன வாய்க்கால்; நஞ்செய் நிலப் பிரிவு எனினுமாம் இரண்டாம் சதுரத்து நிலம் — இரண்டாவது சதுர நிலம்; சதுரமென்பது, அக்காலத்திய புஞ்சை நிலப் பிரிவின் ஒரு பெயர் போலும்.

கீழ்க்கடைய் நிலம் அரைமாவும், இவ்வதிக்குக் கிழக்கு, இவ்வாய்க்காலுக்கு வடக்கு—இரண்டாங் கண்ணாற்று இரண்டாம் சதிரம் நிலம் நாலுமாவில் வடக்கடைய் நிலம் ஒருமாவில் மேற்க்கடைய் நிலம் அரைமாவும் ஆக நிலம் ஒருமா. இந்நிலம் ஒருமாவும் இவருக்கு விற்றுக் கொள்வதாக எம்மில் இசைஞ்ச விலைப்பொருள் அந்றுடு னல்க்காசு ஒந்று. இக்காசு ஒந்றும் ஆவணக்களியெ கைச் செல்லறக்கொண்டு விற்று விலையாவணம் செயிது குடுத்தோம் ப்ரஹ்மதேயம் சிறு பழூர் ஸபையோம். இந்நிலம ஒரு மாவுக்கும் இதுவே விலையோலை ஆவதாகவும், இதுவே பொருள் மாவறுதிப் பொருள் சிலவோலை யாவதாகவும், இதுவல்லது வேறுபொருள் மாவறுதிப் பொருள்ச் சிலவோலை காட்டக் கடவர் அல்லாதாராகவும், இப்படி இசைஞ்சு இக்காசு ஒந்றும் கொண்டு இந்நிலம் ஒருமாவும் விலைக்கற விற்று பொருளறக் கொண்

---

மா - ஒரு நிலஅளவை; $\frac{1}{20}$ வேலி; 100 குழி: வடக்கடைய் - வடபக்கம்; கீழ்க்கடைய் - கீழ்ப்பக்கம். இவ்வதிக்குக் கிழக்கு - பவித்திர மாணிக்க வதிக்குக் கிழக்கு; இவ்வாய்க்கால் - இராசேந்திரசோழ வாய்க்கால். இரண்டாங் கண்ணாறு - இரண்டாவது நீர்ப்பாசன வாய்க்கால் சதிரம் - சதுரம்.

மேற்கடைய் - மேலைப்பக்கம், விற்றுக் கொள்வதாக - விலைக்குக் கொடுக்க; எம்மில் இசைந்த விலைப்பொருள் - யாம விரும்பிய விலை. அந்றுடு னல்க்காசு ஒந்று - நாளொன்றுக்குப் பொற்காசு ஒன்று; காசு என்பது ஒரு பழைய பொன் நாணயம்.

ஆவணக் களியே - ஆவணக் களரியில், பத்திரம் பதிவு செய்யுமிடத்தில், கைச் செல்லறக் கொண்டு - கையால் கொடுக்கப் பெற்று; விலையாவணம் செயிது - விலைப்பத்திரம் எழுதி; ஆவணம் - பத்திரம்.

விலையோலை - விலைப்பத்திரம், பொருள் - நிலப்பொருள், மாவறுதிப் பொருள் - ஒரு மா நிலத்தின் முடிந்த விலைப்பொருள். சிலவோலை - சிலையோலை, கல்வெட்டுச் சாசனம்

இப்படி இசைந்து - இவ்வாறு சம்மதித்து விலைக்கற விற்று பொருளறக் கொண்டோம் - ஒரே விலைக்கு விற்ற விற்ற பொருள் முழுவதையும் பெற்றுக் கொண்டோம்.

அக்காலத்தில் ஒரு நிலத்தை விற்பதற்கு, ஆவணக்களரியின் மூலம் விலைப்பொருள் பெற்று, ஆவணம் செய்து கல்வில் வெட்டுவது

டோம் சிறுபழூர் ஸபையோம். இவர்கள் பணிக்க இப் பிரமாணம் எழுதினேன். மத்தியஸ்தன் பழூருடையான் ஆயிரத்திருநூற்றுவன்முடி கொண்டானேன் இவை என்னெழுத்து. இப்படிக்கு சாந்தமங்கலத்து பாலாசிரியன் இலக்குவணன் கூத்தப்பனேன் இவை என்னெழுத்து. இப்படிக்கு பழூர் சவாந்தி நாரணனேன் இவை என்னெழுத்து. இது சாந்தி பாலாசிரியன் வீரநாராயணனது. இது சாவந்தி நாராயணன் மாறன் இப்படி அறிவேன் இவ்வூர் வீரசோழ விண்ணகராழ்வார் கோயில் திருவாராதனை பண்ணும் நாராயணன் திருவாயிக் குலமுடையானேன். இப்படி அறிவேன் இவ்வூர் கருமான். இது பந்மா ஹேஸ்வர ரக்ஷை. உ.

---

வழக்கம் என்று இச்சாசனத்தால் தெரிகிறது.

இவர்கள் பணிக்க - சிறுபழூர்ச் சபையினர் கட்டளையிட; பிரமாணம் - பத்திரம் மத்தியஸ்தந் - ஊர்க்கணக்கதான் சிறுபழூர் சபையோர் விலவிக்கிரய பத்திரம் எழுதியவன் அவ்வூர்ச்சபை மத்தியஸ்தனை ஆயிரத்திருநூற்றுவன் முடிகொண்டான் என்பவனுவான். கையொப்பமிட்டவர்கள் சாந்தமங்கலம பாலாசிரியன் இலக்குவணன் கூத்தப்பன், சிறுபழூர் சவாந்தி நாரணன், சாந்தி பாலாசிரியன் வீரநாராயணன், சாவாந்தி நாராயணன் மாறன், நாராயணன் திருவாய்க்குல முடையான், அவ்வூர் கருமான் ஆகிய அறுவராவர்.

சவாந்தி - சாந்தி, சாந்தி யடிகள் கோயில் பூசகன் (Temple Priest) என்பது பொருள். இது சாவாந்தி என்றும் வழங்குகிறது. பாலாசிரியன் - பாலர்க்குக் கற்பிக்கும் ஆசிரியன் (Teacher of Children); 'சாந்தி பாலாசிரியன்' என்ற தொடரால் அக்காலத்தில் கோயில்களில் பூசைசெய்பவனே பாலர்களுக்குக் கல்வி கற்கும் தொழிலும் ஈடுபட்டிருந்தான் என்று தெரிகிறது.

வீரசோழ விண்ணகராழ்வார் கோயில்: இது சிறுபழூரிலிருந்த விஷ்ணுகோயிலின் பெயர். இப்பொழுது வாட்ட மூலேசுவரர் கோயில் என்று அழைக்கப்படுகிறது. இதிலிருந்து அக்காலத்தில் பூசைசெய்து வந்தவன் நாராயணன் திருவாயிக்குல முடையான் என்போன. திருவாய்க்குல முடையான் என்பது, அக்காலப் பட்டப் பெயர்களில் ஒன்றுபோலும்.

கருமாந் - கருமகன், கொல்லன்; பந்மா ஹேஸ்வர ரக்ஷை - அடியார் கூட்டம் காக்க.

(பாடபேதம்) 1. பொன்னேமி 2. தன்னேமி 3. சயமகளை 4. சக்கரக்கோட்டத்து 5. புதுமனம் 6. யயிர்முளைக் 7. கொக் தன வரசர் 8. நடாத்திச் 9. தென்றிசை 10. கனனிலப் பாவை 11. தவிரப் 12. புந்தத் 13. சூடித் 14. தன்மடி 15. தொன் னில 16. பெருகக் 17. வறப்பச் 18. திசைதொறுஞ் 18. வளாக 19. தனுது 20. ......... 21. வொருதனி 22. நீபாக் தரத்துப் 23. திறைவிடு 24. ......... 25. தென்னவன் 26. இடத் தன் 27. விர்ாள் 28. திற்பிழை 29. சொல்லெதிர் 30. தன்கை 31. வில்லது 32 வேள்குலத் தரசர் 33. கடுவின் 34. 'கங்கிலி துடங்கி...... எங்கணும்' என்பதற்குப் பதிலாக, 'அளத்தியிலிட்ட களிற்றின திட்டமும்' என்ற பாடம் சில பிரதிகளில் காணப்படுகிறது. 35. வெம்கரியும் 36. விட்டதன் 37. கூறின 38. வேறின 39. தலமாக் 40. தானும் தானையும் 41. பன்னு ளிட்ட 42 பயத்தெதிர் 43. சயப்பெருந் 44. கொடுத்த 45. கொடுத்த 46. மென்னும் 47. கைக்கொண் 48. டண்டிய 49. புகழொடு 50. கொள்ளத் 51 தடைத்து வெள்ளம் 52. வரு பரித் 53. கலங்களும் 54. முடைத்தாயி வந்து 55. தென்கடல் 56. போலத் 57. தன்பெருஞ் சேனையை யேவிப் 58. போர்க் களத் 59. வெரிகளித் 60. யரணெனப் 61. நாட்டில் 62 வன சார் 63. பொற்றை 64. மேற்றிக் 65. விசயத்தம்பந் 66. முத் தின் சிலாபமும் முத்தமிழ்ப் 67. மய்யச்சைமுைம் 68. கன்னியுங் 69. தெனனுட் 70. டெலலை காட்டிக் கடன்மலை நாட்டுன 71 சாவே 72. தனி 73. மாவேறிய தன் 74. தலைவரைக் 75 குலயக் 76 கோட்டாறட்பட 77. நிலைகளிட்டருளித் 78. வீரசிம்மாசனந் 79. ............ 80. போல 81. விளங்கப் பார்தொழச் 82. வீரசிம்மாசனத்து 83. அவனி.

---

## 9. வில்லவராயன் சாசனம்.*

### முகவுரை.

வில்லவராயன்† என்போன், ஒரு நிலத்தை விலைக்கு வாங்கியதைப்பற்றிய சாசனம் 'வில்லவராயன் சாசனம்' எனப்

---

* இச்சாசனம் தென்னிந்திய சாசனத்தொகுதிகளில் மூன்று வது தொகுதியின் இரண்டாவது பகுதியைச் சேர்ந்தது.

† இவனுடைய முழுப்பெயர் மூலையன் அருண்மொழித் தேவ னை வில்லவராயன் என்பது. வளம்பகுடி அரையன் என்பது இவனது தந்தை பெயர்; இவனுக்குச் சொந்த ஊர் செயசிங்க குல கால வளநாட்டு, மீசெங்கிளி நாட்டு வளம்பகுடி என்பதாகும்.

பட்டது. திருச்சிராப்பள்ளிக்கு அருகிலுள்ள சம்புகேசு வரம் [illegible] ரின் சம்புகேசுவராலயத்து || இரண்டாவது பிராகாரத்தின் கிழக்குச் சுவரில் இது காணப்படுகிறது.

இதன் முற்பகுதியில் குலோத்துங்கன் வெற்றிகளையும், கன்னியாகுமரி முதல் துங்கபத்திரை வரையுமிருந்த அவனது நாட்டுப் பெருக்கினையும் கூறும் மெய்க்கீர்த்தி அமைந்துள்ளது. பிற்பகுதியில் வில்லவராயன் என்போன், கோயில் நிலங்களில் சிலவற்றை வாங்கி, அதன் வருமானத்திலிருந்து கோயில் தொழுகைக்கு வேண்டும் திருமஞ்சனம் திருவமுதுக்கும், இடபவாகனதேவர் நம்பிராட்டியோடும் இரண்டு திருநாளிலும் இரண்டு நாள் திருவிழா எழுந்தருளுகைக்கும் ஆகும் செலவுகளைக் கொடுத்துவந்த செய்தி கூறப்படுகிறது. சோழ அரசனான முதலாம் குலோத்துங்கனுடைய ஆட்சியின் நாற்பத்தேழாவது ஆண்டில் இது நடைபெற்றது.

எனவே, இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 1117 ஆம் ஆண்டு என்னலாம்.

---

## முதற் குலோத்துங்கன்: மெய்க் கீர்த்தி

ஸ்வஸ்தி ஸ்ரீ —

புகழ்சூழ்ந்த புணரி யகழ்சூழ்ந்த புவியிற்

---

†† இதன் மூந்திய பெயர் திருவானைக்கா என்பது. ஆனை - யானை; கா - சோலை.

|| இதன் மூந்திய பெயர் திருவெண்ணாவல் என்பது.

ஸ்வஸ்தி ஸ்ரீ: இது சாசனங்களில் மங்கலம் குறித்து வரும் வடமொழித் தொடர்.

புகழ் சூழ்ந்த புணரி யகழ் சூழ்ந்த புவியில்: முதலாம் குலோத்துங்கன் சாசனங்களுள் சிலவற்றில் வரும் மெய்க்கீர்த்தியின் தொடக்கம் இது. புணரி - கடல்; அகழ - அகழி.

பொன்னேமி[1] யளவுந் தன்னேமி[2] நடப்ப
விளங்கு சயமகளை யிளங்கோப் பருவத்து[3]
சக்கர கோட்டத்து[4] விக்கிரமத்[5] தொழிலாற்
புதுமணம் புணர்ந்து மதவரை யீட்டம்
வயிரா கரத்து வாரி யுயிர்முனைக்
கொந்தள வரசர் தங்கள மிரிய
வாளுறை கழித்து[6] தோள்வலி காட்டிப்
போர்ப்பரி நடத்திக் கீர்த்தியை நிறுத்தி
வடதிசை வாகை சூடித் தென்றிசைத்[7]
தேமரு கமலப் பூமகள் பொதுமையும்
பொன்னி[8] யாடை நன்னிலப்[9] பாவையின்
தனிமையுந் தவிரப் புனிதத் திருமணி
மகுட முரிமையிற் சூடித்
தன்னடி[10] யிரண்டுந் தடமுடி யாகத்

---

பொந்நேமி யளவும் - பொன் மலையாகிய மேருவரையும்; தந்நேமி - தன் ஆணை; சயமகள் - வெற்றி யென்னும் பெண்; இளங்கோப்பருவம் - இளவரசனாயிருந்த காலம்.

சக்கர கோட்டம்: இது மத்திய மாகாணத்திலுள்ள வத்ஸ ராச்சியத்திலுள்ளது; இதனைக் குலோத்துங்கன் காலத்திலாண்டவன் தாராவர்ஷன் என்பவனாகும். விக்ரமத் தொழில் - வீரத் தொழில்.

புதுமணம் புணர்ந்து - வெற்றிகொண்டு; மதவரை யீட்டம் - யானைகள்; வயிராகரம்: இது சக்கரக்கோட்ட மண்டலத்தை யடுத்திருந்த ஒரு ஊர்; குலோத்துங்கன் இதனை எரியூட்டி, இங்குள்ள யானைகளைக் கைப்பற்றினான்.

கொந்தளவரசர் - சாளுக்கிய மன்னர்; மேலைச் சாளுக்கிய மன்னனான விக்கிரமாதித்தன் ஆட்சிக்குட்பட்ட பல சிற்றரசர்கள் இருந்தனர்; அவர்களில் கொந்தள அரசர்களும் ஒரு சிற்றரச பரம்பரையினராகும். இவர்களை நுளம்ப பாடியை ஆண்ட பாண்டிய மன்னர் என்பர் இக்கால ஆராய்ச்சியாளர்.

தேமரு கமலப்பூமகள் - சோழ ராச்சியம்; பொந்நியாடை நந்நிலப்பாவை - காவிரி நதி பாயும் சோழநாடு

மகுடம் உரிமையில் சூடி: சோழ நாட்டிற்குரிய மகுடத்தைத் தாய்வழி உரிமையோடு சூடி. தந்நடி......... வேந்தர் சூட: தனது

தொல்நில[11] வேந்தர் சூட முன்னை[12]
மனுவாறு பெருக[13] கலியாறு வறப்ப[14]
செங்கோல் திசைதொறுஞ் செல்ல வெண்குடை
இருநில வளாக மெங்கணுந் தனது[15]
திருநிழல் விண்ணிலாத்[16] திகழ வொருதனி[17]
மேருவிற் புலிவிளை யாட வார்கடற்
றீவாந் தரத்துப்[18] பூபாலர் திறைவிடுக்க[19]
கலஞ்சொரி களிறுமுறை நிற்ப விலங்கிய
தென்னவன்[20] கருந்தலை பருந்தலைத் திடக்கந்[21]
பொன்னகர்ப்[22] புறத்திடைக் கிடப்ப விரள்[23]
பிற்குலப் பிறைபோல் நிற்பிழை யெங்னுஞ்[24]
சொல்லெதிர் கோடிற் றல்லது தங்கை[25]
வில்லது கோடா வெளகுலத் தரசர்
அளத்திய[26] விட்ட களிற்றின திட்டமும்

---

ஆட்சியினை வேந்தர் பலர் ஏற்றுத் திறை செலுத்த; முந்னை மனுவாறு: ஆதி மனுநெறி. இருநில வளாகம் - உலகம்.

மேருவில் புலி விளையாட; மேரு மலையில் புலிக்கொடி பறக்க; அதாவது மேருமலை வரை தன் ஆட்சி நடக்க என்பது. தீவாந்தரத்துப் பூபாலர்: கடலில் தீவுகளிடையிருந்து ஆளும் அரசர்கள். கலஞ்சொரி களிறு - மதயானை.

விலங்கிய தெந்னவந்: தன்னுணையை மறுத்த பாண்டியன். பருந்தலைத்திட - பருந்துகள் உண்ண. தந்கை வில்லது கோடா வேழகுலத் தரசர்: வில் வைத்துக்குறி தவறாது எய்யும் சாளுக்கிய குல மன்னர் என்பது. வேழ குலமென்பது, வேள்குல மென்றும், வேளகுல மென்றும் சாசனங்களில் காணப்படுகிறது.

அளத்தியவிட்ட - அளத்தியில்விட்ட; அளத்தி என்னுமிடத்தில் விட்டுப்போன. நங்கிலி என்னுமிடத்தில் நடந்த போரில் குலோத்துங்கன் விக்கிரமாதித்தனைத் துங்கபத்திரை நதிவரைத் துரத்திச் சென்றான். அங்ஙனம் துரத்திச் சென்றவன், இடையிலுள்ள மணலூர், அளத்தி முதலான இடங்களிலும் அவனைப் போரில் புறங்கண்டான் என்பது வரலாறு.

பட்டவெம் பரியும் விட்டதர்[27] மானமுங்
கூறின வீரமுங் கிடப்ப வேறின
மலைகளு முதுகு நெளிப்ப இழிந்த
நதிகளுஞ் சுழன்றுடைந் தோட[28] எழுந்த
கடல்களுந் தலைவிரித் தலமர[29] குடதிசைத்
தந்நா ளுகந்[30] தாறுந் தானையும்[31]
பந்நா[32] ளிட்ட பலபல முதுகும்
பயந்தெதிர் மாறின[33] ஜயப்பெருந்[34] திருவும்
பழியுகந்து[35] துறந்த புகழின்[36] செல்வியும்
வாளா ரொண்கண் மடந்தைய ரீட்டமும்
மீளாது துறந்த[37] வெங்கரி நிரையும்
கங்கமண் டலமுஞ் சிங்கண மென்றும்[38]
பாணி யிரண்டு மொருவிசைக் கைக்கொண்
டீண்டிய புகழொடு பாண்டி மண்டலங்
கொள்ளத் திருவுளத் தடைத்து வெள்ள[39]
வருபரித் தரங்கமும் பொருபரிக் கலங்களும்
தந்திர வாரியு முடைத்தாய் வந்து

---

வெம்பரியும் - கொடிய குதிரைப்படையும்; வீரமும் கிடப்ப - மானத்தோடு வீரமும் சொல்லளவில் நிற்ப. மலைகளும் முதுகு நெளிப்ப - நதிகளோடு மலைகளும் கடந்து செல்வதற்கு இடங் கொடுப்ப.

எழுந்த கடல்களுந் தலைவிரித் தலமர - எழுந்த சேனைத் திரளும் தோலவியுற்று வருந்த. பந்நாளிட்ட பல பல முதுகும் ... ... ... ஜெயப் பெருந்திருவும்: பல நாட்களாக போரில் புறங்காட்டிய பல வீரர்கள் பயந்து எதிரி பக்கமாகச் சேர்ந்ததாகிய வெற்றியும் என்பது.

மீளாது துறந்த - மீட்க இயலாது விட்டுவிட்ட. நிரை - கூட்டம், தொகுதி. பாணி - நாடு; ஒரு விசை - ஒரே தடவையில். ஈண்டிய - மிகுந்த; திருவுளத்தடைத்து - எண்ணங்கொண்டு; வெள்ளவரு - வெள்ளம்போல வருகிற, மிகுதியாக வரும். தரங்கம் - அலை; பொருபரி; இஃது 'பொருகரி' என்றிருத்தல் வேண்டும்; போர் செய்யும் யானை என்பது இதன் பொருள். கலம் - மரக்கலம்.

தந்திரவாரி - காலாட் படையாகிய கடல்; தந்திரம் - காலாள் படை; வாரி - கடல்.

வடகடல் தென்கடல்[40] படர்வது போலத்
தன்பெருஞ்[41] சேனையை யேவிப் பஞ்சவர்
ஐவரும் பொருத போர்களத் தஞ்சி
வெருவெளித் தோடி[42] யரணகப்[43] புக்க
காடறத் துடைத்து நாட்டடிப்[44] படுத்து
மற்றவர் தம்மை வனசரர் திரியும்
பொச்சை[45] வெஞ்சுர மேற்றி[46] கொற்ற
விசய ஸ்தம்பந்[47] திசைதொறும் நிறுத்தி
முத்தின்[48] சலாபமு முத்தமிழ்[49] பொதியிலும்
மத்தவெங் கரிபடு மய்யச் சையமுங்[50]
கன்னியுங்[51] கைக்கொண்டு புனிதத்[52] தென்னாட்[53]
டெல்லைக்[54] காட்டிக் குடமலை நாட்டுள்ள[55]

---

வடகடல் தேந்கடல் படர்வது போல - வடகடல் தென்கடல் மீது பாய்வது போல; வட கடலும் தென கடலும் கலப்பதுபோல வெனினுமாம்.

பஞ்சவர் ஐவர்: இதற்குரிய குறிப்புரையை முந்திய சாசனக் குறிப்புரையிடத்துக் காண்க. வெரு - வெருவி, பயந்து; நெளித்து- பின் வாங்கி.

காடறத் துடைத்து - காடு முழுவதையும் அழித்து. நாட்டடிப் படுத்து - நாட்டைத் தன்வசப்படுத்தி. வனசரர் - வேடர்; வனத்தில் நடமாடுபவர் என்பது இதன் சொற் பொருள்.

போச்சை - பொற்றை, சிறு குன்று; வெஞ்சுரம் - பாலை நிலப் பகுதி. ஏற்றி - துரத்தி. கோற்றம் - வெற்றி.

விசயஸ்தம்பம் - வெற்றிக் குறிகுறியாக நாட்டும் தூண்கள்; கந்நி - கன்னியாகுமரிப் பகுதி.

முத்தின் சலாபமும்......... கந்நியும் கைக்கோண்டு: பாண்டிய நாட்டுப் போரில் குலோத்துங்கன் முத்துச்சலாபத்திற்குரிய மன்னார்குடாக் கடலைச்சார்ந்த நாட்டையும், பொதியில் கூற்றத்தையும், மேலைமலைத் தொடர்ப் பகுதியையும், கன்னியாகுமரிப் பகுதியையும் கைக்கொண்டான என்பது. கரிபடு மய்யச்சையம் - யானைகளை யுடைய பசுமையான மேலைமலைத்தொடர்ப் பகுதி. சையம் - மலை.

புநிதத் தேந்நாட்டேல்லை காட்டி: புனிதமிக்க கன்னியாகுமரியைத் தென்னாட்டின் எல்லையாகக் குறித்து என்பது.

குடமலை நாடு - கொங்கு நாடு; சாவேறு - சாவர், வீரம் மிக்கவர்கள்; தநி விசும் பேற - மடிய; மாவேறிய - குதிரையின்மீது ஏறிப் போர்செய்த. வநுதினி — படை; தறுகலர் - பகைவர்.

சாவெ றெல்லாக்[56] தவிசும்[57] பேற
மாவெ றியதக்[58] வருதினித் தலைவரைக்
குறுகலர் குலைய[59] கோட்டா றுட்பட
நெறிதொறு நிலைகளிட் டருளித் திறல்கொள்
வீரஸிம் ஹாஸநம்[60] திரியவிட் டருளிப்
பொங்கொளி[61] ஆரமுந் திருப்புயத் தலங்கலும் போல்[62]
வீரமுந் தியாகமும் விளங்கப் பார்தொழச்
சிவநிடத் துமையெனத்[63] தியாக வல்லி
உலகுடை யாளிருப்ப[64] அவளுடன்[65]
கங்கைவீற் றிருந் தென[66] மங்கையர்திலத
மேழிசை வல்லபி ஏழுலக முடையாள்[67]
வாழி மலர்ந்திநி திருப்ப[68] ஊழியுந்

---

கோட்டாறுட்பட-கோட்டாறு முதல்; இது கன்னியாகுமரியை யடுத்ததோர் ஊர்; இங்கு குலோத்துங்கன் ஒரு படைவீடு அமைத்தி ருந்தான். நெறிதோறும் நிலைகளிட்டருளி: செல்லுமிடங்களிலெல் லாம் வெற்றித்தூண்கள் நாட்டி என்பது; நிலைகள் - தூண்கள்.

ஆரமும் திருப்புயத்......... வீரமுந் தியாகமும் விளங்க: ஆரம் - முத்துமாலை; அலங்கல் - பூமாலை; வீரம் ஆரத்திற்கும், தியாகம் அலங்கலுக்கும் உவமை. பார் தொழ - உலகத்தவர் வணங்க.

சிவநிடத்.........உலகு முடையாளிருப்ப: மதுராந்தகிக்குப் பின், குலோத்துங்கன் இரண்டாவது மனைவியான தியாகவல்லி என்பாள் பட்டத் தரசியானாள். அவள் பெருமையும், அரசன்யால் அவள் கொண்டிருந்த மதிப்பும் 'சிவநிடத் துமையெனத் தியாகவல்லி உலகுமுடை யாளிருப்ப' என்ற தொடரால் விளக்கமுறும்.

அவளுடந் கங்கை ......... மலர்ந்திருதிருப்ப: குலோத்துங்கனு டைய மூன்றாவது மனைவியின் பெயர் ஏழிசை வல்லபி என்பது. இவள் 'மங்கையர் திலதம்' என்றும், 'ஏழுலகமுடையாள்' என்றும், 'தியாகவல்லியுடன் கங்கை வீற்றிருந்ததென' என்றும் சிறப்பித்துக் கூறப்படுகிறாள். கங்கை - கங்காதேவி; கங்கையும் உமையும் சிவ னுடைய மனைவியர் என்பது புராண வரலாறு.

ஊழியும் - ஊழிக் காலத்தும்; ஆகம் - மார்பு; திருமகள் - இலக்குமி. 'ஊழியும் திருமா லாகத்துப் பிரியா தென்று திருமகளி ருந்தென......... உலகுமுடையாளொடும் வீற்றிருந்தருளிய' என்ற அடியால் இவள் பட்டத்தரசி என்று தெரிகிறது.

திருமா லாகத்துப் பிரியா தென்று[69]
திருமகள் நிற்கவெ வீரவிட ஊர்வனத்து[70]
மலைந் நடையாளொடு வீற்றிருந் தருளிய[71]
கோவிராஜ கேஸரி பன்மரான[72] திரிபுவநச் சக்கரவத்திகள்[73]
ஸ்ரீ குலோத்துங்க சோழதேவர்க்கு யாண்டு —

## செய்தி.

சயிள ஆவது பாண்டி குலாசநி வளநாட்டு மீகொழை தேவதாந பாஹ்மதேயம திருவானைக்காவில் திருவெண்ணாவல் கீழ் இநிதமர்ந்தருளிய த்ரிபுவனபதிக்கு மூலப்ருத்யநாகிய

---

கோவிராஜ கேஸரி பந்மரான திரிபுவந சக்கரவர்த்திகள்: குலோத்துங்கனது சிறப்புப் பெயர்களில், இராசகேசரி, திரிபுவன சக்கரவர்த்திகள் என்பன பரம்பரையாக வந்த பட்டப்பெயர்கள். இவை அவனுடைய எல்லாச் சாசனங்களிலும் பொருந்தி வரும். கோ என்ற சொல், தமிழகத்தில் பேரரசர்களாய் ஆண்ட பண்டைய மன்னர்களைக் குறித்தது; கோப்பெருஞ் சோழன், கோநெடுமாறன் என்ற பெயர்களைக் காண்க. சோழ ராச்சியத்தை யாண்ட பேரரசர்களை இராசகேசரி வர்மன், பரகேசரி வர்மன் என்ற பட்டங்களுடன் 'கோ' என்ற சொல்லையும் சேர்த்து வழங்கி வந்தனர். அம்முறையில் குலோத்துங்கன் 'கோவிராசகேசரி' என்றழைக்கப் பட்டான்.

பாண்டி குலாசநி - பாண்டிய குலத்திற்கு இடி போன்றவன்; அசனி - இடி. இது குலோத்துங்கனது சிறப்புப் பெயர்களில் ஒன்று போலும். இப்பெயரால் ஒரு வளநாடு 'பாண்டிய குலாசநி வளநாடு' எனப்பட்டது. மீ கொழை - மீ கொள், மேலாகக் கொள்ளும் என்பது.

தேவ தாநம்: கோயிலுக்கு விடப்பட்ட இறையிலி நிலம்; ப்ரஹ்ம தேயம் -- பிராமணருக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட ஊர்.

திருவானைக்கா: இது இப்பொழுது சம்புகேசுவரம் என்றழைக்கப்படுகிறது; திருச்சிறாப்பள்ளி சில்லாவுக்கு அருகிலிருக்கிறது. திருவெண்ணாவல் கீழ்: இந்த இடம் இப்பொழுது சம்புகேசுவரசுவாமி ஆலயமெனத் திகழுகிறது. சம்பு - நாவல்மரம்.

த்ரிபுவனபதி: இது சம்புகேசுவர ராலயத்தில் வீற்றிருக்கும் கடவுளின் ஆதிப்பெயர்; இப்பொழுது 'சம்புகேசுவரசுவாமி' என்று அழைப்படுகிறார்.

சண்டேஸ்வரன் ஆதேசம் ஜயசிங்க குலகால வளநாட்டு மீசெங்கிளி நாட்டு வளம்பகுடி அரயமகன் முனையன் அருமொழி தேவனான வில்லவராயனுக்கு நாம் விற்றுக் குடுத்த நிலமாவது —

உடையார் திருவானைக்காவுடைய எம்பெருமான் தேவதானம் தென்கரை ஊர்களில் பாண்டிகுலாசனி வளநாட்டு மீகொழை ஆனிகுடியில் இவனுக்கு விற்றுக்குடுத்த நிலத்துக் கிசைந்த கிழ்பார்க்கெல்லை பிள்ளை கொள்ளி வாய்க்காலுக்கு மேற்கும், தெக்பார்க் கெல்லை களத்தில் வடக்கிலகைய் வாய்க்காலுக்கு வடக்கும், மீபார்க்கெல்லை உத்தம சீலிச் சருப்பெதி மங்கலத்து தெந்பிடாகை புதுக்குடி எல்லைக்கு கிழக்கும், வட

---

மூலப்ருத்யந் - மூலப்பிருத்தியனை; மூலதானத்துச் சேவகன்; சேவகன் — தொண்டன், அடிமை. சண்டேஸ்வரன: நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவன்; இவனுடைய அரிய சேவைக்குப் பரிசாக சிவபெருமான இவனுக்குச் சண்டேசுவரபதம் அளித்தாரென்பர்; அதாவது அடியார் தலைவனாய் மூலதானத்திருந்து சிவபெருமானுக்குரியவற்றை இவனே பெற்று அநுக்கிரகிக்கும் பதத்தை இவன் பெற்றான் என்பது.

ஆதேசம் - கட்டளை; அக்காலத்தில் கோயில் நிலங்களை, அந்தந்தக் கோயில் மூலப் பிருத்தியனை சண்டேஸ்வரன் கட்டளைப் படி விற்றதாகக் கூறுவது வழக்கம் போலும்.

நாம் விற்றுக்குடுத்த நிலம்: சண்டேஸ்வரன் உள்ளிட்ட கன்மிகளாகிய நாம் வில்லவராயனுக்கு விற்றுக்கொடுத்த நிலம் என்பது.

உடையார் திருவானைக்காவுடைய எம்பெருமான்: திருவானைக்காவில் திருவெண்ணாவல் கீழ் அமர்ந்தருளிய திரிபுவனபதியைக் குறிக்கும்; உடையார் - சுவாமி.

தென்கரை ஊர்களில்: முன்னர்த் 'தென்கரை நாட்டு' என வந்திருத்தலும் இதனையே குறிக்கும் போலும். நிலத்துக்கிசைந்த - நிலத்தோடு பொருந்திய. பிள்ளை கோள்ளி வாய்க்கால்: இது பிள்ளை கொல்லி வாய்க்கால் என றிருத்தல் வேண்டும் என்று தெரிகிறது.

களம் - திட்டு நிலம்; மீபார்க்கெல்லை - மேலைப்புற எல்லை. தென் பிடாகை - தென்பக்கத்துச் சிற்றூர். புதுக்குடி என்பது, உத்தமசீலிச் சருப்பெதி மங்கலத்துக்குத தென்பக்கத்திலுள்ள ஒரு சிற்றூராகும்.

பார்க்கெல்லை தெந்காற்றங்கரைப் பெருவழிக்கு தெற்கு ஆக இவ்விசைந்த பெருநாங் கெல்லையுள்பட்ட நிலம் ௪ ௲. இந் நிலம் நாலெமுக்காலும் இத்தெவர்க்கு யாண்டு நாற்பத்தேழாவதுவரை பயிரிலி புந்செய்யாய்க் குட்டமு மண்ணுமிட்டு கிடந்தமையி லந்நிலம் முனையந் அருமொழிதேவநான வில்லவராயனுக்கு விற்றுக் குடுத்துக்கொள்வதாக எம்மிலிசைந்த விலைப்பொருள் அந்றூடு நற்காசு ௪ப?. இக்காசு நாலே மாகாணியும் கைக்கொண்டு திருவானைக்காவுடைய எம்பெருமாந் ஸ்ரீபண்டாரத்து ஒடுக்கி முனையந் அருமொழிதேவநாந வில்லவராயனுக்கு விற்றுக்குடுத்து இவந் உடையார் திருவானைக்காவுடைய எம்பெருமாந் கொயிலில் இடங்கைநாயகரென்று எழுந்தருளுவித்த இஷபவாஹந தேவர்க்கும் நம்பிராட்டியார்க்குந் திருமஞ்ஜநங்களுக்கு திருவமிர்துபடிக்கு இரண்டு திருநாளிலும் இரண்டுநாள் திருவிழா எழுந்தருளுகைக்கு உள்ளிட்டு வெண்டும் நிமந்தங்களுக்கு இந்நில ௪ ௲ கல்லித் திருத்தி ஸ்ரீ பண்டாரத்து புந்செய் வரிசையால்

---

இவ்விசைந்த - இப்படிப்பட்ட; நிலம் ௪ ௲ - நாலே முக்கால் குழி நிலம். பயிரிலி புந்செய்யாய்-பயிர் விளையாத புன்செய் நிலமாய். குட்டமு மண்ணுமிட்டுக் கிடந்தமையில் - பள்ளமு மேடுமாய்க் கிடந்ததால். குட்டம - குழிந்த நிலம்; மண் - மண்திட்டு.

எம்மிலிசைந்த - யாம் சம்மதித்த; அந்றூடு - நாளொன்றுக்கு; நற்காசு - பொற்காசு. கைக்கொண்டு - பெற்று.

ஸ்ரீ பண்டாரம் - கோயில் பண்டாரம்; ஒடுக்கி — சேர்த்து; விற்றுக்குடுத்து - விலைக்குக்கொடுத்து, இடங்கை நாயகர் - இடங்கை குலத்தவருக்குத் தலைவர்; இடங்கையர் என்பார் சோழருக்குள் மரியாதை செலுத்து முறைமையின் காரணமாகப் பிரிந்த ஒரு குலப்பிரிவினர் என்பர். வில்லவராயன் அக்குலத்தவனா யிருந்து, சம்புகேசுவராலயத்தில் இடங்கை நாயகர் என்ற பெயருடன் இடபவாகனனை எழுந்தருளப் பண்ணினதாகத் தெரிகிறது.

இஷபவாஹந தேவர் - சிவபெருமான்; இஷபம் - இடபம். திருமஞ்சனம் - அபிடேகம்; திருவமுது - நிவேதன உணவு. நிமந்தம் - கோயில் செலவு. கல்லித் திருத்தி - வெட்டித் திருத்தி.

வேலி ஒன்றுக்கு நெல் ஐங்கலமாக ராஜகேஸரி மரக்காலால் இந்நிலம் நாலேமுக்காலுக்கும் அளப்பதாக ஜ உ௰ரு

ரு; இந்நெல் இருபத்து முக்கலனே இருதூணிக் குறுணி யும் அளக்குமிடத்தில் கார்பாதி பசாநம்பாதி அளப்பதாகவும் இதில் மிகுதிகொண்டு இவர் இடங்கை நாயகரென்று எழுந் தருளுவித்த இஷபவாஹந தேவர்க்கும், நம்பிராட்டியார்க் கும், திருமஞ்சன படிகளுக்கும், திருவமுதுபடிக்கும் இரண்டு திருநாளிலும் இரண்டு நாளெழுந் தருளுகைக்கு உள்ளிட்டு வேண்டு நிமந்தங்களுக்கு நிமந்தஞ் செய்து குடுத்தோம். மூலையங் அருமொழி தேவநான வில்லவராயநுக்கு திருவானைக் காவுடைய எம்பெருமாநுக்கு மூலப்ருத்த்யநாகிய சண்டேஸ் வரர் உள்ளிட்ட கந்மிகளோம். இது பந்மாஹெஸ்வர ரக்ஷை.

(பாட பேதம்) 1. பொன்னேமி 2, தன்னேமி 3. பருவத்துச் 4. சக்கரக்கோட்டத்து 5, விக்கிரமத் 6. கழித்துத் 7 தென் றிசை 8 பொன்னி 9. நன்னிலப் 10, தலைனடி 11. தொன் னில 12. முன்னை 13. பெருகக் 14 வறப்பச் 15. தரு து 16 வெண்ணிலாத் 17. வொருதனி 18 தீபாந்தரத்துப் 19. திறை

---

ராஜகேசரி மரக்கால்: இது அரண்மனை மரக்கால்; இராச ராசசோழன் சாசன முதலியவற்றிலும் இப்பெயர் வந்திருத்தல் காண்க.

ஜ உ௰ரு ரு - நெல் இருபத்து முக்கலனே இருதூணிக் குறுணி; ஜ - நெல்; உ௰ரு - இருபத்துமூன்று; - கலம்; - இருதூணி; ரு - குறுணி.

கார் - கார் காலத்தில் விளையும் நெல்; கார்காலம் - மழைக் காலம்; பசாநம் - பசான் என்னும் ஒருவகைச் சம்பா நெல்; இது சித்திரை மாதத்தில் அறுவடையாகும்.

இதில் மிகுதிகொண்டு - இதைக்கொண்டு. திருமஞ்சனபடி - அபிடேகம் செய்ய ஆகும் செலவு; படி-செலவு. எழுந்தருளுகைக்கு - உலா வருவதற்கு; உள்ளிட்டு - சேர்த்து. நிமந்தம் செய்து குடுத் தோம் - கோயில் ஊழியத்திற்கு ஏற்பாடு செய்து கொடுத்தோம்.

உள்ளிட்ட - முதலிய; கந்மிகளோம் - கோயிலதிகாரிகளாகிய யாம். பந்மாஹேஸ்வரர் ரக்ஷை - அடியார் கூட்டம் காக்க.

விழ 20. தென்னவன் 21. இடத்தன் 22 பொன்னகர்ப் 23. யிக்காட 24. யென்னுந் 25. தன்னை 26. அனத்திபி 27. விட் டதன் 28. அழன்று அழனா 29. தலமாக் 30 தக்காருக்கு 31. தாறும் தானையும் 32. பன்று 33. பயத்தெதிர மாறிய 34 சயப்பெருக் 35. பழியிக்கு 36 கொடுத்த புகழினை 37. கொடுத்த 38. மென்றும் 39. வெள்ளம் 40 தென கடலு 41. தன்பெருந் 42. வெரிகவிந்திகாடி 43. யாணையைப் 44 நாட் டிப் 45. பொற்றை 46. மேற்றிக் 47. விசயத்தம்பக் 48. முத் தின் 49. முத்தமிழ்ப் 50 சையமும் 51. கனிபும் 52. கைக் கொண்டருளிக் 53 தெனாட் 54. டெல்லை 55. நாட்டுள 56. சாலையெறல்லாக் 57. தனிவிசம 58. மாவேறியதன் 59 குலை யக் 60. வீரசிம்மாசனக் 61. ......... 62. போல 63. சிவனி டத்துமைபெனக் 64 உலக முடையா ளிருப்ப 65. அவருடனே 66 வீற்றிருக்கென 67. யேழுலகுமுடையாள் 68. மலாந்தினி திருப்ப 69 பிரியாதென்றும் 70. வீரசிம்மாசனத்து 11. வீற்றி ருந்தருளிய 72. கோவிராசகேசரி வன்மரான 73. திரிபுவனச் சக்கரவர்த்திகள்.

---

## 10. மணிமங்கலம் சபையோர் சாசனம்.*

### முகவுரை.

மணிமங்கலம் என்பது ஓர் ஊர்; அவ்வூர்ச் சபையின ரால் ஏற்பட்ட சாசனம் 'மணிமங்கலம் சபையோர் சாசனம்' எனப்பட்டது. இது செங்கல்பட்டு சில்லா, காஞ்சிவரம் தாலூகாவிலுள்ள மணிமங்கல மென்னுமூர் † இராசகோபால சுவாமி கோயில் †† மண்டபத்தின் மேலைச்சுவரில் காணப்படுகிறது.

---

* இச்சாசனம் தென்னிந்திய சாசனத்தொகுதிகளில் மூன்றாவது தொகுதியின் முதற்பகுதியைச் சேர்ந்தது. இப்பெயருடைய மற்றொரு சாசனம் இராசாதிராசன் காலத்தில் ஏற்பட்டிருத்தலும் காண்க.

† இது இராசாதிராசன் காலத்தில் செயங்கொண்ட சோழ மண்டலத்து செங்காட்டுக் கோட்டத்து மாகனூர் நாட்டில் இருந்ததாகவும், இதன் மற்றொரு பெயர் ராஜ சூளாமணிச் சதுர்வேதி மங்கலமென்றும சொல்லப்படுகிறது. குலோத்துங்கன் காலத்தில் இது பாண்டியனை இருமடிவென்கொண்ட சோழ சதுர்ப்பெதி மங்கலம் என்று அழைக்கப்பட்டுள்ள

†† இது இராசாதிராசன் காலத்தில் ஸ்ரீமத் த்வாராபதியான ஸ்ரீ காமககோயி விண்ணகராழ்வார் கோயில் என்றழைககப்பட்டுள்ளது; குலோத்துங்கன் காலத்தில் வண்டுவராபதி எம்பெருமான் கோயில் எனப்படுகின்றது,

இதன் முற்பகுதியில், பாண்டியரும் சேரரும் முதலாம் குலோத்துங்கன் ஆட்சியின்கீழ் இருந்துவந்த செய்தி காணப் படுகிறது; பிற்பகுதியில், ஒருவன் || பலரிடமிருந்து 1050 குழி நிலத்தை வாங்கி, அதை மணிமங்கலம் கோயில் சுவாமியை பௌர்ணமிதோறும் ஊர்வலம் கொண்டு செல்வதற்காகும் செலவுக்காக அக்கோயிலுக்குக் கொடுத்தான் என்று சொல் லப்படுகிறது. இது சோழ அரசனை இராசகேசரிவர்மன் என்னும் முதலாம் குலோத்துங்கன் ஆட்சியின் நாற்பத்தெட் டாவது ஆண்டு கும்பநாயற்று (மாசிமாதம், பூர்வபட்சத்து (வளர்பிறை காலம்), துவிதியையும் (இரண்டாவது திதி), வெள்ளிக்கிழமையும் கூடிய சதையநாளில் (24 வது நாள்) எழுதப்பட்டது.

எனவே, இச்சாசனம் ஏற்பட்ட காலம் கி பி. 1118 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 25 ஆம் நாள் ஆகும்.

---

## முதற் குலோத்துங்கன் : 2 ஆம் மெய்க்கீர்த்தி.

ஸ்வஸ்தி ஸ்ரீ —
புகழ்மாது விளங்கச் சயமாது விரும்ப
நிலமக ணிலவ மலர்மகள் புணர
உரிமையிற் சிறந்த மணிமுடி சூடி.

---

|| இவன் பெயர் நுளப்பியாறு கிழான் வேளான் பேராயிரமு டையானை தண்டக நாடுடையான் என்று தெரிகிறது; இவனுடைய ஊர் இராசேந்திர சோழ வளநாட்டு அம்பத்தூர்நாட்டு நுளப்பியாறு என்பதாகும்.

புகழ்மாது விளங்கச் சயமாது விரும்ப: இது முதற் குலோத் துங்கனது இரண்டாவது சாசனத்தின் துவக்கத் தொடர். புகழ், சயம் ஆகியவை இவ்வடியில் பெண்களாக உருவகிக்கப்பட் டுள்ளன.

நிலமகள் நிலவ - இராச்சியம் விளங்க; மலர் மகள் - இலக்குமி; இங்கு செல்வத்தைக் குறித்தது. உரிமையில் சிறந்த - உரிமையோடு கூடிய. இஃது குலோத்துங்கன் தாய் வழி உரிமை கொண்டாடி சோழராஜ்யத்திற்கு அரசனை வரலாற்றைப் புலப்படுத்துகிறது.

மீநவர்[1] நிலைகெட வில்லவர் குலைதர
ஏனை மன்னவ ரிரிதரிற்[2] சுழிதரத்[3]
திக்கனைத் துந்தன் சக்கர நடாத்தி
விஜயாபி ஷேகம்பண் ணி[4]வீரஸிம் ஹாஸநத்து[5]
உலகுடை யாளொடுமன் னி[6]வீற்றிருந் தருளிய
கோவிராஜ கேஸரி பந்ம ரான[7]
திரிபுவன[8] சக்ரவர்த்திகள்
ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு[9] யாண்டு-

## செய்தி

சமஅ வது குலோத்துங்க சோழ வளநாட்டுக் குன்றத் தூர் நாட்டு மணிமங்கலமான பாண்டியனை இருமடி வென் கொண்ட சோழ சதுர்ப்பெதிமங்கலத்து மஹா ஸபையோம் எழுத்து

---

மீநவர் - மீன கொடியையுடைய பாண்டியர்; வில்லவர் - விற் கொடியையுடைய சேரர்; குலைதர - நடுங்க. ஏனை மன்னவர் - பிற மன்னர்கள்.

இரிதரில் - இரிதர, தோற்றோட; சுழிதர - வெட்கமடைய; திக்கு - திசை; சக்கர நடாத்தி - ஆணை செலுத்தி.

விஜயாபிஷேகம் பண்ணி - வெற்றி முடி சூடி. உலகுடையா ளொடுமன்னி - பட்டத்தரசியொடும் பொருந்தி; இங்கு பட்டத் தரசி என்றது, தியாகவல்லியைக் குறிக்கும்.

குலோத்துங்க சோழ...... குன்றத்தூர் நாட்டு: இது இராதி ராசன் காலத்தில் 'செயங்கொண்ட சோழமண்டலத்துச் செங்காட் டுக் கோட்டத்து மாகனூர் நாடு' என்று அழைக்கப்பட்டுள்ளது.

பாண்டியனை இருமடி வென்கொண்ட சதுர்ப்பெதி மங்கலம்: இது மணி மங்கலத்திற்குரிய மற்றொரு பெயர்; இராசாதிராசன் காலத்தில் இது இராசசுளாமணி சதுர்ப்பேதி மங்கலம் என்று அழைக்கப்பட்டது.

நம்மூர் வண்டுவாராவதி எம்பெருமான் கோயிலில் ஸ்ரீகாரியம்செய்கிற அள்ளூர்க் கெசவபட்டனும், அரணைபுறத்து திருவாய்க் குலபித்தனுங் கண்டு யாண்டு சமஅ-வது கும்பநாயற்றுப் பூர்வ்வபக்ஷத்து த்விதியையும் வெள்ளிக்கிழமையும் பெற்ற சதயத்து நாள். இவ்வாண்டு முதல் அமாவாஸி சந்திராதித்தவரை எழுந்தருளுகைக்கு ராஜேந்திர சோழவளநாட்டு அம்பத்தூர் நாட்டு நுளப்பியாற்று நுளப்பியாறுகிழான் வேளான் பேராயிர முடையானான தண்டக நாடுடையான், குண்டூர் தோணயக் கிரமவித்தன் பக்கல் ஆனைமேட்டில் விலைகொண்டுடைய குழி நூற்றிருபத்தஞ்சும், இங்கே மத்தி

---

நம்மூர் - மணிமங்கலம் என்னும் ஊர்; வண்டுவாராவதி எம்பெருமான் கோயில்: இது இராசாதிராசன காலத்தில் ஸ்ரீமத் காமக்கொடிவிக்கண்ணராழ்வார கோவில் எனறு அழைக்கப்பட்டது. இப்பொழுது இராசகோபாலசுவாமி கோயில் என்று அழைக்கப்படுகிறது. ஸ்ரீ க்ாரியம் செய்கிற - கோயில் காரியத்தை மேற்பார்வை செய்யும். கேசவப்பட்டன்: கேசவன் என்பது சோழருக்குரிய பெயர்; பட்டன - கோயில பூசகன; கண்டு - காண; கும்ப நாயிறு - மாசி மாதம். சதயத்து நாள் - சதய நட்சத்திரத்தில்.

அமாவாஸி - அமாவாசிப்புறம், அமாவாசிக் காலத்தில் எழுந்தருளுகைக்கு ஏற்படும் செலவு வகை; சந்திராதித்தவரை - சந்திர சூரியருள்ள காலம் வரையும். அமாவாவி - சந்திரனும் சூரியனும் கூடி நிற்கும் திதி; எழுந்தருளுகைக்கு - உலாப்போதற்கு. ராஜேந்திர சோழ வளநாடு: இராசேந்திரன் என்பது குலோத்துங்கனது இயற்பெயர்.

தண்டக நாடுடையான்: இவனுக்கு நுளப்பியாறு கிழான் வேளான் பேராயிரமுடையான் என்ற சிறப்புப்பெயர் உண்டு இவன் வண்டுவாராபதிக் கோயில் ஸ்ரீ காரியம் செய்துவந்த அள்ளூர் கேசவப்பட்டன், அரணைபுறத்து திருவாய்க் குலபித்தன் ஆகிய இருவர் முன்னிலையில், பலரிடமிருந்து 1050 குழி நிலம் வாங்கி அமாவாசை தோறும் சுவாமி உலாவுவதற்கு மணிமங்கலமென்னுமூர் சபையோரிடம் கொடுக்க அவர்கள் அதை ஏற்றுக்கொண்டனர். விலை கோண்டுடைய - விலைக்குக்கொண்ட.

யஸ்தன் உறப்போந்தானும் தம்பிமாரும் பக்கல் விலை கொண்டுடைய குழி நூற்றொருபத்தஞ்சும், இராயூர் திருப்பொரிக் கிரமவித்தன் பக்கல் பாதிரிக்கழநி மேலைகாலுக்குக் கிழக்கு விலைகொண்டுடைய குழி நூற்றிருபத்துமூன்றும், இங்கே யிராயூர் விஷ்ணு திருவேங்கடக் கிரமவித்தன் பக்கல் விலை கொண்டுடைய குழி நூற்றொருபத்தேழும், இங்கே ஐயக்கி வண்டுவராபதி பிச்சர் பக்கல் விலைகொண்டுடைய குழி நூற்றொருபதும், இங்கே இராயூர் யஜ்ஞநாராயணக் கிரமவித்தன் பக்கல் விலை கொண்டுடைய குழிநூற்றிருபத்தேழும், ஆலவதிக்கு வடக்கு இரண்டாங் கண்ணாற்று வீரவலி திருவரங்கமுடையான் ஸஹஸ்ரன் பக்கல் விலை கொண்டுடைய குழிநூற்றிருபதும், இங்கெய் மூன்றாங் கண்ணாற்றில் இராயூரான் னந்திக் கிரமவித்தன் பக்கல் வடக்கடைய கொண்டுடைய குழி நூற்றெட்டும், அரிவாள் வதிக்குக் கிழக்கு, முதற்கண்ணாற்று............க்கராம்பிச் செட்டு நாணமாலைக் கிரமவித்தன் பக்கல் விலை கொண்டுடைய குழி நூற்றொருபத்தஞ்சும் ஆக குழி ஆயிரத்தைம்பதும் அமாவாஸிப்புறம் சந்திராதித்

---

கிரமவித்தன்: இது வேதத்தின் கிரமபாடத்தில் வல்ல பார்ப்பாரது பழைய பட்டப்பெயர்; மதியஸ்தன் - ஊர்க்கரணத்தான். திருப்பொரிக்கிரம வித்தன்: திருப்பொரி யென்பது ஓர் அங்க விசேடம்; அவ்விசேடம் படைத்தவன் 'திருப்பொரிக் கிரம வித்தன்' எனப்பட்டான் போலும்.

வண்டுவராபதி - துவரைக்கு இறைவனாகிய கண்ணன்; 'ஐயக்கி வண்டுவராவதி பிச்சர்' என்பவன், அவ்விறைவன் அடியார்களில் ஒருவன் போலும்; வதி - வழி; கண்ணாறு — நீர்ப்பாசன வாய்க்கால்; ஓரளவு தண்ணீர் பாயும் நஞ்செய் நிலப் பகுதி என்பாருமுளர்.

வடக்கடைய கொண்டுடைய: பிற இடங்களிலெல்லாம் விலை கொண்டுடைய என வந்திருத்தல் காண்க. கராம்பிச்செட்டு: இது விவசாயத் தொழிலுக்குரிய கருவிகளை விற்கும் வியாபாரிக்குரிய பெயர்.

ஆக குழி ஆயிரத் தைம்பதும்: குண்டூர் தோணாயக் கிரமவித்தன் பக்கல் 125 குழி; மத்தியஸ்தன் உறப்போந்தானிடத்தும் அவன் தம்பிமாரிடத்தும் 115 குழி; இராயூர் திருப்பொரிக் கிரமவித்தன் பக்

தவற் செல்வதாக இறை விழுத்துகைக்குக் கிரயமாக இவர் பக்கல் ஸபையோமாக வேண்டும் பொன்கொண்டு இன் நிலத்துக்கு வந்த இறை ஸபையோமே இறுக்கக் கடவோமாக இசைந்து இறை இழிச்சிக் குடுத்தோம். இப்படி கல்லிலும் செம்பிலும் வெட்டிச் சந்திராதித்தவற் செல்வதாக இறை இழிச்சிக் குடுத்தோ மஹாஸபையோம். ஸபையுள் நின்று ஐயக்கி வண்டுவராபதிப் பிச்சர் பணிக்க பணியால் எழுதினேன் இவ்வூர் மத்தியஸ்தன் மணி மங்கலமுடையான் வேளான் பொரான் (இவை என) எழுத்து.

(பாடபேதம்) 1. மீனவர் 2. ஙிரியலுற் 3. நிழிதர 4. விசயாபிடேகம் பண்ணி 5. வீரசிம்மாசனத்து 6. ........... 7 கோவிராசகேசரி வன்மரான 8 ........... 9. தேவர்க்கு.

---

கல் 123 குழி; இராயூர் விஷ்ணு திருவேங்கடக் கிரமவித்தன் பக்கல் 117 குழி; ஐயக்கி வண்டுவராபதி பிச்சர் பக்கல் 110 குழி; இராயூர் யஜ்ஞ நாராயணக் கிரமவித்தன் பக்கல் 127 குழி; வீரவலி திருவரங்கமுடையான ஸகஸ்ரன் பக்கல் 120 குழி; இராயூரான் நந்திக் கிரமவித்தன் பக்கல் 108 குழி; காரம்பிச்செட்டு நாணமாலைக் கிரமவித்தன் பக்கல் 115 குழி ஆக ஒன்பதின்மரிடத்து வாங்கின நிலம் குழி 1050. (இத்தொகையில் 10 குழி குறைவாயிருத்தல் காண்க. எனவே நூற்றிருபதென்பது, நூற்றொருபதென் றிருத்தல் வேண்டும் போலும்)

அமரவாஸிப்புறம் - அமாவாசிக் காலத்தில் எழுந்தருளுகைக்கு ஏற்படும் செலவு வகை (Provision for Procession); புதக்குப்புறம் என்ற தொடருக்குரிய பொருளோடு இதனை ஒப்பிடுக. சந்திராதித்தவற் செல்வதாக - சந்திர சூரியருள்ள காலம் வரை நடப்பதாக. இறை விழுதது கைக்கு - வரி நீக்குவதற்கு; ஸபை யோமாக - சபையினராகிய யாம்; இறை - நிலவரி; இறுக்க - வரி முதலியன கொடுக்க. இறை இழிச்சி - வரி நீக்கி.

கல்லிலும் செம்பிலும் வெட்டி: சாசனங்களைக் கல்லிலும், செம்பிலும் வெட்டுதல் வழக்கம் என்பது இதனால் விளக்க முறுகின்றது. செல்வதாக - நடக்க.

ஐயக்கி வண்டுவராபதிப் பிச்சர்: இவர் சபைத்தலைவர் போலும்; இவரிடம் விலைக்குக்கொண்ட நிலம் 110 குழி. பணிக்க - சொல்ல; பணியால் - கட்டளைப்படி.

எழுதினேன்: மணி மங்கலம் சபையோர் சாசனம் எழுதியவன் அவ்வூர் மத்தியஸ்தன் வேளான் பொரான் என்பவனாகும்.

# 11. அருளாளப் பெருமாள் கோயில் சாசனம்*

## முகவுரை.

அருளாளப் பெருமாள் கோயில் என்பது, சின்ன காஞ்சீவரத்தி† லுள்ளதோர் விஷ்ணு வாலயம். அக்கோயிலில வைணவ ஆழ்வார்களான பூததாழ்வார், பொய்கையாழ்வார் களின் பிறந்த நாள்†† கொண்டாட்டம் நடைபெறுவதற்குச் செய்த ஏற்பாட்டைப் பற்றிய சாசனம் 'அருளாளப் பெருமாள் கோயில் சாசனம்' எனப்பட்டது. இது அக்கோயிலில் மலை என்று சொல்லப்படும படிக்கல் மேடையின் (Stone platform) மேலைப்புறச் சுவரில் காணப்படுகிறது.

இதன் முற்பகுதியில், விக்கிரமச்சோழ தேவனது கலிங்கப்போரைப்பற்றிய குறிப்பினையுடைய மெய்கீர்த்தி அமைந்துள்ளது; பிற்பகுதியில், வைணவ ஆழ்வார்களான பூதத்தாழ்வார், பொய்கையாழ்வார்களின் ஜென்ம நட்சத்திரத்தன்று அருளாளப்பெருமாள் எழுந்தருளி திருமஞ்சனமும் திருவமுதும செய்வதறகாவன கூறப்பட்டுள்ளது. அதாவது, அககோயிலுக்கு 780 கலம நெல் கொடுதது, அந்நெல்லுக்கு வட்டியாக வரும் 390 கலம் நெலலைக்கொண்டு அருளாளப பெருமாள் ஆணடுக்குப் பதின்மூன்று தடவை (திருக்கேட்டை நாள் தோறும) எழுந்தருளி, திருமஞ்சனமும் திருவமுதும் செய்தருள ஏற்பாடு செயத செய்தி கூறபபடுகிறது இது விக்கிரமச் சோழன் ஆட்சியின்|| ஒனபதாம் ஆண்டில ஏற்படடது.

எனவே, இச்சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 1127 ஆம் ஆண்டு எனனலாம்.

---

* இச்சாசனம் தெனனிநதிய சாசனத தொகுதிகளில மூனறாவது தொகுதியின இரண்டாவது பகுதியைச் சோநதது.

† இது ஆதியில ஜயங்கொண்ட சோழமண்டலத்து ஏயில் கோட்டத்து எயிலநாட்டுத் திருவத்தியூர் எனப்பட்டது போலும.

†† பூதத்தாழ்வார் பிறந்த நாள் அவிட்டம்; பொய்கையாழ்வார் திருவோண நாளில பிறந்தார். ஆனால இச் சாசனததில் அவாகள இருவா பிறநத நாளும் கேட்டை என்று கூறியிருப்பது காணக.

|| விககிரமச் சோழதேவன் குலோத்துங்கனுக்குப்பின் கி. பி. 1117 முதல் 1134 வரை சோழ நாட்டை ஆண்டான். இவன் கி. பி. 1120 முதல் 1136 வரை ஆண்டான் என்பாருமுளர்.

## விக்கிரமச் சோழ தேவன்: மெய்க்கீர்த்தி.

ஸ்வஸ்தி ஸ்ரீ —
பூமாது புணரப் புவிமாது வளர
நாமாது விளங்க[1] ஜயமாது[2] விரும்பத்
தன்றிரு[3] பதமலர் மன்னவர் சூட
மன்னிய உரிமையால்[4] மணிமுடி சூடிச்
செங்கோல் சென்று திசைதொறும் வளர்ப்ப
வெங்கலி நீங்கி மெய்யறந் தழைப்பக்
கலிங்க மிரியக் கடமலை நடாத்தி
வலங்கொ ளாழி வரையாழி திரிய
இருசுட ரளவு மொருகுடை நிழற்ற

---

பூமாது புணரப் புவிமாது வளர: இது விக்கிரமச் சோழ தேவனது சாசனத்தின் தொடக்கத் தொடர்; இவனுடைய மற்றொரு சாசனம் 'பூமாலை மிடைந்து பொன்மாலை திகழ்' என்று தொடங்குகிறது. பூமாது - இலக்குமி; புவிமாது - நிலமகள்.

நாமாது - கலைமகள்; ஜயமாது - சயமகள். செல்வம், நாடு, கல்வி, வெற்றி இவை ஒருங்கே யமைய என்றபடி. தன் திருபத...... சூட: அரசர்கள் தன்னை வணங்கித் திறைசெலுத்த என்பது.

மன்னிய உரிமையால் - நிறைந்த தகுதியோடு; இவன் தந்தையான குலோத்துங்கன தாய்வழி உரிமை பாராட்டி சோழ மன்னனாயினான்; ஆதலால், இவனும் அவ்வுரிமையோடு முடி சூடினான் என்பது.

செங்கோல் - ஆணை; திசை தோறும் வளர்ப்ப - நாடெங்கும் விளங்க; வெங்கலி - துன்பம்; மெய்யறம் - தருமம்; கலிங்க மிரிய - கலிங்க சேனை பயந்தோட; விக்கிரமச்சோழ தேவன் இளவரசனாயிருந்தகாலையில் கருணாகரத் தொண்டைமானுடன் சென்று கலிங்கப் போர் நடாத்திய செய்தி இவ்வாறு குறிக்கப்படுகிறது கடமலை - மதயானை; கடம் - மதம்.

வலங்கொளாழி: ஆழி வலங்கொள்; ஆழி - கடல்; வரையாழி - சக்கரவாளகிரி, மேருமலை, ஆழிசூழ் உலகத்தின் நடுவில் மேருமலை இருக்கிறதென்பது புராண வரலாறு. திரிய - செல்ல. இருசுடரளவும் - சூரிய சந்திரருள்ள வரையும். ஒரு குடை நிழற்ற - தனியாட்சி புரிய.

விஜயாபி ஷேகம்[5] பண்ணி வீரஸிம் ஹாஸநத்து[6]
முக்கோக் கிழாநடிக ளொடும்[7] வீற்றிருந்தருளிய
கோப்பர கேசரி பந்மராந[8] த்ரிபுவநச் சக்ரவர்த்திகள்[9]
ஸ்ரீவிக்கிரம சோழ தேவர்க்கு யாண்டு —

## செய்தி.

ஒன்பதாவது ஜயங்கொண்ட சோழ மண்டலத்து எயிற் கொட்டத்து எயில் நாட்டுத் திருவத்தியூ ராழ்வாரைப் பாடியருளின ஸ்ரீ பூதத்தாழ்வாரும், ஸ்ரீ பொய்கையாழ்வாரும் பிறந்த திருக்கேட்டை நாள், அருளாளப் பெருமாள் புறப்

---

விஜயாபிஷேகம் பண்ணி: வெற்றி முடி சூடி; முக்கோக் கிழா நடிகள்: இவள் விக்கிரமச் சோழன் முதல் மனைவி; பட்டத்தரசியாயிருந்தவள். வீற்றிருந்தருளி - ஆட்சி புரிந்து.

கோப்பரகேசரி பந்மராநத்ரிபுவனச் சக்ரவர்த்திகள்: பரகேசரி, திரிபுவன சக்கரவர்த்திகள் என்பன விக்கிரமச் சோழ தேவனுக்குரிய பட்டப் பெயர்கள். இவன் தந்தை முதலாம் குலோத்துங்கன் 'கோவிராசகேசரி பன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள்' என்றழைக்கப்பட்டிருப்பது இங்கு நோக்கத் தக்கது.

திருவத்தியூராழ்வார் — திருவத்தியூரில் எழுந்தருளியுள்ள பெருமாள் என்பது. இவரைப் பூதத்தாழ்வார், பொய்கையாழ்வார் இருவரும் பாடியுள்ளனர்.

ஸ்ரீ பூதத்தாழ்வாரும்... திருக்கேட்டை நாள்: 'இவ்வாழ்வார்கள் இருவருடைய பிறந்த நாளும் திருக்கேட்டை என்பது அக்கால வழக்கம் போலும். ஆனால் பொய்கையார்க்குத் திருவோணமும், பூதத்தார்க்கு அவிட்டமும் பிறந்த நாட்களாக குருபரம்பரைகளில் காணப்படுகின்றன. திருவாட்டை நாள் என்பது திருக்கேட்டை நாள் என்று சாசனம் வரைந்தோரால் தவறி எழுதப்பட்டதோ என்று கருதவும் இடம் தருகின்றது' என்பர் சாசனத் தமிழ்க்கவி சரிதம் எழுதிய உயர்திரு மு. இராகவையங்காரவர்கள். திருக்கேட்டை நாள் என்பது, திருச் செவிட்ட நாள் என்றிருத்தல் வேண்டுமென்பர் இன்றைய ஆராய்ச்சியாளர்.

பட்டருளி ஏகாசீதி திருமஞ்சநமும், பெருந்திரு வமுதும் செய்தருளத் திருமஞ்சநத்துக்குத் திருமுளை சார்த்த திரு முளைப்பாலிகை முப்பத்தாறுக்குப் பாலிகை ஒன்றுக் கடிக் கிழட்ட நெல்லு உரியாக நெல்லுப் பதக்கிரு நாழியும், திரு முளைப் பீசங்கொள்ள அரிசி நாநாழியும், புண்ணியாஹதக்ஷி ணைக்கு அரிசி அறுநாழி உழக்கும், பலித்ரவ்யத்துக்குக்கு அரிசி இருநாழி உரியும், திருமுளைக்குத் திருநந்தாவிளக்குக்கு

புறப்பட்டருளி - உலாப்போந்து; ஏகாசீதி திருமஞ்சனம் - எண் பத்தோரு கலம் வைத்துப் பூசித்து அபிசேகம் செய்வது. ஏகாசீதி- எண்பத்தொன்று; ஏகம் - ஒன்று; அசீதி - எண்பது. திருமஞ்சனம் - அபிசேகம்; பெருந்திருவமுது - பெரிய உணவு; அதாவது வடை, பாயசம், காய்கறி முதலியன பொருந்திய உணவு.

திருமுளை சார்த்த: பாலிகை கொட்ட; அதாவது திருவிழா, திருமண முதலிய விசேட நாட்களில் தானிய முளைகளை வளர்த்து நீரோடு கலக்கும் ஒருவகைச் சடங்கு. திருமுளைப் பாலிகை - தானிய முளை வளர்க்கப் பெறும் மண் பாலிகை; பாலிகை - மண்பாண்டம்.

அடிக் கீழட்ட - அடிக்கட்ட, நன்றாகப் புடைத்த: நெல்லு உரி யாக - ...... பதக்கிரு நாழியும்: உரி - அரைப்படி; பதக்கு-இரண்டு மரக்கால்; இருநாழி - இரண்டு படி.

திருமுளைப் பீசங்கொள்ள - பாலிகையில் தானியங்களை முளைக்க வைக்க; பீசம் - விதை, தானியம். நாநாழி - நான்கு படி.

புண்ணியாஹ தக்ஷிணைக்கு: புண்ணியாஹம் - சுத்தி செய் யும் சடங்கு விசேடம்; தக்ஷிணை - தட்சணை; குரு முதலிய பெரு யோர்க்குக் கொடுக்கும் பொருள்; இங்கு புண்ணியாகச் சடங்குகளைச் செய்யும் ஆசாரியருக்குக் கொடுக்கும் பொருளைக் குறித்தது.

உழக்கு - கால்படி; பலித்ரவ்யம்; யாக முதலியவற்றில் தேவர், பிதுரர் முதலியோரை உத்தேசித்து இடும் உணவுப்பொருள்; காக்கை முதலிய பிராணிகள் உண்ணுதற்கு இடும் சோறு எனினுமாம்.

திருமுளைக்குத் திருநந்தா விளக்குக்கு: திருமுளை பாலிகைகளுக் குப் பக்கத்தில் நின்று எரியும் திருநந்தா விளக்கு; இரவும் பகலும் அவியாது நின்று எரியும் விளக்கு 'நந்தா விளக்கு' எனப்படும். நந்துதல - அவிந்துபோதல்.

நாளொன்றுக்கு எண்ணை உழக்காக நாளஞ்சுக்கு எண்ணை நாழி உழக்குங், க்ருதஹாரோஹணத்துக்கு நெய் மூவுழக் காழாக்கும், திருமஞ்சநத்துக்குக் கலசம் எண்பத்தொன் றுக்கு அடிக்கீழ் நெல்லு ஐங்குறுணி உரியும், கும்ப நாலுக்கு நெல்லு நாநாழியும், திருச்சுண்ணக் கலசமொன்றுக் கடிக் கீழரிசி இரு நாழியும், கலசஞ்சூழக் காணவிலையின் புடவை பதின்மூன்றும், கலசஞ் சுற்ற நூலரைப்பலமும், திருமஞ்ச நத்துக்கு நெய் முன்னாழியும், தேநாழியும், பால் முன்னாழியும், தயிர் முன்னாழியும், ஸ்நபந த்ரவியங்கள் வேண்டுவநவும், பஞ் சலோகமும், பஞ்சரத்நமும், திருச்சுண்ணத்துக்கு நாடன் மஞ்சள் நாற்பதின் பலமும், திருவிளக்கெண்ணை உரியும்,

---

எண்ணை நாழி உழக்கும் - எண்ணெய் $1\frac{1}{4}$ படியும்.

க்ருத ஹாரோஹணம்: நெய் கொண்டு அபிசேகம் செய்வது. கிருதம் - நெய்; அரோகணம்-அபிசேகம்; மூவுழக் காழாக்கு - $\frac{7}{8}$ படி. திருமஞ்சனத்துக்குக் கலசம் - திருமஞ்சனத்திற்குரிய கலசம்.

நெல்லு ஐங்குறுணி உரியும் - நெல் $40\frac{1}{2}$ படி. குறுணி - 8 படி; உரி - $\frac{1}{2}$ படி. கும்பம் - மத்தியில் வைக்கும் குடம். திருச்சுண்ணம் - விழா முதலிய காலங்களில் மக்களின்மேல் தூவும் கந்தப்பொடி.

காணவிலையின் புடவை - காண விலையுள்ள புடவை: காணம் என்பது அக்காலத்துப் பொற்காசு நாணயங்களில் ஒன்று என்று தெரிகிறது. புடவை - சேலை. கலசஞ் சுற்ற - திருமஞ்சனக் கலசத்தைச் சுற்றிக் கட்டுவதற்கு; முன்னாழி - மூன்று படி. தேநாழி — தேன் ஒரு படி.

ஸ்நபநத்ரவியங்கள் — ஸ்நபன திரவியங்கள், மந்திர பூர்வமாகச் செய்யப்படும் அபிசேகச் சடங்கிற்குரிய பொருட்கள்

பஞ்சலோகம்: பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் என்பன; பஞ்சரத்நம்--செம்மணி, வைடூரியம், வைரம், பச்சை, நீலம் என்பன; நாடன் மஞ்சள் - மஞ்சள் வகை; நாற்பதின் பலம் - பலம் 40. திருவிளக்கெண்ணை - திருவிளக்குக்கு எண்ணெய்; திருவிளக்கு - கோவில் விளக்கு.

ஹோமத்துக்கு நெய் யுரியும், சார்த்தி அருளச் சந்தந முக்க சும், கற்பூர மாறு மாவும், அகி லரைக்க ழஞ்சும், கஸ்தூரி மஞ் சாடியு மிரண்டு மாவும், புழுகுநெய் யிரண்டு மஞ்சாடியு நாலு மாவு, மாத்திரைக்கரிசி நா நாழியும், பெருந் திருவமு துக்கு அரிசி முக்கலனே குறுணியும், பருப்புப் பாதக் கிருநாழி உரியும், பலவற்கத்துக் கறி நிறை எண்ணூற் றிருபத் தைம் பலமும், கறி யமுதுக்கு உப்பு நாநாழியு, மிளகு உரியும், கடுகு ஆழாக்கே இரு செவிடரையும், சீரக மாழக்குஞ், சற்கரை இருபதின் பலமும், நெய் யுரியும், அமுதில் படைக்க சற் கரை முப்பத் திருபல வரையும், நெய் பதிநொரு நாழி ஆழக் கும், வாழைப்பழ மைம்பத் தஞ்சும், தயிர் தூணியும், கண்ட சற்கரை முக்கசும், திருக்கண்ணு மடைக்கரிசி இரு நாழியு,

---

ஹோமம் - ஓமம், வேள்வித்தீயில் நெய் முதலியன சொரிவது. சார்த்தி அருள - பூசுவதற்கு. சந்தநம் - சந்தனம். முக்கசு - முக் கஃசு; கஃசு - கால் பலம். கற்பூரம் - சர்ப்பூரம்; மா - $\frac{1}{20}$ எடை; களஞ்சு - 2 பண எடை. மஞ்சாடி - இரண்டு குன்றி மணி எடை.

மாத்திரைக்கரிசி - நாள்தோறும் கோயிலில் பூசைத் தொடக் கத்தில் கடவுள் அளிப்பதாக அருச்சகர்களுக்குக் கொடுக்கும் அமு துப்படி;

பல வற்கத்துக் கறி - பலவகைக் காய்கறி; கறியமுது - சமைத்த கறியாகச்சுவாமிக்குப் படைக்கும் உணவு; சற்கரை-சர்க்கரை; உப்பு, மிளகு, கடுகு, சீரகம், சர்க்கரை ஆகியவை கறியமுதில் சேர்த்து சமைக்க வேண்டிய பொருட்கள் போலும். செவிடு - $\frac{1}{5}$ ஆழாக்கு; அல்லது 360 தானியம்; இரு செவிடரையும் = $2\frac{1}{2}$ செவிடும்; தூணி - 4 மரக்கால்; மரக்கால் - குறுணி.

கண்ட சற்கரை - சர்க்கரை வகையில் ஒன்று. மகிழ்ச்சிக் குறி யாக அக்காலத்தில் சர்க்கரை முதலிய இன் பண்டம் வழங்குதல் வழக்கம் போலும்.

திருக்கண்ணு மடை - அரிசி, சர்க்கரை, வாழைப் பழங்களால் ஆக்கப்பட்ட ஒரு வகை இனிய உணவு; இதனை இக்காலத்தவர் "பாயசம்" என்பர்; பாயசம் (திருக்கண்ணமுது) வேறு, திருக்கண்ணு மடை வேறு என்றறிக.

நெய் யுழக்கும், சற்கரை யிருப்பதின் பலமும், வாழைப்பழம் பத்தும், அப்ப அமுதுக் கரிசி பதக்கும், நெய் யிருநாழி உரியும், சர்க்கரை எண்பதிற் பலமு, மிளகு உழாக்கும், சீரக மிருசெவி டரையும், விறகுகட்டு மூன்றும் குசக்கல உரு வுக்கு நெல்லுக் கலமும், தண்ணீ ரமுதுக் கேல மொரு செவி டரையும், அடைக்காய் அமுதுக்கு பாக்கு நாநூற்றைம் பது, வெள்ளிலைப்பற் றொரற்பதும், திருவிளக் கெண்ணை நாழி உரியும், திருவிளக் குடையார்கள் குழாய் பன்னிரண்டுக் கெண்ணை முந்நாழியும், பாவை விளக்கெண்ணை இரு நாழி யும் ஆக இவையிற்றுக்கு நிமந்தமாகச் செல்வதாக இட்ட சமவிலைப் படியாலிக்கோயில் சில வளக்கு மருமொழி நங்கை மரக்காலால் திருக்கோட்டை நாளொன்றுக்கு நெல் முப்ப

---

அப்ப அமுது - அப்ப நிவேதனம்; அப்பம் - அடை; பண்ணி கார வகை என்பாரு முளர். அரிசி, நெய், சர்க்கரை, மிளகு, சீரகம் முதலியன அதற்குரிய பொருள்களாகக் குறிக்கப்பட்டுள்ளன.

குசக்கல உருவுக்கு - மண் விக்கிரகத்துக்கு படைக்க என்பது; குசக்கலம - மட்பாண்டம்; உருவு - விக்கிரகம். தண்ணீரமுது : தண்ணீர்ப் பானம்; இதில் ஏலமிட்டுவைப்பது அக்கால வழக்கம் போலும்.

அடைக்காயமுது - வெற்றிலைப் பாக்கு; அடை - இலை; காய் - பாக்கு; வெள்ளிலை - வெற்றிலை; பற்று - கட்டு; நூறு வெற்றிலையு டையது. திருவிளக்குடையார்கள் - கோயிலில் விளகேற்றுவோர்; குழாய் — விளக் கேற்றும் கருவி போலும்.

பாவை விளக்கு - பிரதிமை விளக்கு (Lamp with a damsel-shaped stand); நிமந்தம் - கோயிலின் ஏற்பாடு; கோயிலூழிய மெனினுமாம. சமவிலை - ஏற்றமில்லாத நடுத்தர விலை. சில வளக்கும் - செலவிற்கு நெல் அளக்கும்.

அருமொழி நங்கை மரக்கால்: அருண்மொழி நங்கை என்பது வீர ராசேந்திரதேவனுடைய பட்டத்தாசி பெயர்; அவள் பெயரால் ஏற்பட்ட மரக்கால் 'அருமொழி நங்கை மரக்கால்' எனப்பட்டது. இராசராசன் காலத்திலிருந்த மரக்கால் இராசகேசரி மரக்கால், அருமொழித் தேவர் மரக்கால் எனப் பட்டுள்ளமையை முன்னர்க் காண்க

திருக்கேட்டை நாள்: இது திருச்செவிட்ட நாள் என்றிருத்தல் வேண்டும்; ஏனெனில் பூதத்தாழ்வார் பிறந்த நாள் அவிட்டமாகும்.

பதிங் கலமாக ஓராட்டை நாளைக்கு வேண்டுவதாக நெல்லு முன்னூற்றுத் தொண்ணூற்றுக் கலத்துக்கும், சோழ மண்டலத்து விருதராஜ பயங்கர வளநாட்டு மண்ணி நாட்டு வங்க முழையூர் முழையூருடையாந் வெண்காடந் ஆதித்த தேவ நாந வங்கத் தரையந், இத்தேவர் பண்டாரத்துச் சிலவளக்கு மருமொழி நங்கை மரக்காலா லளந்த நெல்லு எழுநூற்றெண் பதிந் கல,மிந்நெல் லெழுநூற்றெண்பதிந் கலத்துக்கு மாஸந் தோறும் நெல்லு முப்பத்திரு கலநே தூணிப் பதக்காக

---

ஓராட்டை நாள் - ஓராண்டில் வரும் 13 அவிட்ட நாட்கள். வேண்டுவதாக - வேண்டும்; விருதராசப்பங்கர வளநாடு; விருதராச பயங்கரன், உலகுய்ய வந்தான் என்பன குலோத்துங்கனுடைய சிறப்புப்பெயர்கள். முன்னர் இராசேந்திர சோழ வளநாடு எனப்பட்டது; குலோத்துங்கன் காலத்தில் இரண்டாகப் பிரிக்கப்பட்டு, மேற்கிலுள்ள பகுதி 'உலகுய்ய வந்த சோழ வளநாடு' எனறும், கிழக்கிலுள்ள பகுதி 'விருதராச பயங்கர வளநாடு' என்றும் அழைக்கப்பட்டது. இது காவிரிக்கும், சிதம்பரத்திற்கு வடபால் ஓடும் வெள்ளாற்றுக்கும் இடையிலுள்ள பிரதேசம் எனபர்.

மண்ணி நாடு: கும்பகோணத்திற்குப் பக்கத்திலுள்ள திருவிசலூருக்கு வடபாற்பட்ட பகுதி; மிழலை நாட்டுக்குக் கீழ்ப்பக்கத்திலுள்ளது.

முழையூ நுடையான் - முழையூர்ப் பகுதியி லுள்ளான், வெண்காடந் ஆதித்த... ... ... வங்கத்தரையந்: இவன், விக்கிரமச் சோழ தேவன் ஆட்சியின் ஒன்பதாம் ஆண்டில் கோயிலதிகாரிகளிடம் 780 கலம் நெல கொடுதது, அதிலிருந்து ஆண்டுதோறும் வட்டியாகவரும் நெல் 390 கலத்தையும் கொண்டு மாதந்தோறும் பூதத்தாழ்வார், பொய்கையாழ்வார் ஆகிய இருஆழ்வார்களின் சென்மநாளான திருக்கேட்டை நாளில் அருளாளப்பெருமாள் புறப்பட்டருளி திருமஞ்சனமும், திருவமுதும் செய்ய ஏற்பாடு செய்தான்.

இத்தேவர் - விக்கிரமச் சோழதேவர்; மாஸந்தோறும் ......... முப்பதிந் கலநே தூணிப் பதக்காக: மாதம் கலம் 32, தூணி 1, பதக்கு 1 ஆக எனபது. கலம் - 3 தூணி; தூணி - 2 பதக்கு; பதக்கு - 2 குறணி; குறணி - 8 நாழி.

யாண்டு வரை கலம்* அரெப் பொலிசையால் பலிசை பொலி வதாக நெல்லு முந்நூற்றுத் தொண்ணூற்றுக் கல, மிந்நெல்லு முந்நூற்றுத் தொண்ணூற்றுக் கலத்துக்கும் அருளாளப் பெருமாள் மாஸந்தோறும் திருக்கேட்டை நாள் புறப்பட்டருளி திருமஞ்சனமும் பெருந்திருவமுதும் செய்தருள வேண்டுவந வையிற்றுக்கு இந் நிமந்தப்படியே பண்டாரத்திலே விட்டுச் சந்த்ராதித்தவத் நிமந்தமாகச் செய்யக் கடவதாகச் சிலாலேகை செய்வித்துக் குடுத்தோம், இக்கோயிலில் ஸ்ரீகோயில் வாரியம் புண்டவத் தநத்து ராஜராஜக் கிரமவித்தநும், தூதஹரி நின்ற நாராயணக்கிரம வித்தநும், மருஹஸ்தலத்து பாண்டவதூதக் கிரமவித்தநும், புண்டவந்தநத்து இளைய கோக் கிரமவித்தநும், தூதஹரி வெண்ணைக் கூத்தக் கிரம வித்தநும், தூதஹரி இளையருளாளக் கிரமவித்தநும்,

---

யாண்டு வரை - ஆண்டு தோறும், கலம் அரேப்......பலிசை பொலிவதாந: கலம் நெல்லுக்கு ½ கலம் வட்டியாக வருகின்ற, என்பது. பொலிசை-பலிசை, வட்டி; பொலிதல் - மிகுதல், இலாபமாக வருதல்.

* சாசனங்களில் கலத்துக்கு வழங்கும் குறி என்பது.

கலத்துக்கு அரைக்கலம் நெல் வட்டியாக 780 கலம் நெல்லுக்கு மாதம் 32 கலம், 1 தூணி, 1 பதக்கு நெல்லு; ஆண்டுக்கு 390 கலம் நெல்லு. இந்நெல் 390 கலமும் திருக்கேட்டை நாள் ஒன்றுக்கு 30 கலமாக, ஒரு ஆண்டில் வரும் 13 நாட்களுக்கும் செலவிடப்பட்டது.

இந் நிமந்தப்படியே - இவ்வேற்பாட்டின்படி; நிமந்தம் - ஏற்பாடு; பண்டாரத்திலே விட்டு - கோயில் பண்டாரத்திலே வாங்கி வைத்து; சிலா லேகை செய்வித்துக் கொடுத்தோம் - கல்லில் வெட்டிக் கொடுத்தோம்.

ஸ்ரீ கோயில் வாரியம் - கோயிலில் மேற் பார்வை செய்யும் உத்தியோகம். ஸ்ரீ கோயில் வாரியம், தூதஹரி, கோயில் கணக்கு என்பன கோயில் சம்பந்தப்பட்ட உத்தியோகங்களாகத் தெரிகிறது. புண்டவத்தநம், மருஹஸ்தலம் என்பன அக்காலத்தவர் குடிப் பெயர்கள் போலும்.

கோயிற் கணக்கு உத்திர மேலூருடையானாக எட்டி திருக்காளத்தி உடையானும் இவ்வனைவோம். இப்படிக்கு இவை உத்திர மேலூருடையான் எட்டி திருக்காளத்தியுடையான் எழுத்து. உ.

(பாடபேதம்) 1. விளங்கச் 2. சயமாது 3. தன்னிரு 4. மன்னிய உரிமையான் 5. விசயாபிடேகம் 6. வீரசிம்மாசனத்து 7. மூக்கோக் கிழானடிகளோடும் 8. கோப்பரகேசரி வன்மரான 9 திரிபுவன சக்கரவர்த்திகள்.

---

## 12. தீக்காலிவல்லம் கோயில் சாசனம்*

### முகவுரை.

தீக்காலிவல்லம் என்பது, செங்கல்பட்டு ஜில்லாவிலுள்ள ஒரு சிவதலம். இது ஆதியில் வாணபுரம் என்று அழைக்கப்பட்டது; இப்பொழுது 'திருவல்லம்' என்று வழங்குகிறது. இவ்வூர் பில்வநாதேசுவரராலயத்திற்கு விடேல் விடுகு விக்கிரமாதித்திய சதுர்வேதி மங்கலம் என்னு மூரைத் தானமாகக் கொடுத்த செய்தி கூறப்படுவதால், இச் சாசனம் 'தீக்காலி வல்லம் கோயில் சாசனம்' எனப்பட்டது. செங்கல்பட்டு ஜில்லாவிலுள்ள பாலாற்றின் கிளைநதியான நீவா† நதி

---

எட்டி: இது அக்காலத்திய வணிகர்க்கு அரசன் சிறப்பாகக் கொடுக்கும் பட்டப்பெயர்; எனவே, எட்டி திருக்காளத்தி யுடையான் வணிகனு யிருத்தல்வேண்டு மென்பது வெளிப்படை.

வெண்காடன் ஆதித்த தேவனுன வங்கத்தரையன் தந்த 780 கலம் நெல்லையும் ஏற்று, திருக்கேட்டை நாள்தோறும் அருளாளப் பெருமாள் எழுந்தருளுவதாகிய விழாவை நடத்துவதற்கு ஒப்புக்கொண்டு கையொப்பமிட்டவர்கள் - இராசராச கிரமவித்தன், நாராயணக் கிரமவித்தன, பாண்டவதூதக் கிரமவித்தன், இளையகோக் கிரமவித்தன், வெண்ணைக்கூத்தக் கிரமவித்தன், இளையருளாளக் கிரமவித்தன், எட்டி திருக்காளத்தியுடையான் என்னும் அறுவராவர். அதை எழுதியவன் எட்டி திருக்காளத்தியுடையான்.

* இச் சாசனம் தென்னிந்திய சாசனத் தொகுதிகளில் மூன்றுவது தொகுதியின் முதற்பகுதியைச் சேர்ந்தது.

† நீவா என்பது நூவர் என்றிருத்தல் வேண்டுமென்று சேக்கிழார் வாக்கால் விளங்குகிறது.

யின் (வெள்ளாறு) மேலைக்கரையிலுள்ள திருவல்லமென்னு மூர்ப் பில்வநாதேசுவர ராலயத்து மகாமண்டபத்தின் வடக்குப்புறச் சுவரில் இது காணப்படுகிறது.

இதில், வாணராயனான[1] விக்கிரமாதித்தன்[2] வேண்டிக்கொண்டபடி, படுவூர்க்கோட்டத்து மீயாறு நாட்டு ஐம்பூணி, விளந்தூர், அமருன்றிமங்கலம் ஆகிய மூன்று ஊர்களையும் ஒன்றாகச் சேர்த்து 'விடேல்விடுகு[3] விக்கிரமாதித்திய சதுர்வேதி மங்கலம்' என்னும் பெயரோடு திக்காலிவல்லம் பில்வநாதேசுவர ராலயத்திற்குக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது. இதன்படி இவ்வூர்ச் சபையோர் கோயில் பூசை முதலியன நடப்பதற்கு நெல் கொடுப்பதாக ஒப்புக்கொண்டனர். இது பல்லவ அரசனான விஜயநந்தி விக்கிரம வன்மனது ஆட்சியின் 17 ஆம் ஆண்டில் நடைபெற்றது.

இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 9 ஆம் நூற்றாண்டு என்னலாம்.

---

[1] மகாபலிச்சக்கிரவர்த்தியின் மரபில் வாணாசுரனை வழிவந்தவர்களான வாணர்கள் சங்ககால முதலே தமிழ்நாட்டில் பலம் பொருந்திய சிற்றரசர்களாகயிருந்தனர். கி. பி. 4 ஆம் நூற்றாண்டில் கதம்ப குலத்தவர் அரசாட்சி பெற்றபோது, அவர்கள் இவர்களுக்குக் கப்பங் கட்டி வந்ததாக வரலாறு கூறுகின்றது. கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிலிருந்து இவர்கள் தமிழ்நாட்டிற்கும் தெலுங்குநாட்டிற்கும் இடைப்பட்ட வடுகவழி பன்னீராயிரம் என்ற பகுதியை ஆண்டு வந்தனர். இப்பகுதியை 'மகதம்' என்றும் கூறுவர். இவர்கள் முதலில் பல்லவர்களிடம் சிற்றரசர்களாயிருந்து, பிறகு சோழவரசர்களுக்குட் பட்டனர். முதலாம்பராந்தகன் இவர்களைத் தன்னடிக் கீழ்ப் படுத்தினான் என்று தெரிகிறது. அக்காலத்தில் இவர்கள் ஆண்ட நாடு 'பெரும்பாணர்பாடி' என்று அழைக்கப்பட்டது. சாசனங்களில் இவர்கள் வாணாதிராயர் என்றும், இலக்கியங்களில் 'மகதேசர்' 'ஆறைச்காவலர்' என்றும் அழைக்கப்படுகின்றனர்.

[2] இவன் விசயநந்தி விக்கிரமப் பல்லவன் காலத்தில் (கி. பி. 830—854), அவனாட்சிக்குட்பட்டு ஆண்டுவந்த வாண அரசனுவான்.

[3] இது பல்லவ அரசர்களில் சிலருக்குரிய சிறப்புப் பெயர். 'பல்லவரது ஆணை' என்று இதற்குப் பொருள் கொள்வாருமுண்டு.

## சாசனம்.

ஸ்வஸ்திஸ்ரீ. திருமண்டப மிழிச்சி யெடுப்பதற்கு முன் புள்ள சிலாலேகைப்படி கோ விஜயநந்தி விக்கிரம பர்மர்க்கு

---

வாணராயனுன விக்கிரமாதித்தன் பல்லவமன்னருக்குட்பட்ட ஒரு சிற்றரசனுதலின், பேரரசரின் சிறப்புப்பெயரையும் உடன் சேர்த்து 'விடேல்விடுகு விக்கிரமாதித்தன்' என்று பெயரிட்டுக் கொண்டான் போலும்.

திருமண்டபம் - கோயில் மண்டபம்; இழிச்சி - இடித்து; எடுப் பதற்கு - கட்டுவதற்கு.

முன்புள்ள சிலாலேகைப் படி: ஒரு கோயிலை இடித்துக் கட் டும்போது அதிலுள்ள கல்வெட்டுகளையெல்லாம் படியெடுத்து, கட்டி முடிந்தபின் மீண்டும் முன்போலவே எடுத்த படிகளை அந்தந்த இடங் களில் செதுக்குவது வழக்கம். அம்முறைப்படி இச் சாசனம் படி யெடுத்து கல்லில் செதுக்கியதென்பது இத்தொடரால் விளங்குகி றது. இவ்வாறே மாதவக்கிரமவித்தன் சாசனம், வாணமஹா தேவி யார் சாசனம் என்பனவும் படியெடுத்துப் புதிதாக வெட்டியனவே யாகும். சிலாலேகை - கல்வெட்டு.

கோ விஜயநந்தி விக்கிரம பர்மர்: இவன் தந்திபோத்தரையன் மகன்; இவனுடைய தாய் கதம்ப அரசகுலத்தில் பிறந்த அக்கள நிம்மடி என்பவள். கி. பி. 830 முதல் 854 வரை இவன் பல்லவ ராச்சியத்தை ஆண்டான். இவனுக்கு வடக்கே இராஷ்டிர கூட மன்னரும், தெற்கே பாண்டியரும் பகைவராயிருந்தனர். பாண்டிய மன்னனுன வரகுண பாண்டியனைத் தெள்ளாறு என்னுமிடத்தில் வென்று, 'தெள்ளாறெறிந்த நந்திவர்மன்' என்ற சிறப்பை யடைந் தான். 'நந்திக் கலம்பகம்' இவனைச் சிறப்பித்துப் பாடிய ஒரு பிரபந் தம். இவன் காலத்துப் பெரும்புலவர் பாரதம்பாடிய பெருந்தேவனுர் என்பவராவர். அவனி நாராயணன், மல்லைவேந்தன், விடேல் விடுகு என்பன இவனுக்குரிய சிறப்புப் பெயர்கள். இவன காலத்தில் ஏற் பட்ட சாசனங்கள் பலவாகும். இவனை மூன்றும் நந்திவர்மப் பல்ல வன் என்பர்.

படுவூர்க் கோட்டம்: இது இப்பொழுது செங்கல்பட்டு சில்லா என்று வழங்குகிறது. தீக்காலி வல்லமுடைய பரமேஸ்வரர்: தீக்

யாண்டு ௰௭ ஆவது, படுவூர்க்கோட்டத்து மீயாறு நாட்டுத் தீக்காலி வல்லமுடைய பரமேஸ்வரர்க்கு, இன்னாட்டு ஐம்பூணியும், விளத்தூரும், இத்தேவர் தேவதானம் அமருன்றி மங்கலமும் விடேல்விடுகு விக்கிரமாதித்தச் சதுர்வேதி மங்கல' மென்னும் பேரால் ஏகக் கிராமமாக மாவலி வாணராயனை விக்கிரமாதித்த வாணராயன் விண்ணப்பத்தாலும், காடுபட்டித் தமிழப் பேரரயன் ஆணத்தியாலும் ஏகக் கிராமமாக்கி இவ் வமருன்றிமங்கல முன்னித் தீக்காலிவல்ல முடைய பரமேஸ்வரர்க்கு இறுத்து வருகின்ற ஐ இரண்டாயிரக் காடியும். பொன் னிருபதின் கழஞ்சு மிவ் விடேல்விடுகு விக்கிரமாதித்தச் சதுர்வேதி மங்கலத்துச் சபையார் இறுப்பா

---

காலிவல்லத்தில் எழுந்தருளிய சிவபெருமான் பெயர்.

இன்னாட்டு - படுவூர்க் கோட்டத்து மீயாறு நாட்டு என்றபடி.

ஐம்பூணி: இவ்வூர் இப்பொழுது 'அம்மூண்டி' என்று அழைக்கப்படுகிறது; தீக்காலிவல்லத்துக்குச் சமீபத்திலுள்ளது.

இத்தேவர் தேவதானம் அமருன்றிமங்கலம்: இச் சிவன்கோயிலுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட அமருன்றிமங்கலம் என்னும் ஊர் என்பது; இதனால் அமருன்றிமங்கலம் இதற்கெனவே கோயில் தேவதானமாக இருந்ததென்று தெரிகிறது.

ஏகக் கிராமமாக: ஐம்பூணி, விளத்தூர், அமருன்றிமங்கலம் ஆகிய மூன்றையும் ஒரே கிராமமாக்குவதற்கு எண்ணி என்பது.

விண்ணப்பம்: வேண்டுகோள்; அக்காலத்தில் அரசன் தானமிடக் கருதின், உடனிருக்கும் மந்திரியோ அல்லது சிற்றரசரோ வேண்டவும், ஆணத்தி கட்டளை பிறப்பிக்கவும் நடைபெறும் என்பது. காடுபட்டி: இது பல்லவர்க்குரிய ஒரு பட்டப் பெயர். இது 'காடுவெட்டி' என்றிருத்தல் வேண்டும். ஆணத்தி - கட்டளை: அரசனது கட்டளையை நிறைவேற்றுபவனும் 'ஆணத்தி' எனப்படுவான்.

முன்னித் தீக்காலி வல்லமுடைய: முன்பு இந்தத் தீக்காலிவல்லமென்னும் தலத்தி லெழுந்தருளிய. இறுத்து வருகின்ற - கொடுத்து வருகின்ற. ஐ: இது சாசனங்களில் நெல்லுக்கு வழங்கும் குறி.

காடி: இது அக்காலத்திய முகத்தலளவைகளி லொன்று; தானியங்களைப் பெரும்பாலும் இவ்வளவையினாலேயே அளப்பர். கழஞ்சு - 12 பண எடை: இது ஒரு நிறுத்தலளவை; பொன் முதலியன இதனால் நிறுக்கப்பெறும்.

இவ் வமருன்றிமங்கலம்......இறுப்பாராகவும்: முன்பு தீக்காலிவல்லம் தேவதானமாயிருந்த அமருன்றிமங்கலத்துச் சபையார

ராகவு, பின்னெல்லில்த் திருவமிர்துக்கு நெல்லு அறநூற்றுக் காடியும், திருவுண்ணாழிகை யுள்ளாராதித்துப் பாசரிக்கும் சிவ ப்ராஹ்மணர்க்கு நெல்லு ஐஞ்நூற்றுக் காடியும், ஸ்ரீபலி கொட்டுவார்க்கு நெல்லு ஐஞ்நூற்றுக் காடியும், திருப்பள்ளித் தாமம் பறிப்பார்க்கும், திருப்பதியம் பாடுவா ருள்ளிட்ட பலபணி செய்வார்க்கு நெல்லு நாநூற்றுக் காடியும், திரு நொந்தா விளக்குக்கும், திருமெய்ப் பூச்சுக்கும், சிதாரிக்கு,

---

கொடுத்துவந்த 2000 காடி நெல்லையும், 20 கழஞ்சு பொனனையும் இனி இம்மூன்று ஊர்களும் சேர்ந்த சபையினர் கொடுத்துவர வேண்டு மென்பது.

திருவமுது - நிவேதனவுணவு. திருவுண்ணாழிகையுள்ளாராதித் துப்பாசரிக்கும் - திருவுண்ணாழிகை உள்ளார் ஆதி தப்பு ஆசரிக்கும் எனபது. திருவுண்ணாழிகை - கோயில சாமான்களை வைக்கும் தனிபறை; இதனைக் கருப்பக்கிருக மென்பாரும், கோயில் பண்டாரம என்பாரு முளர். உள்ளாராதி - உள்ளவர் முதலிய; இவர்களில் குருக்கள், பரிசாரகர் முதலியோரும் அடங்குவர். துப்பு ஆசரிக்கும் - உணவுப்பொருள் தயாரிக்கும். சிவப்ராமணர் - சைவப் பிராமணர்கள்.

ஸ்ரீபலி கொட்டுவார் - நித்திய உத்சவத்தின்போது வாத்தியம் கொட்டுபவர்கள். ஸ்ரீபலி - கோயில் வாததியம; நித்திய உற்சவம் எனபாருமுளர்.

திருப்பள்ளித்தாமம்: கோயில் மூர்த்திகளுக்குச் சாத்தப்படும் மாலை அதற்குப் பூப் பறிப்பார், கட்டுவார் அனைவரும் 'திருப்பள்ளித் தாமம் பறிப்பார்' எனப்பட்டனர்.

திருப்பதியம் - தேவாரம். திருப்பதியம் பாடும் வழக்கம் இராசராசன காலததிற்கு முனபே இருந்துள்ளது என்பது இதனால் விளக்கமுறும்

பணி - கோயில் திருப்பணி: திருமெய்ப்பூச்சு - அபிசேகம். சிதாரி (சீதம் + அரி) - தட்பவெட்பம்; இங்கு அத்தன்மைகளைக் கொடுக்கும் தூபதீபத்தைக் குறித்தது. இதற்குச் 'சந்தனம்' என்று பொருள் கொள்வாருமுளர்.

மற்றும் கண்ட ஸ்புடித நவ கர்மாதிகளுக்கும்மாகப் பொன் இருபதின் கழஞ்சும் ஆக இன்னெல்லும், இப்பொன்னும் இத்தேவர்க்கு சந்த்ராதித்தவல் விறுப்பார்களாகவும். இப் பரிசு நிவந்தமாகச் செய்து குடுத்தோம். இத்தர்மம் பந்மா ஹெஸ்வரர் ரக்ஷை.

---

## 13. மகாவலி வாணராயர் சாசனம்.*

### முகவுரை.

மஹாவலி வாணராயர் என்பார், பல்லவ ராட்சிக்குட் பட்டு வடுகவழிபன்னீராயிரம் என்ற பகுதியை ஆண்ட வாணகுல சிற்றரச ராவர். இவரால் உறுதிப்படுத்தப்பட்ட நிவந்தம் பற்றிய சாசனம் 'மஹாவலி வாணராயர் சாசனம்' எனப்பட்டது. செங்கல்பட்டு ஜில்லாவிலுள்ள பாலாற்றின் கிளைநதியான சீவாநதியிடைக் கிடந்தவொரு பெரிய குண்டுப் பாறையின் மேற்றளத்தில் இது செதுக்கப்பட்டுள்ளது. அப் பாறை திருவல்லத்திற்கு வடகிழக்கே ஒரு மைல் தூரத்தி லுள்ளது.

இதில், ஊற்றுக்காட்டுக் கோட்டத்து அளிங்கண பாக் கத்து கீழகத்து அரிதிரன் என்னுந் தட்டாரொருவன், அழிஞ்

---

கண்டஸ்புடிதம் - பழுது பார்த்தல் (repairing breaks and cracks)! நவ கர்மாதி - புதுப்பித்தல் முதலிய காரியங்கள்.

இத்தேவர்க்கு - தீக்காலிவல்லமுடையார்க்கு. இப்பரிசு - இவ் வாறு நிவந்தம் - ஏற்பாடு

திருவமுதுக்கு நெல் 600 காடி: திருவுண்ணாழிகையுள்ளா ராதி தப்பு ஆசரிக்கும் சிவப்பிராமணர்களுக்கு நெல் 500 காடி; ஸ்ரீபலி கொட்டுவார்க்கு நெல் 600 காடி; திருப்பள்ளித்தாமம் பறிப் பார், திருப்பதியம் பாடுவார் முதலிய திருப்பணி செய்வார்க்கு நெல் 400 காடி ஆக நெல் 2000 காடி. இனி, திருநந்தா விளக்கு, திருப் பூச்சு, தூபதீபம், பழுதுபார்த்துப் புதுப்பித்தல் ஆகியவற்றுக்கு பொன் 20 கழஞ்சு என்க.

* இச் சாசனம் தென்னிந்திய சாசனத் தொகுதிகளின் மூன்றா வது தொகுதியின் முதற்பகுதியைச் சேர்ந்ததாகும்.

சிற்களம்பட்டி என்னும் நிலத்தை விலைக்கு வாங்கி வாண புரத்து வடசிகரக் கோயிலுக்குத் தேவபோகமாக விட்ட செய்தி கூறப்பட்டுள்ளது. இது பல்லவ அரசனான விஜய நந்தி விக்கிரமவர்மன் ஆட்சியின் 62ஆம் ஆண்டில் நடைபெற்றது.

இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி.பி. 9ஆம் நூற்றாண்டு†† என்னலாம்.

---

† இவன் இரண்டாம் நந்திவர்மப் பல்லவமல்லனாவான்; இரண்டாம் பரமேச்வரனுக்குப்பின் இவன் பட்டத்துக்கு வந்து கி. பி. 717 முதல் 779 வரை பல்லவ நாட்டை ஆண்டான். இவன் தந்தை பெயர் இரண்யவர்மன் எனறும், பரமேச்வரனுக்குப் பிள்ளையில்லாததால் மந்திரிகள் முதலியோர் இவனையே அரசனாகத் தெரிந்தெடுத்தார்களென்றும் கூறுவர். இவனுடன் முதல் முதல் எதிர்த்துப் போர்செய்தவர்கள் பரமேச்வரன் வைப்பாட்டி மகனான சித்திரமாயனும், கோச்சடையனது மகனான அரிகேசரி மாறவர்மன் என்னும பாண்டியனுமாவர். இவன் தன் பகைவர்களையெல்லாம் வென்று கி. பி. 738ல் அசுவமேத யாகமொன்று செய்ததாகக் கூறுவர். இடைக்காலத்தில் இவன் மேலைச்சாளுக்கிய மன்னர்களுடன் ஓயாது போர்செய்து வந்ததாகத் தெரிகிறது. இவன் காலத்தில் தோன்றிய கல்வெட்டுகள் பல. அவற்றுள் உதயேந்திர சாசனம், காசாக்குடி சாசனம், தண்டன் தோட்டச் சாசன முதலியன இவன் வரலாற்றை விளக்குவனவாகும். இவன் வைணவ சமயத்தனாயிருந்து திருமங்கையாழ்வாரால் சிறப்பித்துப் பாடப்பெற்றுள்ளான். பராங்குசபாண்டியன், அவன் மகன் பராந்தக பாண்டியன், நந்திவர்மன் என்னும் இராஷ்டிர குல மன்னன், சிவமாறன் என்னும் கங்கை குல மன்னன், மகாவலி வாணராயர் என்னும் வாண அரசன முதலியோர் இவன் காலத்து அரசர்களாவர்.

†† இச் சாசனம் ஏற்பட்ட காலம் ஆராயற்பாலது. இது நந்திவர்மப் பல்லவனது 62வது ஆண்டு கல்வெட்டு எனவே, இவ்வரசன் இரண்டாம் நந்திவர்மப் பல்லவனே (கி. பி. 717-779) யன்றி, மூன்றாம் நந்திவர்மப் பல்லவனாய் (கி. பி. 830-854) இருக்கமுடியாதென்பது வெளிப்படை. எனவே, இச் சாசனம் ஏற்பட்ட காலம கி. பி 779 என்னல் வேண்டும்.

## சாசனம்.

ஓம் நமச் சிவாயம். ஸ்வஸ்திஸ்ரீ. கோவிசைய நந்தி விக்கிரம பருமற்கு யாண்டறுபத்திரண்டாவது ஸகல ஜகத் த்ரயாபிவந்தித ஸுராஸுராதீச பரமேஸ்வர பிரதிஹாரீகிருத மஹாவலி குலோத்பவ ஸ்ரீமாவலி வாணராயர் வடுகவழி பன்னீராயிரமும் ஆள வாணபுரத்து வடசிகர கோயில் புதுக்

---

ஓம் நமச்சிவாயம்: இது சிவ வணக்கமாகக் கூறப்படும் ஒரு தொடர்; பிற சாசனங்களிலெல்லாம் 'ஸ்வஸ்தி ஸ்ரீ' எனனும் தொடர் மங்கலமாய் வந்திருப்ப, இச் சாசனம் 'ஓம் நமச்சிவாயம் ஸ்வஸ்திஸ்ரீ' என்று தொடங்குவது குறிப்பிடத்தக்கது. பின் வரும் அரிகேசரி தேவர் சாசனம் 'சுபமஸ்து' என்னும் தொடரையும், பராக்கிரம பாண்டியதேவர் சாசனம், வாலக்காமயர் சாசனம இரண்டும் 'சுபமஸ்து ஸ்வஸ்தி ஸ்ரீ' என்னும் தொடர்களையும் முதலில் மங்கலமாகக் கொண்டுள்ளன.

கோவிசைய நந்தி வீக்கிரம பருமற்கு: இவன் இரண்டாம் நந்திவர்மப் பல்லவ மல்லனுகும். கி. பி 717 முதல் 779 வரை பல்லவ ராட்சியத்தை இவன ஆண்டான்.

ஸகல ஜகத்............குலோத்பவ: இது ஒரு வடமொழித் தொடர். 'மூன்று உலகத்தவராலும வணங்கப்படுபவரும், தேவாசுரர்களுக்கு இறைவருமாகிய பரமேசுவரனால் துவாரபாலகனுக்கப்பட்ட மாபலியின் வழித் தோன்றலானு' என்பது இதன பொருள். ஸகல ஜகத்ரயம் - சுவர்க்கம், மத்தியம், பாதாளமாகிய சகல உலகங்கள்; அபிவந்திதம் - வணங்கும்; ஸுராஸுராதீசன் - தேவாசுரர்களுக்கு இறைவன்; பிரதிகாரி - துவார பாலகன், வாயிற் காப்போன்.

ஸ்ரீ மகாவலிவாணராயர்: இவன் நந்திவர்மப் பல்லவ மல்லனுட்சிக்குட்பட்டு, தமிழ் நாட்டிற்கும் தெலுங்கு நாட்டிற்கும் இடைப்பட்ட 'வடுகவழி பன்னீராயிரம்' என்ற பகுதியை ஆண்ட வாணர்குலச் சிற்றரசனுவான. ஆள - ஆளும் காலத்தில்.

வாணபுரம்: இதன் மற்றொரு பெயர் 'தீக்காலிவல்லம்' என்பது; இப்பொழுது 'திருவல்லம்' என்றழைக்கப்படுகிறது. இது அக்காலத்தில் வாணருடைய தலைநகரமா யிருந்தது.

வடசிகரகோயில் - வடபக்கத்துக் கோயில்; வடபக்கத்தில் கோபுரத்தையுடைய கோயில் எனினுமாம்.

புதுக்குவித்து - பழுதுபார்த்து: இதைப் புதுக்குவித்த அழிஞ்சிற்களமபட்டி என்னுமூரை இதற்கு நிவந்தமாகக் கொடுத்தவன ஊற்றுக்காட்டுக் கோட்டத்து அளிங்கணபாக்கத்து கிழகத்து அரிதிரனென்னும் தட்டா னுவன்.

குவித்து இதற்கு இளங்கிழவர் மகன் மன்றாடிடை அழிஞ் சிற் களம்பட்டி விலைக்கு கொண்டு குடுத்தேன். ஊற்றுக் காட்டுக் கோட்டத்து அளிங்கண பாக்கத்து கிழகத்து தட் டான் மாதங் மகங் அரிதிரன் குடுத்த தேவர் போகம் மஹா வலி வாணராயர் பிடாகை வலஞ்செய்து கொடுத்தார். இது காத்தார் அடி என் முடி மேலன. இது அழித்தான் கடிகை ஏழா இருவரையும் கொன்ற பாவத்து படுவான். இது

---

இளங்கிழவர் மகன் மன்றடிடை: இளங்கிழவர் என்பவருடைய மகனுன மன்ருடி என்பவனிடத்து. மன்ருடி - நடாசன்.

அழிஞ்சிற்களம்பட்டி: இது ஒரு சிறு கிராமம்; இதனை அரி திரன் விலைக்கு வாங்கி, திக்காலிவல்லம் கோயிலுக்குத் தேவபோக மாகக் கொடுத்தான்.

பிடாகை வலஞ்செய்து கொடுத்தார் - உறுதிப்படுத்தினர்; தான சாசனத்தை ஒரு பெண்யானையின்மீது ஏற்றி, தானம் செய்த ஊரின் எல்லைகளைச் சுற்றி வருவது பிடாகை வலஞ்செய்து கொடுப் பதாகும்; இங்கு இச் சாசனத்தை மகாவலிவாணராயர் அவ்வாறு செய்து உறுதிப்படுத்தினர். பிடாகை - சிற்றூர்.

தேவர் போகம்: கோயிலுக்குத் தானமாகக் கொடுக்கப்படும் நிலம்.

இது காத்தார் அடி என் முடிமேலன: இது காத்தார் அடி யேன் முடிமேலன என்றும் பாடம்.

கடிகை ஏழா இருவரையும்: இத்தொடருக்குப் பலரும் பல வாறு பொருள் கூறுகின்றனர். 'ஊர்ச்சபையின் நிலையான இரு உறுப்பினர்' என்பர் சிலர்; கடிகை - ஊர்ச்சபை; இருவர் என்பது, தாய் தந்தையைக் குறிக்கு மென்பாருமுளர். இனி, 'ஏழா இருவர்' என்பதை 'ஏழாயிரவர்' எனக்கொண்டு, 'ஊர்க் குடிகள் ஏழாரவர்' என்றும், 'கற்றறிந்த பெரியோர் ஏழாயிரவர்' என்றும் பொருள் கொள்வர். கடிகை - கல்விகற்குமிடம்.

இது அழித்தான்.........வாணபுரத்தோம்: இந்தத் தருமத்தை அழித்தால் வரும் பாவத்திற்கு அஞ்சாதுயின். ஆயிரம் பொன் அபராதம் விதிக்கப்படும் என்பது.

அழித்தான் இப்பாவத்துக்கு அஞ்சானுயில் அன்றுள் கோயி லுக்கு ஆயிரம் காணம் தண்டப் படுவோம் வாணபுரத் தேம்.

பஹு பிர் வஸுதா தத்தா ராஜபி ஸகராதிபி
யஸ்ய யஸ்ய பூமி தஸ்ய தஸ்ய ததா பலம்.

---

## 14. மாதவக் கிரமவித்தன் சாசனம்.*

### முகவுரை.

மாதவக் கிரமவித்தன் என்பவன், திருவல்லம் சிவன் கோயிலுக்குக் கொடுத்த தானம் பற்றிய சாசனம் 'மாதவக் கிரமவித்தன் சாசனம்' எனப்பட்டது. இது செங்கல்பட்டு ஜில்லா திருவல்லம் பில்வநாதேசுவரர் கோயில் மகாமண்டபத்தின் வடக்குச் சுவரில் காணப்படுகிறது.

இதில், மாதவக் கிரமவித்தன் என்னும் ஒரு அந்தணன் திருவல்லம் சிவன் கோயில் அதிகாரிகளிடம் 25 கழஞ்சு பொன் கொடுத்து அதன் வட்டியிலிருந்து நாளொன்றுக்கு

---

அன்றுள் கோயில் = அப்பொழுது ஆளுகின்ற அரசன் அரண்மனை; நீதிமன்றம். காணம் - பொற்காசு. தண்டப்படுவோம் - அபராதம் கொடுப்போம்; தண்டம் - அபராதம். வாணபுரத்தேம் - வாணபுரம் சபையோம்.

பஹு பிர்.........ததா பலம்: இது ஒரு வடமொழிச் சுலோகம். இச் சுலோகங்கொண்டு முடியும் பல்லவச் சாசனங்கள் பல உள்ளன. இதன் பொருளைப் பலரும் பல கருத்துப்படக் கூறியுள்ளனர். சகரர் முதலிய அரசர்களிலுலே ஏராளமான பூ தானங்கள் செய்யப்பட்டன; எவரெவர் எத்துணை நிலங்கள் தானம் செய்தனரோ, அத்துணை யளவிற்கு அவர்கள் பயனை அடைகின்றுர்கள்' என்பது இதற்கு ஒரு சாரார் கூறும் பொருள். இனி மற்றொரு சாரார், 'பல சேனைகளையுடைய அரசர்களால் பூ தானம் கொடுக்கப்பட்டாலும், எக்தெந்தக் காலத்தில் பூமி யார் யாருடையதோ அவர்களுக்கு அதன் பயன் பங்கிட்டுக் கொடுக்கப்படும்' என்று பொருள் கொள்வர்.

* இச்சாசனம் தென்னிந்திய சாசனத் தொகுதிகளில் மூன்றுவது தொகுதியின் முதற்பகுதியைச் சேர்ந்ததாகும்.

உழக்காழக்கு எண்ணெய் இட்டு சுவாமி முன்னர் திருநந்தா விளக்கு ஒன்று எரிப்பதற்கு ஏற்பாடு செய்த செய்தி கூறப்படுகிறது. இது மகாவலி வாணராயன் என்னும் வாணர் தலைவனது ஆட்சியில் சகம் 810 ஆம் ஆண்டு † நடைபெற்றது.

எனவே, இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 888ஆம் ஆண்டு என்னலாம்.

## சாசனம்.

ஸ்வஸ்தி ஸ்ரீ. ஸகல ஜகத்ரயாபி வந்தித ஸுராஸுராதீசபுர பரமேஸ்வர பிரதி ஹாரீக்ருத மஹாபலி குலோத்பவ மஹாபலி வாணராஜர் சகர் யாண்டு எண்ணூற்றொருபதாவது, படுவூர்க்கோட்டத்து காரைநாட்டு வன்னிபேடாகிய இரண விக்ரமச் சதுர்வ்வேதிமங்கலத்து ஸபையோம் இக்கோட்டத்து மீயாறுநாட்டுத் தீக்காலிவல்லத்துத் திருத்

---

† சகர் - சகம், சகாப்தம்; அதாவது சாலிவாகன சகாப்தம் என்பது. சாலிவாகனன் என்னும் அரசன் பெயரால் வழங்கும் ஆண்டு மானம். அதன் தொடக்கம் கி பி. 78.

ஸகலஜகத்...துலோத்பவ: 'மூன்று உலகத்தவராலும் வணங்கப்படுபவரும், தேவாசுரர்களுக்கு இறைவருமாகிய பரமேசுவரனால் துவாரபாலகனாக்கப்பட்ட மாபலியின் வழித்தோன்றலான' என்பது இதன் பொருள்.

மஹாபலி வாணராஜர்: இது ஒரு பாணர் தலைவன் சிறப்புப் பெயர். இவனுடைய இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. பேரரசர்களன்றிச் சிற்றரசர்களும் பிறரும் கோயிலுக்குத் தானம் செய்து வந்தனர் என்பதை இது விளக்குகின்றது. பாணர் பல்லவ ஆட்சியினின்று சுயேட்சையடைந்த காலம இது என்பாருமுளர்.

சகர் யாண்டு எண்ணூற்றொருபது: சக ஆண்டு 810; அதாவது கி. பி. 888 என்பது.

படுவூர்க் கோட்டம்: தொண்டைமண்டலத்து 24 கோட்டங்களுள் இது ஒன்று. பல நாடுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது; மீயாறு நாடு, காரை நாடு முதலியன அக்கோட்டத்தைச்சேர்ந்த நாடுகளாகும். காரை நாடு, இராணிப்பேட்டைக்கு வடகிலுள்ள தென்பர்.

வன்னிபேடு: இது வாலாஜபாத்துக்குத் தெற்கே ஒரு மைல் தூரத்திலுள்ள ஒரு ஊர். இதன் மற்றொரு பெயர் இரணவிக்கிரமச் சதுர்வேதிமங்கலம் என்பது. இக்கோட்டத்து - படுவூர்க்கோட்டத்து.

தீக்காலிப் பெருமாநடிகளுக்கு சந்த்ராதித்தவல் ஒரு திருநுந்தா விளக்கு எரிப்பதற்கு நிசதம் உழக்காழக்கெண்ணை யட்டுவதற்கு இக்கோட்டத்துக் காவிரிப்பாக்கமாகிய அவநிநாராயணச் சதுர்வ்வேதிமங்கலத்துக் கீழ்வடசேரி எட்டுக்கூர் மாதவக்ரமவித்தன் பக்கல் தன்ம கட்டளைத் துளை நிறை இருபத்தைங் கழஞ்சு பொன்கொண்டு சந்த்ராதித்தவல் எரிப்பதாக இத்தன்மம் முட்டாமை செலுத்துவோமானோம ஸபையோம், மித்தன்மம் முட்டில் தனமாஸநத்திலெ நிசதம் ஐங்கழஞ்சு பொன் பந்மாஹேஸ்வரரே மன்றப் பெறுவ

---

திருத்தீக்காலிப் பெருமாநடிகள்: இது தீக்காலிவல்லதத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் பெயர்: இப்பொழுது பில்வநாதேசுவரர் எனறு அழைக்கப்படுகிறார்.

சந்திராதித்தவல் - சந்திர சூரியருள்ளவரை. திருநுந்தா விளக்கு - கோயிலில் எப்பொழுதும் எரிந்துகொண்டிருக்கும் விளக்கு. நிசதம் - நாள்தோறும். உழக்காழக்கு - உழக்கும் ஆழாக்கும், ¾படி. அட்டுவதற்கு - கொடுப்பதற்கு.

காவிரிப்பாக்கம்: இது பழவூர்க் கோட்டத்திலுள்ளது. இதன் மற்றொரு பெயர் அவநிநாராயணச் சதுர்வேதிமங்கலம் என்பது. அவநி நாராயணன் என்பது, விசயநந்தி விக்கிரமப்பன்மருக்குரிய சிறப்புப் பெயர்களில் ஒன்று.

கீழ்வடசேரி: வடகிழக்குத் திசையிலுள்ள சேரி: சேரி - முல்லை நிலத்தூர். அந்தணர் வாழுமிட மெனினுமாம்.

எட்டுக்கூர்: இது வன்னிபேடென்னும் அவநிநாராயணச் சதுர்வேதிமங்கலத்திற்கு வடக்கிலுள்ளதோர் ஊர்.

தன்ம கட்டளை: தருமம் செய்வதற்கென்று ஏற்படுத்திய துலாக்கோல்: தன்மாசனத்தவரால் முத்திரையிடப்பட்ட துலாக்கோலெனினுமாம். தன்மாசனம் - நீதிமன்றம்.

துளைநிறை - துளைப்பொன், புடமிடப்பட்டு வழங்கும் சுத்தத் தங்கம்; இது அரசாங்கத்தவரால் பார்வையிடப்பட்டு துளையிடப்படுதால் பெற்ற பெயர் போலும். கழஞ்சு - 12 பண எடை.

இத்தன்மம் முட்டாமை - இத் தருமம் குறையாமல்; தடைபடாமல் எனினுமாம். முட்டில் - தடைபடின்.

தன்மாஸநத்தில் - நீதி மன்றத்தில்; பந்மாஹேஸ்வரர் - சிவனடியார்கள்; மன்றப்பெறுவதாகவும் - மன்றுபூட்டைக் கொடுப்போமாக

தாகவும் இம் மன்றுபாடிறுத்தும் இத் திருநுந்தாவிளக்கு முட்டாமைச் செலுத்துவோமானோம். வன்னி பெடாகிய ரணவிக்கிரமச் சதுர்வ்வேதி மங்கலத்துச் சபையோம். இதற்கு விரோதஞ் செய்தார் கெங்கையிடைக், குமரியிடைச் செய்தார் செய்த பாவங் கொள்வார். இது பந்மாஹெஸ்வார ரக்ஷை.

## 15. வாண மஹாதேவியார் சாசனம்.*

### முகவுரை.

வாண மஹாதேவியார்[1] என்பவள், வாணவித்தியாதரராயனை வாணராயன் பட்டத்தரசியாகும். இவள் திருவல்லம் கோயிலுக்குச் செய்த நிவந்தம் பற்றிய சாசனம் 'வாண மஹா, தேவியார் சாசனம்' எனப்பட்டது. இது செங்கல்பட்டு ஜில்லா திருவல்லம் பில்வநாதேசுவரர் கோயில் மேலைப் புறச் சுவரில் காணப்படுகிறது.

---

வும். மன்றுபாடு - அபராதம். மன்றனெனக்கொண்டு, நிச்சயமாக என்று பொருள் கொள்வாருமுளர். இத்தருமம் செய்யத் தவறினால் நாளொன்றுக்கு 5 கழஞ்சு பொன் கொடுக்கக் கோயில் அதிகாரிகள் சம்மதித்தது இங்கு குறிப்பிடத் தக்கது.

மன்றுபாடிறுத்தும் - அபராதம் கொடுத்தும்; விரோதம் செய்தார் - தடை செய்தவர்கள்.

கெங்கையிடைக் குமரியிடை......கொள்வார்: கங்கையிடத்தும் குமரியிடத்தும் செய்தவர்கள் பாவம் செய்தவராவர். இனி இத் தொடருக்கு, 'கங்கை நதிக்கும் குமரிக்கும் இடைப்பட்ட குடிகள் அத்தனைபேரும் செய்த பாவம் செய்தவராவர்' என்று பொருள் கொள்வாருமுளர். குமரி - கன்னியாகுமரி.

'இதற்கு விரோதம் செய்தார் கங்கையிடைக் குமரியிடைச் செய்தார் பாவம் கொள்வர்' என்பது இச் சாசனத்தின் கடைநிலைக் காப்பு.

இச் சாசனம் தென்னிந்திய சாசனத் தொகுதிகளில் மூன்றாவது தொகுதியின் முதற் பகுதியைச் சேர்ந்ததாகும்.

1. இவளது இயற்பெயர் குந்தவை என்பது.

2. இவன் கி. பி. 854-880 வரை ஆண்ட முதலாம் பிருதிவிபதி ஆவன்; திருப்புறம்பியம் என்னுமிடத்தில் நடந்த போரில் இவன் இறந்தான். சிவமகாராசப் பெருமானடிகள் என்பது இவனது தந்தை பெயர்.

இதில், பாண அரசனுன வாணவித்தியாதரன் பட்டத் தரசியாரும், மேலைக்கங்க அரசனுன பிருதிவிபதியின்[2] மகளாரு மான வாண மஹா தேவியார் திருவல்லம் ஊர்ச்சபையாரிடம் 20 கழஞ்சு பொன் கொடுத்து, கோயில் கருப்ப கிருகத்தில் திருநந்தா விளக்கு ஒன்று எரிப்பதற்கு ஏற்பாடு செய்த செய்தி கூறப்படுகிறது.

இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 9ஆம் நூற்றுண்டு என்று கருதப்படுகிறது.

## சாசனம்.

ஸ்வஸ்தி ஸ்ரீ. ஸ்ரீவிமானம் இழித்துவதற்கு முன்புள்ள சிலா லேகைப்படி ஸகல ஜகத்த்ரயாபி வந்தித ஸுரா ஸுரா தீச பரமேஸ்வர ப்ரதிஹாரீக்ருத மஹாவலி குலோத்பவ வாண வித்தியாதர ராயரான வாணராயர் மஹாதேவியார் கொங் குணி தர்ம்ம மஹாராஜா குணிலபுர பரமேஸ்வரரான ஸ்ரீமாத ஸ்ரீமச் சிவ மஹாராஜப் பெருமானடிகள் மகனார் ப்ரதிபதி

---

ஸ்ரீவிமானம் - கோயில் கருப்பகிருகத்தின்மேல் கட்டப்படும் விமானம்; கருப்பகிருகம் எனினுமாம்.

ஸ்ரீவிமானம்.........சிலாலேகைப்படி - இச் சாசனம் கருப்ப கிருகத்தின் மேலைச் சுவரில் இருந்தது என்றும், அது படியெடுத்துப் புதிதாய்ச் செதுக்கப்பட்டதென்றும் தெரிகிறது. இழித்துவதற்கு - புதுப்பிப்பதற்கு. சிலாலேகை - கல்வெட்டு.

ஸகலஜகத்.........துலோத்பவ - 'மூன்று உலகத்தவராலும் வணங்கப் படுபவரும், தேவாசுரர்களுக்கு இறைவருமாகிய பரமேசு வரனுல் துவாரபாலக ஞக்கப்பட்ட மாபலியின வழித்தோன்ற லான' என்பது இதன் பொருள்.

வாண வித்யாதர ராயர்: மகாபலி வமிசத்துத் தோன்றிய ஒரு அரசன்; இவன் முதலாம் பிருதிவிபதியின் மகளான குந்த வையை மணந்தவன்.

கோங்குணி தர்ம்ம மஹா ராஜ: இத்தொடர் மேலைக்கங்க அர சர்களுக்குரிய பட்டப்பெயராக வழங்கி வந்தது.

குணிலபுர பரமேஸ்வர.........னடிகள்: குணிலபுரத்தவர்களுக் குத் தலைவனுன சிவமகாராசப் பெருமானடிகள் என்பது. குவலய புரம் என்பதன் திரிபே குணிலபுரம் என்பது; இது இப்பொழுது கோலார் (மைசூரிலுள்ளது) என்று அழைக்கப்படுகிறது; கங்ககுல அர சர்களது பழமையான தலைநகர் இது.

அரையர் மகளார் வாணமஹா தேவியார் தீர்காலிப் பெருமா னடிகளுக்கு னொந்தா விளக்கு ஒன்றினுக்கு இத்தீக்காலி வல்லத்து ஸபையார்க்குக் குடுத்த செம்பொன் இருபதின் கழஞ்சு இப்பொன்னுக்குப் பொலியூட்டு நிசதம் உரிய் நெய் ஒரு விளக்குக்கு அட்டுவோமானோம் ஸபையோம். இன்னெய் சந்த்ராதித்தவற் முட்டாமை அட்டுவோமானோம், முட்டில் பந்மாஹேஸ்வரரே நிசதி ஐங்கழஞ்சு பொன் மந்ற வொட் டிக் குடுத்தோம். இத்தண்டப்படும் நெய் முட்டாமை அட்டுவோமானோம் ஸபையோம். இதன்றென்றேம்

---

பரமேஸ்வரர் - தலைவர்; ஸ்ரீநாத, ஸ்ரீமச்: இவைகளில் முன்னது சைன மதத்தவர் பெயா மூன்றும், பின்னது ஆடவர் பெயர் மூன்றும் வைத்து வழங்கும் மரியாதைச் சொற்களாகும். எனவே, சிவ மகாராசப் பெருமானடிகள் சைன மதத்தவரென்று கருத இட மிருககிறது.

ப்ருதிபதி அரையர்: இவனே முதலாம் பிருதிவிபதி என்னும் அரசன் என்பர் இவன் கி. பி. 854 முதல் 880 வரை ஆண்டான். நிருபதுங்கன் இவன் காலத்தில் வாழ்ந்த சாளுக்கிய மன்னனவன்.

வாண மஹா தேவியார்: இவளது இயற்பெயர் குந்தவை என் பது. இவள் வித்தியாதர வாணராயனுடைய பட்டத்தரசியாயிருந்து தீக்காலிவல்லம் கோயிலில் திருநந்தா விளக்கு ஒன்று எரிப்பதற்கு, அவ்வூர்ச் சபையினரிடம் 20 கழஞ்சு பொன் நிவந்தமாகக் கொடுத் தாள்.

தீக்காலிவல்லம் பெருமானடிகள்: இது தீக்காலிவல்லம் கோயி லில் எழுந்தருளிய சிவபெருமான் பெயர். இருபதின் கழஞ்சு - 20 கழஞ்சு.

பொலியூட்டு - வட்டி பெற்று; உரிய் - ½ படி; அட்டுவோமா னோம் - கொடுக்கச் சம்மதித்தோம்.

முட்டில் - குறைவு பட்டால்; பந்மாஹேஸ்வரர் - சிவனடியார் கள்; நிசதி - நிசதம், நாளொன்றுக்கு. ஐங்கழஞ்சு பொன் மந்ற - பொன் 5 கழஞ்சு அபராதம்.

ஒட்டிக்கொடுத்தோம் - சேர்த்துக் கொடுத்தோம். இத்தண் டப்பட்டும் -இவ் வபாரதத்தைக் கொடுத்தேனும்.

இதன்றேன்றேம் - இது அன்று என்றோம், இது செய்ய மறுத்த யாம் கெங்கையிடை,.....கோள்வார்: கங்கையிலும் குமரி

கெங்கையிடைக் குமரியிடைச் செய்த பாவங் கொள்வார். இத் தந்ம்மம் பந்மாஹேஸ்வர ரக்ஷை. இத்தர்ம்மம் ரக்ஷித்தாரடியென் முடிமேலன.

## 16. அதவோடு தோட்டம் சாசனம்.*

### முகவுரை.

அதவோடு தோட்டம் என்பது திருவாங்கூர் இராச்சியத்தில் சுசீந்திரத்தை யடுத்ததொரு நிலப்பகுதி; வீர பாண்டியன் இதனை சுசீந்திரம் கோயிலுக்குத் தானமாகக்கொடுத்த செய்தி பற்றிய சாசனம், 'அதவோடு தோட்டம் சாசனம்' எனப்பட்டது. இது, சுசீந்திரம் தாணுநாதசுவாமி கோயில் முதல் பிரகாரத்திலுள்ள ஒரு இயற்கையான பாறையின்மீது காணப்படுகிறது அச் சாசனம் முதலில் வரிசையாகக் கோடிடப்பட்டு, இரு கோடுகளுக்கிடையில் எழுத்துக்கள் அமையும்படிச் செதுக்கப்பட்டுள்ளது.

இதன் முற்பகுதியில், பாண்டிய அரசனான வீர பாண்டிய தேவனின்† முன்னோர்களுடைய சிறப்புகளுடன் அவன் மலைநாடு வென்ற செய்தியைக் கூறும் மெய்க்கீர்த்தி அமைந்துள்ளது. பிற்பகுதியில் அவன் சுசீந்திரம் தாணுநாத சுவாமி கோயிலுக்கு அதவோடு தோட்டம் என்னும் நிலத்தைத் தானமாகக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது.

இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 11 அல்லது 12 ஆம் நூற்றாண்டு என்று கருதப்படுகிறது.

---

யிலும் பாவம் செய்தவர் பாவம் பெறுவர்; இனி, கங்கைக்கும் குமரிக்கும் இடையிலுள்ளவர் செய்த பாவத்தினைப் பெறுவர் என்று பொருள் கொள்வாருமுளர்.

இத்தர்மம்..... ...முடிமேலான: இவை இச்சாசனத்தின் காப்புநிலையாகும்

* இச் சாசனம் திருவாங்கூர் புதைபொருளாராய்ச்சித் தொகுதிகளில் இரண்டாவது தொகுதியின் முதற் பகுதியைச் சேர்ந்ததாகும்.

† பெருந்தொகைக் குறிப்புரையில் 'இப்பாண்டியன் கி. பி. 1254ல் பட்டம் பெற்றவனென்பர்' என்றிருக்கிறது.

## வீரபாண்டியன்: மெய்க்கீர்த்தி

ஸ்வஸ்தி ஸ்ரீ —
பூமடந்தையும் ஜயமடந்தையும் பொலிந்துதிருப் புயத்திருப்ப
பார்முழுதுங் குடைநிழற்ற பராக்ரமத்தால முடிசூடி
தென்மதுராபுரித் திருவிளையாட் டத்திற்கண்டு
மன்னரெல்லாம் வந்திறைஞ்ச மலைநாடு கொண்டருளி
மாபாரதம் பொருதருளி மன்னவற்குத்தூ துசென்றருளி
தேவாசுர மதுகைதரித்தி தேனுருமாயுங் கொண்டருளி

---

பூமடந்தை - பூமாது; ஜயமடந்தை - சயமாது; பொலிந்து - திருப்புயத்திருப்ப - நாடும் வெற்றியும சேர்ந்து விளங்க என்பது. பார் - உலகம்; குடைநிழற்ற - ஆட்சிபுரிய, பராக்ரமம் - வீரம்.

தென்மதுராபுரி.........புரிந்தருளி: பாண்டிய மன்னருடைய மெய்க்கீர்த்திகளில் அரசர் தங்கள் வெற்றிகளோடு தங்கள் முன்னோர்களின் பெருமைகளையும் கூறி வந்துள்ளனர். மலைநாடு கொண்டதொன்றே வீரபாண்டியன் வெற்றியாகும். தென்மதுரா புரித் திருவிளையாடல் கண்டது, பாரத யுத்தத்தில் துணை நின்று போர் செய்தது, தேவாசுர யுத்தத்தில் தூது சென்றது, திருமறை யோதியது, வடவரையில் கயல் பொறித்தது, இந்திரன் அளித்த ஆரத்தைப் பூண்டது, குறுமுனியால் தமிழ் நூல் கற்றது முதலியன அவனுடைய முன்னோர் செயல்களாகும்.

தென்மதுராபுரி - பாண்டிய நாட்டுத் தலைநகரான மதுரை. இங்கு, சிவபெருமான் 64 திருவிளையாடல்கள் புரிந்தா ரென்பர். திருவிளையாட்டத்தில் கண்டருளி என்பதற்கு, 'திருவினை விளைவிக்கின்ற போரில் வெற்றி கண்டு' என்று பொருள் கொள்வாருமுளர்.

மலைநாடு கொண்டருளி - சேரநாட்டை வென்று; இதன் வரலாறு இப்பொழுது விளங்கவில்லை.

மாபாரதம் பொருதருளி; மகாபாரத யுத்தத்தில் பாண்டவர்க்குத் துணை நின்று பாண்டியனொருவன் போர் செய்தான் என்பர்.

தேவசுர மதுகை தரித்தி மன்னவர்க்குத் தூதுசென்றருளி; தேவாசுரர்களின் வலிமையைக் கெடுத்து மன்னவர்க்காகத் தூது சென்று என்பது இவ்வாறு சென்றவன் பாண்டியன் மாகீர்த்தி என்பர். மதுகை - வலிமை; தரித்தி - அழித்து.

தேனுரு மாயுங்கொண்டருளி - தேன் நாறும் மறையும் கொண்டருளி, தெய்வத்தன்மை பொருந்திய வேதத்தையும் கற்று என்பது.

*வடவரையிற் கயல்பொறித்து வானவர்கோ ஞரம்பூண்டு
திடவாசகக் குறுமுனிபால் செந்தமிழுனால் தெரிந்தருளித்
தளிரிருங்கை மாதுரிமைச் செங்கோலெங்கும் திசைநடாத்தி
மன்னிய வீர விம்ஹா ஸநந்திற்
த்ரைலோக்ய முழுதுடையா ரோடும்வீற் றிருந்தருளி*

---

வடவரையில் கயல் பொறித்து - *இமயத்தில் தன் மீன இலச்சனையைச் செதுக்கி. கொடி நட்டுதலும், இலச்சனையைப் பொறித்தலும் வெற்றிக்கு அறிகுறியாகும். வடவரை - இமயமலை; விந்திய மலை எனினுமாம்.*

வானவர்கோ னாரம் பூண்டு - *தேவேந்திரன் தந்த முத்தாரத்தைத் தரித்து: வானவர்கோன் என்பதற்கு, 'சேர மன்னன்' என்று பொருள்கொள்வாரு முளர்.*

திடவாசகக் குறு முனிவர்பால் செந்தமிழுனால் தெரிந்தருளி: *பாண்டிக்கோவையில் 'அன் றகத்தியன் வா, யுரைதரு தீந்தமிழ் கேட்டோ னுசிதன்' (887) என வருந் தொடர் இதனுடன் ஒப்பிடற்பாலது.*

தளிர் இரும்கை மாது உரிமைச் செங்கோல் - *தளிர்போன்ற அகன்ற கையினையுடைய உமாதேவியாருக்கு உரிமையான செங்கோல், உமாதேவி, தாடதகைப்பிராட்டி என்னும் பெயரோடு பாண்டியநாட்டை ஆண்ட செய்தி இங்கு நினைக்கற்பாலது.*

எங்கும் திசை நடாத்தி - *எல்லாத் திசையும் செலுத்தி. மன்னிய - பொருந்திய.*

த்ரைலோக்யமுழுதுடையாரோடும் வீற்றிருந்தருளிய - *திரைலோக்கிய முழுதுடையாரெனுபவள் வீரபாண்டியன் பட்டத்தரசி; அரசன் அரசியோடு வீற்றிருந்தானென்பது, அரசியின் கருத்தையும் அறிந்து கோடற்கென்க. இவ்வாறு தன் தேவிமாரோடும் அரசன வீற்றிருந்தானென்று கூறுவது அக்கால வழக்கம் போலும். முன்னர், முதற் குலோத்துங்கன் 'அவனி முழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய' (சாசனம் 8), 'உலகுடையாளொடும் வீற்றிருந்தருளிய' (சாசனம் 9, 10) என்றும், விக்கிரமச் சோழதேவன 'முக்கோக்கிழானடிகளோடும் வீற்றிருந்தருளிய' (சாசனம் 11) எனவும், பின்னர் அரிகேசரி என்னும் பராக்கிரம பாண்டியன் 'உலக முழுதுடையாளோடும்......... வீற்றிருந்தருளிய' (சாசனம் 18) என்றும் வந்திருத்தல் காண்க.*

மாமுதல்மதிக் குலம்விளக்கிய கோமுதல்கொற் றவன்மரான திரிபுவனச் சக்ரவர்த்திகள் ஸ்ரீவீர பாண்டியதேவர்—

செய்தி.

அபிஷேக காலத்தில் ராஸிதாகோத்ரத்து ஆஸ்வலாயந ஸூத்ரத்து நாராயணன் சேந்தனை இடையாற்று மங்க லத்து நம்பியும், திருப்புத்தூர் ஆழ்வாரும, பிள்ளையார் வீர கேரள தேவரும், உத்தரமந்திரிகள் வீரகேரளபாண்டியக்

---

மாமுதல் மதிக்குலம் விளக்கிய: பெருமைக்கு முதன்மையான சந்திரகுலத்தை விளங்கும்படிச் செய்த. மா - இலக்குமி என்பாரு முளர் கோமுதல் கொற்றவன்மர் - அரசர்களுக்கு அரசனை.

திரிபுவனச் சக்ரவர்த்திகள்: சேர, சோழ, பாண்டிய நாடுகளுக் குத் 'திரிபுவனம்' என்று பெயர். அம்மூன்று நாடுகளையும் ஆளு வோர் 'திரிபுவனச் சக்கரவர்த்திகள்' எனப்படுவர். இப்பெயர் பெற்றவர்கள் முதற் குலோத்துங்க சோழன் (சாசனம் 8), விக்கிர மச் சோழ தேவன் (சாசனம 11), வீரபாண்டியன் (சாசனம் 16) குலசேகரப்பாண்டியன் (சாசனம் 19) முதலியோராவர்.

அபிஷேககாலத்தில் - முடி சூடிய தினத்தில்; வீரபாண்டியன் கி. பி. 1251ல் முடி சூடினன் என்பர்.

ராஸிதா.........நம்பியும் - இராசிதா கோத்திரத்தில் பிறந்த வனும், ஆசுவலாயனச் சூத்திரத்தை மேற்கொண்டவனும், நாராயண னுக்கு மகனுமான சேந்தன் என்னும் பட்டப்பெயரையுடைய இடை யாற்று மங்கலத்து நம்பியும் என்பது.

ராஸிதா கோத்ரம்: இது ஒரு குடிப்பெயர். ஆஸ்வலாயந ஸூத்ரம்: இது ஆசுவலாயன முனிவர் என்பவரால் எழுதப்பட்ட ஒரு சூத்திர நூல். இல்லறவொழுக்கங்களையும், வேத வொழுக் கங்களையும்பற்றிக் கூறுவது. இந்நூலாசிரியரே முதல் முதல் இருக்கு வேதப் பள்ளிக்கூடம் ஏற்படுத்தியவர்.

நாராயணன் சேந்தன் - நாராயணன் மகன் சேந்தன் என்பது. இடையாற்று மங்கலம்: இஃது ஓர் ஊர். மங்கலமென்பது, சில ஊர்ப் பெயர்களுக்குப்பின் இணைக்கப்படும் ஒரு துணைச்சொல். சீவர மங்கலம், திருமங்கலம் என்பன காண்க.

பிள்ளையார்: இது ஒரு ஆண்பாற் சிறப்புப்பெயர்; அரசிளங் குமாரர் என்று பொருள் கொள்வாருமுளர். உத்தர மந்திரிகள் - முதல் மந்திரி நம்பி, ஆழ்வார், தேவர், கோனர், என்பன அக்காலப்

கோனாரும் நிக்க, இடையாற்று மங்கலத்து நம்பியோடும் திருவாய் மொழிந்தருளி பெருமாளுக்கு திருவாயுஷ் யார்த்தமாக ஸுசிந்த்ரமுடைய நாயனாற்கு பெருமாள் தானம் பண்ணிக் குடுத்தருளின பூமி தென்கூற்றுப் புறத்தாநாட்டுப் பூசன்குடிப்பா லதவோடு தோட்டம். இவ்வதவோடு தோட்டத்துக்கு பெருநான் கெல்லை. கீழெல்லை பாதிரிததோட்டத்து நீர்நக்கல், தென்னெல்லை கல்க்குழிக்கு வடக்கு, மேலெல்லை புல்லாங்குறிச்சிக் கர்கறை வயலில் ஒற்றுவாயல் கிணற்றுக்கு கிழக்கு, வடவெல்லை கறடி கும்பல் கடம்புக்கு தெற்கு, ஏரி இரண்டினால் விளை நிலமும் காடு முள்ப்பட நிலம எழு வேலி. இன்னில மேழு வேலியும் இறையிலிகாராண்

---

பட்டப் பெயர்களாயிருத்தல் கூடுமென்று தெரிகிறது. நிக்க - நிற்க, காண என்றபடி.

திருவாய் மொழிந்தருளி - பேசி; பெருமாளுக்குத் திருவா யுஷ் யார்த்தமாக - அரசனுக்கு நீண்ட ஆயுளுண்டாக.

ஸுசிந்த்ரமுடைய நாயனார் - சுசீந்திரம் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான்; சுசீந்திரம் என்பது, திருவாங்கூர் நாட்டிலுள்ள. கன்னியாகுமரிக்கு வடக்கே எட்டு மைல் தூரத்திலுள்ளதொரு சிவதலம். பெருமாள் - அரசன்; பூமி — நிலம்.

அதவோடு தோட்டம்: இது ஒரு நிலத்தின் பெயர்; தென் கூற்றில், புறத்தாநாட்டைச் சேர்ந்த பூசன்குடிப்பகுதியி லுள்ளது; இரண்டு ஏரிகளின் பாய்ச்சலை யுடையது. விளை நிலமும் காடு முடையது. எழு வேலி நிலம் கொண்டது. கிழக்கே பாதிரித் தோட்டத்து நீரநக்கலையும், தெற்கே கல் குழியையும், மேற்கே புல்லாங் குறிச்சிக் கர்கறை வயலில் ஒற்றுவாயல் கிணற்றையும், வடக்கே கறடிக் கும்பல் கடம்பையும் எல்லைகளாக வுடையது. இதனை வீர பாண்டியன் சுசீந்திரம் சிவன்கோயிலுக்குத் தானமாகக் கொடுத்தான்.

பூசன்குடிப்பால் - பூசன்குடி எனும் ஊர்ப்பகுதியி லுள்ள. நீர்நக்கல் - ஏரியின உள்வாய்நீர் தேங்கும் எல்லையிடம் (Limit of water-spread of a tank); வாய்க்கால் என்பாருமுளர்.

கல்க்குழி - கல்லெடுத்து குழிந்த நிலப்பகுதி போலும்; மலைச் சாரல் பகுதி எனினுமாம். புல்லாங்குறிச்சி; - குறிச்சி என்பது, குறிஞ்சிநிலத் தூர். கடம்பு - காடு.

ஏரி இரண்டினால் - இரண்டு ஏரிப் பாய்ச்சலினால். விளை நிலமும் காடு முட்ப்பட - நஞ்செய் நிலமும் புஞ்செய் நிலமும சேர்ந்த. வேலி - ஒருநில அளவு (6 74 ஏக்கர்).

இறையிலி காராண்மையு முட்பட - இறையிலியும் காராண்மையு முட்பட. அதாவது அரசாங்கத்தாருக்குக் கொடுக்கவேண்டிய இறை

மையு முட்பட ஸ்வசிந்த்ரமுடைய நாயினாற்கு தானம் பண்ணினார் பெருமாள் முன்னுடையாரும் பழமபேரும் நீக்கி இப்படிக்கு பெருமாள் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் குடுக்கவென்று திருவாய் மொழிந்தருளி திருமந்திரவோலை முரப்புநாட்டு மறவனூரம்பலவன் வேளானை நித்த விநோத மூவேந்த வேளாரெழுததினால் ப்ரஸாதஞ் செய்தருளிய ஸ்ரீமுகத்தினாலும், ஸேனாபதிகள் வெண்மைக்குடி நாட்டு இளவெணமைச் சந்திரசேகரனை வீரபாண்டிய மூவேந்த வேளார் கடையீட்டினாலும், புரவுவரி திணைக்கள நாயகம்

---

யும் நிலச் சொந்தக்காரருக்குக் கொடுக்கவேண்டிய நிலக்கிரயமும உட்பட நீக்கி என்பது. இறையிலி - வரி நீக்கப்பட்ட நிலம் காராண்மை - நிலத்தைப் பயிரிடும் உரிமை; ஒரு பழைய வரி யென்பாருமுளர். நாயினாற்கு — நாயனாற்கு, இறைவனுக்கு.

பெருமாள் - பெருமையை ஆளுபவன், அரசன். 'உடையார்' என்ற பெயரைப் போல, இப்பெயர் இறைவனுக்கும் அவன் அடியாருக்கும் வழங்கும் இடமு முண்டு.

முன்னுடையாரும் பழம்பேரும் நீக்கி - முன்பு இதற்கு உரிமையுடையார் உரிமையையும, இதன் பழம்பெயரையும் நீக்கி. இப்படிக்கு பெருமாள் — இப்படிக்கு அரசன்.

கல்லிலும் செம்பிலும் வெட்டிக்குடுக்க வென்று; கல்லில் வெட்டுவதைச் செப்புப்பட்டயத்திலும் எழுதிக்கொள்ளும் பழக்கம் அக்காலத்தில் உண்டு என்பதை இத்தொடர் விளக்குகின்றது. இவ்வாறே முன்னருள்ள பாக்கூர் சாசனம் (7), மணிமங்கலம் சபையோர் சாசனம் (10) அதவோடு தோட்டம் சாசனம் (16) அரிகேசரி தேவர் சாசனம (18), பராக்கிரம தேவர் சாசனம் (19) முதலியவற்றிலும் வந்திருத்தல காண்க.

திருவாய் மொழிந்தருளி - கட்டளையிட்டு; திருமந்திரவோலை - அரசாங்கக் காரியதரிசி; வேளானை — வேள் என்னும் பட்டப் பெயர் தரித்த.

ப்ரசாதம் செய்தருளிய - அனுக்கிரகித்த, அளித்த. ஸ்ரீமுகம் - திருமுகம், அரசனது சாசனம்; கட்டளை எனினுமாம்.

ஸேனாபதிகள் - படைத்தலைவன்; கடையீடு - கீழதிகாரியின் உத்தரவு; கையெழுத்து என்பாருமுளர். புரவுவரி திணைக்கள நாயகம் - அரசிறை மேலதிகாரி (Superintendent of revenue accounts); புரவுவரி திணைக்கள மென்பது, அரசிறைக் கணக்கு வைப்போர் கூடும் அலுவலகம்.

மலே கூற்றத்து விளத்தூர் நாராயணன் கேசவனான தென்னவ சிகாமணி மூவேந்த வேளாரெழுத்தினாலும், முகவெட்டி நாயகம் செம்பில் நாட்டு அரையனேரி தாயன் பொன்னனான குறும்பினுடையா னெழுத்தினாலும், கூற்றுக்கு கூறு திருவழுதி வளநாட்டு கோட்டூர்ப் பேரருளாளன் கற்றங் குடியான வானவன் வழுதிக்கோன் டெ.....ட்டின் உள்வரி படியாலும் நித்த விநோத மூவேந்த வேளாரெழுத்தினால் ப்ரஸாதம் செய்தருளிய ஸ்ரீமுகத்தாலும் வீரபாண்டிய மூவேந்த வேளார் கடையீட்டாலும், புரவுவரியா ரெழுத்திட்ட உள்வரியாலும், இக்காலமுதல் திருப்படிமாற் றுள்ளிட்டன செலுத்துவாராகச் சொனனேம் ஸ—சித் தாமுடைய நாயனாற்கு.

---

## 17. கன்னி பகவதியார் சாசனம்*

### முகவுரை.

கன்னி பகவதியார் என்பது, கன்னியாகுமரிக் கோயில் தெய்வத்தின் திருப்பெயராகும். அப் பகவதியாருக்குக் கொடுக்கப்பட்ட நிலம் பற்றிய சாசனம் 'கன்னி பகவதியார் சாசனம்' எனப்பட்டது. இது கன்னியாகுமரிக் கோயில் முதல் பிரகாரத்தின் கீழைச் சுவரில் காணப்படுகிறது.

---

முகவெட்டி நாயகம் - புரவுவரித் திணைக்களத்தில் இருக்கும் முகவெட்டி என்னும் உத்தியோகத்தர்களுக்குத் தலைவன். திருவழுதி வளநாடு - பாண்டிய நாட்டிற்குரிய மற்றொரு பெயர்.

உள்வரி - ஒரு சிறு வரி, புரவுவரியார் - அரசிறைக் கணக்கன்; திருப்படி மாற்று - கோயில் மூர்த்திகட்கு நிவேதிக்கத் தரும் அரிசி முதலிய பண்டம்,

இச் சானத்தில் புறத்தா நாடு, முரப்பு நாடு, வெண்பைக் குடி நாடு, செம்பில் நாடு, திருவழுதி வளநாடு மு.லிய நாட்டுப்பெயர்களும் - இடையாற்று மங்கலம், திருப்புத்தூர், பூசனகுடி, புல்லாங்குறிச்சி, மறவனூர், இளவெண்பை, விளத்தூர், அரையனேரி, கோட்டூர் முதலிய ஊர்ப்பெயர்களும் வந்திருத்தல் காண்க.

* இச்சாசனம் திருவாங்கூர் புதைபொருளாராய்ச்சித் தொகுதிகளில் முதற்றொகுதியைச் சேர்ந்ததாகும்.

இதன் முற்பகுதியில், 'திருவளரச் செயம் வளர' என்று தொடங்கும் ஸ்ரீ பராந்தகதேவ பாண்டியன் † மெய்க்கீர்த்தி யமைந்துள்ளது. பிற்பகுதியில் அவன் தன் பிறந்த நாளான தைப் பூசத் தன்று, அதைக் கொண்டாடுவதற்குக் கோயிலில் செலவாகும் செலவுகளுக்கு ஒரு நிலத்தைத் தானமாகக் கொடுத்த செய்தி காணப்படுகிறது. இது அவனுடைய ஆட்சி யின் ஒன்பதாவது ஆண்டில் நடைபெற்றது.

இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 12 அல்லது 3 ஆம் நூற்றாண்டு என்னலாம்.

---

## பராந்தக பாண்டியன்: மெய்க்கீர்த்தி.

ஸ்வஸ்திஸ்ரீ—
திருவளரச் செயம்வளரத் தென்னவர்தம் குலம்வளர
வருமறைநான் கவைவளர வனைத்துலகுந் துயர்நீங்கத்
தென்மதுரா புரிதோன்றித் தேவேந்திரனோ டினிதிருந்து
மன்னர்பிரான் வழுதியர்கோன வடிம்பலம்ப நின்றருளி
மால்கடலை யெறிந்தருளி மலையத்துக் கயல்பொறித்துச்

---

† இவன் முதற் குலோத்துங்க சோழன் ஆட்சியின இறுதிக் காலத்திலும், விக்கிரமச்சோழ னாட்சியின் தொடக்கத்திலும் இருந்து பாண்டிய நாட்டை ஆண்டான். எனவே, இவன் காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். "இவன் வென்றதாகச் சொல்லப்படும் தெலுங்க வீமனை, விக்கிரமச் சோழனும் வென்றதாக அவன் மெய்க்கீர்த்தியில் சொல்லப்பட்டிருப்பதால், இவர்கள் இருவருமே சேர்ந்து தெலுங்கவீமனைப் போரில் வென்றிருத்தல் வேண்டு" மென்று கூறுவர் உயர்திரு: சதாசிவ பண்டாரத்தாரவர்கள்.

திரு – செல்வம்; செயம் - வெற்றி; தென்னவர் - பாண்டியர்; அருமறை நான்கு - அரிய நான்கு வேதம்; அவையாவன இருக்கு, இயசுர், சாமம், அதர்வணம்.

தென் மதுரா.........கயல் பொறித்து: தேவேந்திரனோடு வீற்றிருந்தது, கடல் தன்னை வணங்க நின்றது, மால் கடல் எறிந்தது, மலையத்துக் கயல் பொறித்தது முதலியன பராந்தக பாண்டியனது முன்னோர் செயல்களாகும்.

தென் மதுரை - பாண்டிய நாட்டின் தலைநகரமான மதுரை; மன்னர் பிரான் வழுதியர்கோன் - பேரரசனான பாண்டிய மன்னன்;

சேரலனைச் செருவில்வென்று திறைகொண்டு வாகைசூடிக்
கூபகர்கோன் மகட்கொடுப்பக் குலவிழிநஞ் கைக்கொண்டு
கன்னிப்போர் செய்தருளிக் காந்தளூர்ச்சாலை கலமறுத்து

---

வடிம்பு அலம்ப - கால் நுனி நனைய; பாதங்களில் வந்து வணங்க. 'ஆழி வடிம்பலம்ப நின்றானை' என நளவெண்பாவில் வந்திருத்தலுங் காண்க. மால் கடல் - கரிய கடல். எறிதல் - நிலைகுலையச் செய்தல்; மதுரையை யழிக்க வந்த கடல் சுவறிப் போகும்படி உக்கிர குமார பாண்டியன் வேல் விட்ட வரலாறே 'மால்கடலையெறிந்தருளி' என்று கூறப்படுகிறது. மலையத்து - வடவரையில்; இமயத்தில், கயல் பொறித்து - தன்னுடைய கயல்மீன் இலச்சனையைச் செதுக்கி என்றபடி.

சேரலனைச்............கலமறுத்து: சேர மன்னனை வென்று திறைகொண்டது, கூபகத்தரசன் மகளை மணந்து விழிஞம் என்ற நகரைக் கைப்பற்றியது, காந்தளூர்ச் சாலையிற் கலமறுத்தது முதலியன பராந்தகன் வெற்றிகளாகும். பின்னர்த் 'தெலிங்க வீமன் குளங் கொண்டு, தென்கலிங்கம் அடிப்படுத்தது' விக்கிரமச் சோழனுக்குத் துணைபோய் என்க.

செரு - போர். திறை - கப்பம்; வாகை சூடி - வெற்றி மாலையணிந்து. கூபகர் கோன் - கொல்லத்தைத் தலைநகராகவுடைய தென் திருவாங்கூர் நாட்டிற்கு அரசன். மகட் கொடுப்ப - மகளை மணஞ்செய்து கொடுக்க. குலவிழிநம் - சிறப்பமைந்த விழிஞம் என்னும் ஊர்; இது திருவனந்தபுரத்திற்குத் தெற்கே பத்து மைல் தூரத்திலுள்ள ஒரு துறைமுகப்பட்டினம். இதனை முன்னர் முதற் குலோத்துங்க சோழன் பிடித்து, 'குலோத்துங்கசோழன் பட்டினம்' என்று பெயர் வைத்துள்ளான். கைக்கொண்டு - தன்னாட்சிக் குட்படுத்தி.

கன்னிப்போர் - முதல் முதல் செய்யும் போர்; இளவரசனாக இருந்து செய்யும் போர் என்றும் கூறுவர்.

காந்தளூர்ச்சாலைக் கலமறுத்து: இச் செயலை, சோழ மன்னரில் முதல் இராசராசன் (சாசனம் 1, 2), இராசாதிராச தேவன் (சாசனம் 7) ஆகிய இருவரும், பாண்டியரில் பராந்தகனும் (சாசனம் 16) புரிந்துள்ளனரென்று தெரிகிறது. சாலை என்பதற்கு, கடற்றுறை பட்டினம் என்றும், உணவுச்சாலை என்றும், கலாசாலை என்றும் பலரும் பல கருத்துப்படப் பொருள் கூறுவர். விளக்கம் முந்திய குறிப்புரைகளில் காண்க.

*மன்னுபுகழ் மறையவர்த மணியம்பலத்து வினிதிருந்து*
*ஆயிரத் தெண்மர் அவிரோதம் பணிப்பணியால்*
*மறைபேர்த்துக் கல்நாட்டிப் பண்டுள்ள பேர்தவிர்த்து*
*நிறுப்பனவும்அளப்பனவுங்கயலெழுதி அனந்தபுரத்தெம்மாற்கு*

---

மன்னுபுகழ் - நிலையான புகழ்; மறையவர்தம் மணியம்பலம்: அந்தணர் கூடும் மணியம்பலம் என்பது. இது காந்தளூரிலுள்ள சபையின் பெயர்; இதன அங்கத்தினர் 1008 பேர். வேதாகமங்களை ஆராய்தலும், உலகத்தில் தருமத்தை நிலைநிறுத்துதலும இவர்கள் தம் கடமையாகக் கொண்டிருந்தனர் என்று தெரிகிறது.

ஆயிரத் தெண்மர் அவிரோதம் பணிப்பணியால் - மணி மங்கலம் சபையிலுள்ள ஆயிரத்து எட்டு பேரும் தம்முள் கருத்து வேறுபாடின்றிக் கேட்டுக்கொண்டபடி. அவிரோதம் - விரோதமின்மை; பணிப்பணியால் - வேண்டுதலால்.

மறைபேர்த்துக் கல் நாட்டி: பராந்தகன் வேதாகமங்களிலுள்ள விசேடப் பயிற்சிக்குரிய பகுதிகள் இன்னின்னவைகளென்று அறிவில் பெரிய அந்தணர்களைக்கொண்டு தேர்த்தெடுத்து அவைகளைக் கல்லில் எழுதி நாட்டுவித்தான் என்பது. இனி, இத்தொடரின் பாடபேதமாக 'பறை பேர்த்துக் கல்நாட்டி' அல்லது 'பறைகொட்டிக் கல்நாட்டி' என்று கொண்டு, இறந்த வீரர்களின் அரியசெயல்களைக் கல்லில் எழுதி நாட்டி, பறைகொட்டி விழாக் கொண்டாடி என்று பொருள் கொள்வாருமுளர்.

பண்டுள்ள பேர் தவிர்த்து: பராந்தகன் தான் வென்ற ஊர்களுக்கு முன்பிருந்த பெயரை நீக்கிப் புதுப்பெயர்களைப் புனைந்து என்றபடி. இவ்வாறு அரசர் தாம் வென்ற இடங்களுக்குப் புதிய பெயரிடுவதைச் சோழ மன்னரது சாசனங்களிலும் காணலாம்.

நிறுப்பனவும் அளப்பனவும் கயலெழுதி: பராந்தகன் தன் காலத்தில் போலியாக வழங்கிய நிறுத்தல், முகத்தல் முதலிய அளவைகளைப் பரிசோதித்து, அவைகளில் தன் கயல்மீன இலச்சனையைப் பொறிக்கச் செய்தான் என்பது.

மறை பேர்த்துக் கல் நாட்டியது, ஊர்களுக்குப் பண்டுள்ள பெயர்களைத் தவிர்த்தது, நிறுப்பன அளப்பனவற்றிற்குக் கயல் பொறித்தது முதலியன பராந்தகன் செய்த சீர்திருத்தங்கள் என்னலாம்.

நிலவியபொன் மணிவிளக்கு நின்றெரியப் பத்தமைத்து
ஆங்கமைந்த தாயநல்லூர் அடதென்னாட் டரையனென
அறிவகையால் அறிந்துணர்த்து தென்னவர்தங் குலதெய்வம்
தென்குமரி கன்னியார்தம் திருநாள் விளாவதனிற்
தைப்பூசப் பிற்றை நான்று
வந்திரந்தோ ரெல்லாற்கும் மாற்றாதே தியாகம்இட
அறத்தால் விளங்கிய ஆய்ந்த கேள்விப்
புறத்தாய நாடு பூமகட் களித்துத்

---

அனந்தபுரத் தம்மான் - திருவனந்தபுரத்தில் எழுந்தருளியுள்ள இறைவன். பராந்தக பாண்டியன் திருவனந்தபுரத்து விஷ்ணு கோயிலுக்குப் பத்துத் திருநுந்தா விளக்குத் தானமிட்டான் என்பது, 'அனந்தபுரத்................பத்தமைத்து' என்ற அடியால் விளங்கும். நின்றெரிய - நிலையாய் நின்று எரிய.

ஆங்கமைந்த தாய நல்லூர் - அங்குள்ள தாயநல்லூர்; ஆங்குள்ள தான நல்லூர் எனினுமாம்; அட - அழிய.

தென்னாட்டரைய னென - தான் தென்னாட்டிற்கு (பாண்டிய நாட்டிற்கு) அரசன என்று. அறிவகையால் அறிந்துணர்த்து - எல்லாரும் அறியும் வகையில் அறிவுறுத்தி.

தென்னவர் தம் - பாண்டியர்களுடைய; தென் குமரி கன்னியார் தம் - தெற்கே கன்னியாகுமரி என்னும் பதியில் எழுந்தருளியுள்ள கன்னி பகவதியாருடைய. கன்னிபகவதியார், பாண்டிய மன்னர்களின் குல தெய்வமாகும்.

திருநாள் விளாவதனில் - திருநாள் உற்சவத்தில்; தைப் பூசப் பிற்றை ஞான்று - தைப்பூசத்துக்கு மறுநாள் என்றபடி. பராந்தக பாண்டியன் பிறந்த நாள், தை மாதத்துப் பூச நாளாகும். 'நாம் பிறந்த தைப்பூசத் திருநாளுக்கு' எனப் பின்னர் இச் சாசனத்தில் வருதல் காண்க. அரசன் பிறந்த நாளில் கோயிலில் விழா நடத்தித் தானம் செய்வது அக்கால வழக்கம் என்று இதனால் தெரிகிறது.

இரந்தோர் - யாசித்தவர்; மாற்றாதே - மறுக்காது வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுக்க.

அறத்தால்.........பூமகட் களித்து: புறத்தாநாடு இராசராசப் பாண்டிநாட்டு, உத்தமச் சோழ வளநாட்டின் கண்ணுள்ளது அதாவது இப்பொழுது இருக்கும் கன்னியாகுமரிப் பகுதியே அந்நாடு.

தெலிங்கவீய்மங் குளங் கொண்டு தென்கலிங்க மடிப்படுத்து திசையனைத்து முடனாண்ட ஸ்ரீபராந்தக தேவற்குயாண்டு—

## செய்தி

கூ தாவது ராஜராஜப் பாண்டிநாட்டு உத்தமசொழ வளநாட்டுப் புறத்தாயநாட்டுக் குமரிக் கன்னிபா பகவதியார் தேவதானத்துக்குப் பெருநான் கெல்லை. வடவெல்லை நாஞ்சி நாட்டு அதியனூரும், மினனாட்டுப் பெருங்குடி மலையுட்பட

---

என்னலாம். அந்நாட்டினர் அறம் செய்தலிலும், கலவிக் கேளவிலும் மேப்பட்டிருந்தன ரென்பது 'அறத்தால் விளங்கிய ஆய்ந்த கேள்விப் புறத்தாய நாடு' என்ற தொடரால் விளங்குகிறது. பராந்தகன் அந் நாட்டைக் கன்னிபகவதியாருக்குத் தானம் செய்தான். பூமகள் - கன்னிபகவதியார்.

தெலிங்க வீய்மங் குளங்கொண்டு: தெலிங்கவீமன்குளம் என்பது ஓர் ஊர்; இது, தென்கலிங்க நாட்டை யாண்ட தெலிங்க வீமன் பெயரால் பெற்ற பெயர்; தெலிங்க வீமனுக்குரிய குளம் என்பாரு முளர் பராந்தகன் இதனைத் தென் கலிங்கப் போரில் பிடித்தான் போலும். தென் கலிங்க மடிப்படுத்து: தென கலிங்கத்தை ஆண்டவன் தெலிங்க வீமன்; பராந்தகன இவனை வென்று இவனாட்டைத் தன்னடிப் படுத்தினான் என்பது. இஃது அவன விக்கிரமச் சோழனுக்குத் துணைபோய் கொண்ட வெற்றியாகும்.

திசையனைத்தும் உடனாண்ட - எல்லாத் திசையிலுமுள்ள நாடுகளையும் ஒன்று சேர்த்து ஆண்ட.

ராஜராஜப் பாண்டிநாடு: இது பாண்டிய நாட்டிற்குரிய மற்றொரு பெயர். முதலாம் இராசராசன் இதனை வென்று, இப் பெயர் இட்டதாகத் தெரிகிறது. புறத்தாய நாடு: இது இக்காலத் திலுள்ள கன்னியாகுமரிப் பிரதேசமாகும்

குமரிக்கன்னியார பகவதியார் தேவதானம்: கன்னியாகுமரிக் கண்ணுள்ள கன்னி பகவதியார் கோயிலுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலம்.

நாஞ்சிநாட்டு அதியனூர்: நாஞ்சில் நாடு, இப்பொழுது மலையாளம் சில்லாவின் ஒரு தாலூகாவாக விளங்குகிறது. நாஞ்சில் வள்ளுவன என்ற சங்ககாலப் புலவர் தோன்றியதும் இந்நாடே. அதியனூர், மணற்குடி முதலியன இந்நாட்டைச் சேர்ந்த ஊர்களாகும்.

பனைகுடி நீங்கலாக மூன்றுங் கூடின மலையிற் சந்தேச தேசப் பிரமாணம் ஆனை மலையும், மனுத்திரப் பாறையும், தோரண குழியும், பிடாரனேரிக் கொழுக்குத்தும், கண்டனேரிக் கொழுக்குத்தும், வாழையாற்று வடவாறும், நாவாயும், கோடிக்களாவும், விறகடு குப்பையும், ஒழுக்கந் தாழ்வும், இன்னாட்டு வட கீழ் மூலை கருங்குளமும், அள்ளியூரும், பூசன் குடியும் கூடின பிரமாணமான புக்கூழ்குழியும், கிராரத் துக்குளமும், சிதற்றைப் பாறையும், நெடுவாலி குழியும், மேற்கு நோக்கின நீர்வீழ் தாழ்வும், விளக்கன் குழி நீர் கொள்ளியும், இரட்டைக் கிணறும், ஆதனூர் துறை நீர்வீழ் தாழ்வும், பால்பாடும், நெடுங்களரும், உசிலோடு குழியும், ஆனை அடிப் பாறையும், கறடி மணலும், இரட்டை நூரம்பும், கறிம்பாடும், ஆனைக்கல்லும். இவ்வெல்லையில் கிழக்குக் கருங்குளவளநாட்டு விசாபுரியும், இருக்கந் துறைக்குந்

---

மூன்றுங்கூடின மலையில்: நாஞ்சினாட்டு அதிகனூர், மின்னாட்டுப் பெருங்குடி, பனைகுடி ஆகிய மூன்று ஊர்களும் சேர்ந்த இடத்திலுள்ள மலைப்பகுதியில் என்றபடி. சந்தேச தேசப் பிரமாணம் - தேசத்தின் குறிப்பிட்ட அளவு.

கோழக்குத்து - எல்லையைக் குறிப்பதற்கு நிலத்தில் நடப்பட்ட கொழு: கொழு - முளை. விறகடு குப்பை - விறகெரிக்கும் குப்பை மேடு போலும். ஒழுக்கந்தாழ்வு - நீர்வீழ்ச்சி; நீரோடை எனினுமாம்.

இன்னாட்டு.........பிரமாணம்: இன்னாடு என்றது, மின்னாடு என்னும் பகுதியை. அந்நாட்டிற்கு வடகீழ்த் திசையிலுள்ள கருங்குளம், அள்ளியூர், பூசனைகுடி ஆகிய மூன்று ஊர்களையும் சேர்ந்த குறிப்பிட்ட நிலத்தில் என்றபடி.

நீர்விழ் தாழ்வு - நீர் வீழ்ச்சி; நீர்கோள்ளி - வாய்க்கால்; நீரைக் கொள்ளும் ஏரி எனினுமாம். நெடுங்களர் - களர் நிலப்பகுதி. கறடி மணல் – பெருமணல் மேடு; இரட்டை நூரம்பு: இது சேற்று நிலப்பகுதி போலும். நூரம்பு - சேறு.

இவ்வெல்லையில் கிழக்கு - இந்த இடத்திற்குக் கிழக்கே; கருங் குள வளநாடு: இது திருநெல்வேலிக்குத் தெற்கிலுள்ளதான நாடு என்பர். விசாபுரி, இந்நாட்டிலுள்ளதோர் ஊர்.

தென்கீழ் மூலையும், தென் எல்லை கிழக்குப் பாருசமே போந்து இந்நாட்டுத் தென்மேல்மலை கோளன்குறிச்சியான கோளன் குடியும், நாஞ்சிநாட்டு மணற்குடியும் கூடின சந்தேசப் பிரமாணம் கோளங் குடிக்குத் தென்மேல் மூலை பெ......ழை யும், கட......மபன்றி தலை விளை......ற்கும்......நடுவிளையும், மாணுக்கன்குழிக் கீழ்விளிம்பும், நங்கை கிணறு...... தாகச் சுசீந்திரமும், கோளன் குறிச்சியும்...... வழியும், தேவி குளத்தில் நீர் கொள்ளியும், ஆறுண்ணி வட கொம்பில் ......க்குப் பாறையும்,...... பாப்பான் குழியும், ......பாறையும், வடக்கு நோக்கின நீர்வீழ்க் காரடு வெளளெளுப்பைத் தாழ்வும், பள்ளிச்சந்த நீங்கலாக குருந்தே......ளற் பொற்றையும், மலையே யொழுங்காகப் போந்து தோவாளைக்குக் கிழெலை க.........ளையும, உருண்டப் பொற்றையும், ஒழுங்காக ஊசி மலையும், ஒழுங்காகப போந்து ஆனை மலையாக இவ் விசைந்த பெருநான கெல்லை யுட்பட்ட......தங்களும் அமிர் துபடி சாந்துப்படியுஞ் சந்தனங் கற்பூரத்துக்கும் நாம பிறந்த தைப்பூசத் திருநாளுக்கும் செல்விதாக இறையிலி தேவதானமாக நமக்குடையபடி நீர்வார்த்துக் குடுத்தோம் குமரிக் கன்னிப் பகவதியாற்கு.

---

கோளன் குறிச்சி: இது மின்னுட்டிலுள்ளதோர் ஊர்; இதனைக் கோளனகுடி என்றும் கூறுவர்.

ஆறுண்ணி வடகோம்பு - ஆறுண்ணி என்பது ஒரு எரியின் பெயர் போலும்: அதன் வடகோடியில் என்பது இதன பொருள். நீர்விழ்க்காரடு - நீர்வீழ்ச்சி.

பள்ளிச்சந்தம் - சைன பௌத்தக் கோயில்களுக்கு விடப்பட்ட கிராமம். பொற்றை - சிறுமலை; அதனைக்கொண்ட ஊர் எனினுமாம்.

அமிர்துபடி சாந்துப்படி - தினசரி அமுதுக்கும் சந்தனத்துக்கும் கொடுக்கப்படும பொருள்.

நாம் பிறந்த தைப் பூசத் திருநாளுக்கும்: [பராந்தக பாண்டியன் பிறந்த நாளான தை மாதப் பூசத்தனறு கோயிலில் நடக்கும் விழாவிற்கு என்றபடி. செல்விதாக - செலவுக்காக.

நமக்குடையபடி - நாம் எண்ணியபடி. நீர்வார்த்துக் கொடுத்தோம்: அரசன் தானம் செய்யுங்கால் தாரை வார்த்துக் கொடுத்தல் அக்கால வழக்கம என்று இதனல் தெரிகிறது.

கிழக்குப் பாருசமே போந்து - கிழக்குப் பக்கமே போய். இந்நாட்டு - மின்னுட்டு என்பது. பெருங்குடி, பணைகுடி, கருங்குளம், அள்ளியூர், பூசன்குடி, கோளன்குடி முதலியன இந் நாட்டிலுள்ள ஊர்களாகும.

# 18. அரிகேசரிதேவர் சாசனம்*

## முகவுரை.

அரிகேசரி தேவர் என்பது, பராக்கிரம பாண்டியனுக்குரிய மற்றொரு பெயர். அவன் திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்த தென்காசி விசுவநாதசுவாமி கோயிலுக்குத் தானங் கொடுத்த செய்தி பற்றிய சாசனம், 'அரிகேசரி தேவர் சாசனம்' எனப்பட்டது. இது, தென்காசி விசுவநாதசுவாமி கோயில் நடுவிடத்துக் கருப்பக்கிருகத்தின் மேலைப்புற அடிச்சுவரிலும், தெற்குப்புற அடிச்சுவரிலும் காணப்படுகிறது.

இதன் முற்பகுதியில், அரிகேசரி தேவர் வெற்றிகளையும், அவன் செய்த தருமங்களையும் பற்றிக் கூறும் அவனது மெய்க்கீர்த்தி அமைந்துள்ளது. பிறபகுதியில் அவன் மேற்கூறிய கோயில நாள் பூசைகளுக்கு வேண்டிய செலவுகளுக்காக சில கிராமங்களைத் தானமாகக் கொடுத்த செய்தி காணப்படுகிறது. இது, அவனுடைய ஆட்சியின் இருபத்தெட்டாவது ஆண்டு மேடஞாயிற்று (சித்திரை மாதம்) பௌர்ணமியும் பஞ்சமியும் கூடிய திங்கட்கிழமை நடைபெற்றது.

எனவே, இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி.பி. 1450ஆம் ஆண்டு †† என்னலாம்.

---

* இச் சாசனம திருவாங்கூர்ப் புதைபொருளாய்ச்சித் தொகுதிகளின் முதற்றொகுதியைச் சேர்ந்ததாகும்.

† அரிகேசரி - பராக்கிரம பாண்டியன் கி. பி. 1422 முதல் 1463 வரை பாண்டிய நாட்டை ஆண்டான். இவன் சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் என்றும் அழைக்கப்படுவான்.

†† இச சாசனத்தில் 'ஸ்ரீ அரிகேசரி பராக்கிரம தேவர்க்கு யாண்டு இருபத்தெட்டாவதின் எதிராவது' என்றிருத்தலால், இது பராக்கிரம பாண்டியன் ஆட்சியின் இருபத்தொன்பதாவது ஆண்டு நடைபெற்றிருத்தல் வேண்டும். அது 1451ஆம் ஆண்டு ஆகும்.

# அரிகேசரி - பராக்கிரம பாண்டியன் மெய்க்கீர்த்தி.

சுபமஸ்து—
பூமிசை வனிதை மார்பினிற் பொலிய
நாமிசை கலைமகள் நலனுற விளங்கப்
புயவரை மீது சயமகள் புணரக்
கயலிணை யுலகின் கண்ணெனத் திகழச்
சந்திர குலத்து வந்தவ தரித்து
முந்தையோர் தவத்தின் முளையென் வளர்ந்து
தென்கலை வடகலை தெளிவுறத் தெரிந்து
மன்பதை புரக்க மணிமுடி புனைந்து
சங்கர சரண பங்கயஞ் சூடிச்
செய்கோ லோச்சி வெண்குடை நிழற்றி

---

சுபமஸ்து: கடிதம் முதலியவற்றின் தொடக்கத்திலும் இறுதியிலும் வாழ்த்துதலாக வரும் ஒரு வடமொழித்தொடர். 'மங்களமுண்டாகுக' என்பது இதன் பொருள்.

பூமிசைவனிதை - திருமகள்: நாமிசை கலைமகள் - சரசுவதி: நலனுற - நன்றாக. புயவரை - புயங்களாகிய மலை, சயமகள் புணர - வெற்றி பொருந்த, செல்வம், கல்வி, வெற்றி இவை ஒருங்கே யமைய என்றபடி.

கயலிணை - இணையான இரு கயல்கள். பாண்டிய மன்னரது கொடிகளில் இணையான இரு கயல்கள் வரையப்பெற்றிருக்கும்; அவை, உலகத்திற்கே இரு கண்களெனத் திகழும் என்பது.

சந்திரகுலம்: சேர சோழ பாண்டிய மன்னர்கள் முறையே அக்கினி குலத்தையும், சூரிய குலத்தையும், சந்திர குலத்தையும் சேர்ந்தவர்கள். முந்தையோர் - முன்னோர். முளை - தோன்றல்; தென்கலை - தமிழ் நூல் பயிற்சி; வடகலை - வடமொழி நூற் பயிற்சி.

மன்பதை - உலகத்து மக்கள். சங்கர சரண பங்கயஞ் சூடி - சிவபெருமானிடத்தில் பக்திகொண்டு என்றபடி; சங்கரன் - சிவன்; சரணம் - பாதம்; பங்கயம் - தாமரை.

செங்கோலோச்சி வெண்குடை நிழற்றி: செங்கோல், வெண்குடை இரண்டும் அரசனது ஆணையையும் அருளையையும் குறிக்கும். ஓச்சி - செலுத்தி; நிழற்றி - நடாத்தி.

வான வாரியு மன்னருள் வாரியும்
தான வாரியுந் தப்பா தளித்து
மறக்களை பறித்துநல் லறப்பயிர் விளைத்துச்
சிங்கையி லனுரையி லிராசையிற் செண்பையில்
விந்தையி லறந்தையில் முதலையில் வீரையில்
வைப்பாற் றெ......... மன்னரை வென்கண்
டெப்பாற் றிசையு மிசைவிளக் கேற்றிப்

---

வான்வாரி - மழை; அரசன் அறநெறி நிற்பின் மழை பெய்யு மென்பதுபற்றி, அரசனே வானவாரி அளித்தான் என்று கூறப் பட்டது. மன் அருள்வாரி - நிலையான கருணை; தானவாரி-கொடை; வாரி என்றது, இங்கு மிகுதியைக் குறித்து நிற்றது.

மறக்களை பறித்துநல் அறப்பயிர் விளைத்து: மறத்தைக் களை யாகவும், அறத்தைப் பயிராகவும் இவ்வடியில் உருவகித்துள்ளது. மறம் - தீமை; அறம் - தருமம்.

சிங்கையில்........... மிசை விளக்கேற்றி: சிங்கை, அனுரை, இராசை, செண்பை, விந்தை, அறந்தை, முதலை, வீரை, வைப்பாறு இவ்விடங்களில் பகை மன்னரை வென்று எல்லாத்திசையிலும் தன் புகழைப் பரப்பி என்றபடி.

சிங்கை - விக்கிரமசிங்கனூர்; நாங்குனேரியை யடுத்த சிங்கி குளம் என்பாரு முளர். அனுரை: இது எந்த இடமென்று இப் பொழுது விளங்கவில்லை.

இராசை - சங்கரநயினுர்கோயில்; இது சங்கரநயினுர்கோயில் தாலூகாவிற்குத் தலைநகர் செண்பை: இது சண்பகவனம் என்னும் திருக்குற்றாலத் தலமாகும். நாங்குனேரியை யடுத்த சண்பகராம புரம் என்பாரு முளர்.

விந்தை: விந்தனூர்; இது தென்காசியை யடுத்த செங்கோட் டைப் பகுதியிலுள்ளது பராக்கிரம பாண்டியன் சதுர்வேதிமங்க லம் என்றும் இதற்கு ஒரு பெயர் உண்டு. இப்பொழுது விந்தைக் கோட்டை என்று வழங்குகிறது. அறந்தை: இவ்வூர் எந்த இடத்தில் உள்ள தென்று இப்பொழுது விளங்கவில்லை.

முதலை - முதலைக்குளம் என்னும் ஊர். இது நாங்குனேரித் தாலூகாவி லுள்ளது. வீரை: வீரகேரளம்புதூர்: செங்கோட்டைப் பகுதியிலுள்ளது.

பதினெண்............கம் போற்றப்
பதினெண் பாஷைப் பார்த்திவ ரனைவரும்
திறையுஞ் சின்னமு முறைமுறை கொணர்ந்து
குறைபல விரந்து குரைகழ லிறைஞ்ச
அவரவர் வேண்டிய தவரவர்க் கருளி
அந்தண ரனேகர் செந்தழ லோம்ப
விந்தை முதலகர மைந்திடத் தியற்றிச்
சிவநெறி யோங்கச் சிவார்ச்சனை புரிந்து
மருதூ ரார்க்கு மண்டப மமைத்து

---

வைப்பாறு - வைப்பாறு ஓடும் பகுதி: இது தென்காசி வழியே ஓடும் ஒரு நதி. வென்கண்டு - வெற்றிகொண்டு: எப்பாற்றிசையும் - எல்லாத்திசையும்; இசை விளக்கேற்றி - புகழ் பரப்பி.

பதினெண் பாஷைப் பார்த்திப ரனைவரும் - பதினெண் மொழி வழங்கும் பதினெண் நாட்டு அரசர்களும். திறையும் சின்னமும் - திறைப்பணமும் அடையாளப் பூ முதலியனவும். முறை முறை - வரிசையாக.

குறைபல விரந்து - தமக்குண்டான பல குறைகளையும் கூறி. குரைகழ லிறைஞ்ச - பாதங்களில் விழுந்து வணங்க. வீரக்கழல் அணியும் பாதமாதலின், அரசன் பாதம் 'குரைகழல்' எனப்பட்டது.

சிங்கை, அனுரை, இராசை, செண்பை, விந்தை, அறந்தை, முதலை, வீரை முதலிய இடங்களில் பகைமன்னரை வென்றதும், பதினெண் மொழி வழங்கும் பதினெண் நாட்டு அரசர்களிடத்தும் திறை வாங்கியதும் பராக்கிரம பாண்டியன் வெற்றிகளாகும்.

செந்தழலோம்ப - யாகம் வளர்க்க; விந்தைமுதல் அகரம் ஐந்திடத் தியற்றி - விந்தனூர் முதலிய ஐந்து இடங்களில் அந்தணர் தங்கி வாழ்வதற்கு அகரங்கள் ஏற்படுத்தி என்பது. விந்தை - செங்கோட்டைப் பகுதியிலுள்ள விந்தனூர். விந்தை முதல் என்றது, விந்தனூர், அறந்தை, முதலை, வீரை, வைப்பாறு ஆகிய ஐந்திடங்களைக் குறிக்க என்க. அகரம் - அக்கிரகாரம், அந்தணர் தங்குமிடம்.

சிவநெறி - சைவம்; சிவார்ச்சனை - சிவ பூசை. அந்தணர்களைக் கொண்டு சைவ சமயம் வளரும்படிச் சிவபூசை முதலியன செய்து என்பது.

மருதூரார் - திருப்புடைமருதூரில் எழுந்தருளிய சிவபெருமான்: திருப்புடைமருதூர் அம்பாசமுத்திரம் தாலூகாவிலுள்ளது.

மூன்னொரு தூர்மூங் கிலுள்புக் கிருந்த
சிற்பரர் தம்மை திருவத்த சாமத்துப்
பொற்கலத் தமுது பொலிவித் தருளிச்
சன்பக வனத்துச் சங்கரர் தமக்கு
மண்டப மமைத்து மணிமுடி சூட்டி
விழாவணி நடாத்தி விரைப்புன லாடல்
வழாவகை நடாத்த நின்மன் னருள்தனால்
வற்ற வருவியும் வற்றி வற்கடம்
உற்றவிக் காலத் துறுபுனல் நல்கென
வேண்டியப் பொழுதே வேறிடத் தின்றிச்
சேண்டரு புனலிற் செழும்புன லாட்டி

---

அங்குள்ள கோயில் மண்டபத்தைப் பராக்கிரம பாண்டியன் கட்டி னன்.

மூன்னொரு........சிற்பரர்: மூன்னொரு காலத்தில் மூங்கிலடியில் எழுந்தருளிய சிவபெருமான் என்பது இது திருநெல்வேலித் தலத்துச் சிவபெருமானைக் குறிக்கும். தூர்மூங்கில் - மூங்கில் தூர், மூங்கிலடி; அத்த சாமம் - நள்ளிரவு; பராக்கிரம பாண்டியன், திருநெல்வேலியில் எழுந்தருளிய சிவபெருமானது அர்த்தயாம வழிபாட்டிற்கு நிபந்தங்கள் விட்டான் என்பது.

சன்பகவனத்துச் சங்கரர்: சண்பகவனமென்னும் திருக்குற்றாலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான். பராக்கிரம பாண்டியன் இங்குள்ள சிவன் கோயிலுக்கு மண்டப மமைத்ததுமன்றி, திருமஞ்சனமாட்டுதல் முதலிய திருவிழாச் சிறப்பும் செய்வித்தான். விழாவணி - திருவிழா. விரைப்புனலாடல் - திருமஞ்சனமாடுதல். வழாவகை - தவறாதபடி.

வற்ற அருவி - குறையாத நீர்வீழ்ச்சி. வற்கடம் உற்ற இக் காலத்து - பஞ்சம் உண்டான இந்த நாளில்; நின்மன் அருள் த(ன்)னால் உறுபுனல் நல்கென் - உனது நிலையான கருணையால் நல்ல நீர் பெற அருள்வாய் என்று வேண்ட என்றபடி. வேண்டியப் பொழுதே - உறுபுனல் நல்கென வேண்டிய அப்பொழுதே.

சேண்டரு புனலில் - சேணிடத்திருந்து கொண்டுவரப்பட்ட நீரில்; சேண் - சேய்மை, தூர இடம். 'நின்மன் னருள்தனால் வேறிடத்தின்றி' என்பதால், இங்கு மழையைக் குறிக்கும் போலும். செழும்புனலாட்டி - திருமஞ்சனம் செய்து.

1670|2

மின்கால் வேணி விசுவநா தர்க்குத்
தென்கா சிப்பெருங் கோயில் செய்து
நல்லா கமவழி நைமித் திகமுடன்
எல்லாப் பூசையு மெக்கோ யிலினும்
பொருள்முத லனைத்தும் புரையற நடாத்தித்
திருமலி செம்பொற் சிங்கா சனமிசை
உலக முழுது முடையா ருடனே
இலகு கருணை யிரண்டுரு வென்ன
அம்மையு மப்பனு மாயனைத் துயிர்க்கும்
இம்மைப் பயனும் மறுமைக் குறுதியும்
மேம்பட நல்கி வீற்றிருந் தருளிய
ஸ்ரீ அரி..................தேவரான
பராக்ரம பாண்ட்ய தேவர்க்கு யாண்டு—

---

மின்கால்வேணி - மின்னலைக் கக்குகின்ற சடை. விசுவநாதர்: இது தென்காசிப் பதியில் எழுந்தருளிய சிவபெருமான் பெயர். தென்காசிப் பெருங்கோயில் - தென்காசிப் பதியிலுள்ள பெரிய கோயில்.

ஆகமவழி - ஆகமநூல் கூறு முறை; நைமித்திகம் - விசேஷ காலங்களில் நிகழ்வது; பொருள் முதல் அனைத்தும் - எல்லாவற்றையும். புரையற - குற்றம் நீங்க.

திருமலி - திருமகள் பொலிந்த; உலக முழுதுமுடையார்: இது பராக்கிரம பாண்டியனது பட்டத்தரசியைக் குறிக்கும். இலகு கருணை யிரண்டுரு வென்ன - விளங்கும் கருணையே இரண்டு உரு வெடுத்தாற் போல; இது உலக முழுதுமுடையாருடன் பராக்கிரம பாண்டியன் வீற்றிருந்தமைக்கு உவமை.

அம்மையு மப்பனுமாய் - தாயும் தந்தையுமாக. இம்மைப் பயன் - புகழ்; மறுமைக்குறுதி - முத்திநெறி.

விந்தை முதல் ஐந்திடங்களில் அந்தணர்களைக் குடியேற்று வித்துச் சிவார்ச்சனை புரிவித்தது, மருதூரார்க்கு மண்டப மமைத்தது, மூங்கிலடியிலெழுந்தருளிய சிற்பரர்க்கு அர்த்தயாமத்து வழிபாட்டிற்குரிய நிபந்தமளித்தது, செண்பகவனத்துச் சங்கரர்க்கு மண்டப மமைத்துத் திருமஞ்சன மாட்டுதல் முதலிய திருவிழா நடத்துவித்தது, தென்காசிப் பெரிய கோயிலைக் கட்டி, பூசை முதலியன செய்வித்தல் முதலியவை பராக்கிரம பாண்டியன் செய்த திருப்பணிகளாக அவன் மெய்க்கீர்த்தியில் காணப்படுகின்றன.

## செய்தி

இருபத்தெட்டாவதின் எதிராவது.........ற்று இருபத் தொன்றாந் தியதியும் பூர்ணையும் வெள்ளிக்கிழமையும் பெற்ற சோதிநாள், தென்வாரிநாட்டு சித்ரநதி உத்தர தீரத்தில் தக்ஷிண காசியிலே உடையார் விஸ்வநாதனுக்கு அபிநவமாக உபாநாதி ஸ்தூபி பய்யந்தமும் திருப்பணி செய்து உடையார் விஸ்வநாதனையும் பிரதிஷ்டித்து அர்த்த மண்டபம், இடைநாழிகை,மஹாமண்டபம்,ஸோபாநம் இவையுந் திருப்பணி செய்து, திருப்பள்ளி அறை நாச்சியார் முதலாக உள்ள

---

யாண்டு இருபத்தெட்டாவதின் எதிராவது - இருபத்தொன்பதாவது ஆண்டு; தியதி - தேதி. பூர்ணை - பௌர்ணமி, பதினைந்தாவது திதி. சோதி நாள் - பதினைந்தாவது நாளான சுவாதி நாள்.

பராக்கிரம பாண்டியன் அவன் ஆட்சியின் இருபத்தொன்பதாவது ஆண்டு............ இருபத் தொன்றாந் தேதி பௌர்ணமியும் வெள்ளிக்கிழமையும் கூடிய சோதி நாள் தென்வாரி நாட்டுச் சித்திரா நதியின் வடகரையிலுள்ள தென்காசிப் பதியில் விசுவநாத சுவாமிக்குக் கோயில் கட்டி, சுவாமியின் திருவுருவத்தை அதில் பிரதிஷ்டித்ததுமன்றி, மண்டபங்களும் கட்டி விசேஷ பூசை, திருநாள் செலவுகளுக்கு பல ஊர்களைத் தானமும் செய்தான் என்பது.

தென்வாரி நாடு - இது பாண்டிய நாட்டின் தென்பகுதி போலும். சித்ரநதி உத்தர தீரத்தில்-சித்திரா நதியின் வட கரையில்; சித்திரா நதி தென்காசி வழியாக ஓடும் ஒரு சிற்றாறு. உடையார் விஸ்வநாதர் - இது தென்காசிப் பதியில் எழுந்தருளிய சிவன் பெயர். அபிநவமாக - புதிதாக

உபாநாதி ஸ்தூபி பய்யந்தமும் - அடி முதல் முடி வரையும். திருப்பணி செய்து-கோயில் கட்டிமுடித்து. விஸ்வநாதனையும் பிரதிஷ்டித்து - விசுவநாதசுவாமியின் படிவத்தையும் உள்ளே வைத்து; அர்த்த மண்டபம் - கருப்ப கிருகத்தைச் சார்ந்த மண்டபம்.

இடைநாழிகை - அர்த்த மண்டபத்திற்கும் மகா மண்டபத்திற்கும் இடைப்பட்ட இடம்; மகா மண்டபம் - அர்த்த மண்டபத்தை யடுத்துள்ள பெரிய மண்டபம். ஸோபாநம் - படிக்கட்டு, தாழ்வாரம் எனினுமாம். திருப்பள்ளி அறை - கோயில் மூர்த்தி இரவில் பள்ளிக்கு எழுந்தருளும் அறை. நாச்சியார் - பெண் தெய்வம்.

திருவுடம்புகளும் எழுந்தருளப் பண்ணுவித்து, ஆவரண கோபுராதிகளும் ஆரம்பித்து மேல் உடையார் விஸ்வநாதந் பூஜைக்கு அமுதுபடி சாத்துப்படி திருமாலைத் திருப்பரி வட்டந் திருவிளக்கு உட்பட்ட பல நித்ய நியமங்களுக் கும் பல விசேஷ பூஜை திருநாட் செலவுக்கும் முன்னாள் இரண்டாவதின் எதிர் இருபத்து மூன்றாவது முதலுக்கு நாம் தேவதானமாக விட்ட பற்றுகளில் தென்வாரிநாட்டுத் தென்காசிப் பெருநான் கெல்லையாவது — கீழ் எல்லை புலியூற் பற்றான காராண் குளத்தில் நீர்நக்கலுக்கும், பரிம்புக்கும், புலியூர் அகரப்பற்றில் புஞ்சைக்கும், நாராயண ஸ்ரீபாதங்கள் மடப்புறத்தில் மேல் எல்லைக்கு மேற்கும், தென் எல்லை

---

திருவுடம்புகள் - விக்கிரகங்கள். எழுந்தருளப் பண்ணுவித்து - எழுந்தருளும்படிச் செய்து. ஆவரணம் - சுற்றுமதில்; கோபுராதி - கோபுர முதலிய. ஆரம்பித்து - தொடங்கி; எனவே, இவன் கோபு ரம் கட்டிமுடிக்க வில்லை என்று தெரிகிறது. மேல் - அதன் பின்பு.

திருப்பரி வட்டம் - தெய்வத்துக்குச் சாத்தும் ஆடை; நித்திய நியமம் - தினசரி செய்ய வேண்டுவன; முன்னாள் - இருபத்தொன் பதாவது ஆண்டுக்கு முன்பு. இரண்டாவதின் எதிர் - மூன்றாவது; அதாவது இருபத்து ஆறாவது ஆண்டு என்றபடி. முதலுக்கு - இரு பத்தாறாவது ஆண்டு முதல் என்பது.

பற்று - பல கிராமங்களையுடைய நாட்டுப் பகுதி. தென்காசிப் பெருநான் கெல்லை - தென்காசிப் பற்றுக்கு நான்கு எல்லையாவது. புலியூர்: இது தென்காசித் தாலூகாவிலுள்ளது: இராச குல ராம நல்லூர் என்பது இதன் மற்றொரு பெயர்.

புலியூற் பற்றான காராண்.........நீர்நக்கலுக்கும் - புலியூர்ப் பற்றைச் சேர்ந்த காராண் குளத்து நீர் நக்கலுக்கும் என்றபடி. நீர்நக்கல் - ஏரியின் உள்வாய் நீர் தேங்கும் பகுதி; வாய்க்கால் எனி னுமாம். பரிம்பு - காராண் குளத்து நீர் நக்கலையடுத்த பரிம்பு. பரிம்பு - பாழ் நிலம்: இக்காலத்தில் 'பரம்புக்காடு' என்பர்.

புலியூர் அகரப்பற்று - புலியூர் அக்கிரகாரம் என்பது நாரா யண ஸ்ரீபாதங்கள்: இவர் ஒரு வைணவ அடியார் என்று தெரிகிறது. இவர் வாழ்ந்த மடம் 'நாராயண ஸ்ரீ பாதங்கள் மடம்' எனப்பட்டது. மடப்புறம் - மடத்திற்குத் தானமாக விட்ட நிலம்.

சித்ர நதிக்கு வடக்கு, மேல் எல்லை குன்றக்குடிப் பரிம்புக்குக் கிழக்கும், வ...... சென்னாய்ப் பொற்றைக்கும் குத்துக்கல்லுக்கும் தெற்கும் ஆக இன்னான் கெல்.........ட்ட பற்றம், இந்த நதிக்கு தக்ஷிண தீரத்தில் வாயுளான் குடிப்பற்றுக்குப் பெரு நான்கெல்லையாவது – கீழ் எல்லை புலியூர் அணைக்கும் திருச்சாலைக்குடிப் பற்றுக்கும் ஆழங்காலுக்கு மேற்கும், தென் எல்லை திருசாலைக்குடிப் பற்றுக்கும் பராக்ரம பாண்டிய சதுர்வேதிமங்கலத்து பட்டகள் அகரப் பற்றில் வட வெல்லைக்கும் உடையார் திருக்குற்றாலமுடைய நாயனார் பழந்தேவதானத்துக்கு வடக்கும், மேல் எல்கை வாயுளான் குடி அணைக்குக் கிழக்கும், வட எல்கை சித்ர நதிக்குத் தெற்

---

குன்றக்குடிப் பரிம்பு: இது தென்காசிப் பற்றுக்கு மேல் எல்கையாக அமைந்துள்ளது. மேலே, குன்றக்குடிப் பற்று என்று ஒரு நிலப்பகுதி கூறப்பட்டுள்ளது: அதனை யடுத்துள்ளது போலும் இக் குன்றக்குடிப் பரிம்பு.

தென்காசிப் பற்று - கிழக்கே புலியூர்ப் பற்றிலுள்ள காராண் குளம் நீர்நக்கல், அதனையடுத்த பரிம்பு, அங்குள்ள அகரப்பற்று நஞ்சை நிலம், நாராயண ஸ்ரீபாதங்கள் மடப்புறம் ஆகியவற்றையும், தெற்கே சித்திரா நதியையும், மேற்கே குன்றக்குடிப் பரிம்பையும், வடக்கே சென்னாய்ப் பொற்றை, குத்துக்கல் ஆகியவைகளையும் எல்கைகளாக உடையது.

இந்த நதிக்குத் தக்ஷிணதீரத்தில் - சித்திரா நதிக்குத் தென் கரையில். ஆழங்கால்: இது ஓர் ஊரின் பெயர்.

பராக்கிரம பாண்டிச் சதுர்வேதிமங்கலம்: இது செங்கோட்டையை யடுத்த விந்தனூருக்குரிய மற்றொரு பெயர். பட்டகள் அகரப்பற்று - பட்டர்கள் வாழும அக்கிரகாரம் போலும், உடையார் திருக்குற்றலமுடைய நாயனர் - சண்பகவனத்துச் சிற்பார், பழந்தேவதானம் - முன்புள்ள தேவதானம்.

வாயுளான் குடிப்பற்று - கிழக்கே புலியூர் அணை, திருச்சாலைக்குடிப்பற்று, ஆழங்கால் ஆகியவற்றையும், தெற்கே திருச்சாலைக் குடிப்பற்று, விந்தனூர், பட்டகள் அகரப்பற்று, குற்றாலம் சிவன் கோயில் தேவதானம் ஆகியவற்றையும், மேற்கே வாயுளான்குடி அணையையும், வடக்கே சித்திரா நதியையும் எல்கைகளாக உடையது.

கும் ஆக இன்னூன் கெல்கைக் குட்பட்ட பற்றும், குன்றக் குடிப் பற்றுக்குப் பெருநான் கெல்கையாவது - கீழ் எல்கை இடைமலைப் பரிம்புக்கு மேற்கும், தென் எல்கை சித்ர நதிக்கு வடக்கும், மேல் எல்கை செங்கோட்டை பிடாரியார் கோயிலுக்கும் இலத்தூற்குப் போகிற பெருவழிக்குக் கிழக்கு, வடஎல்லை கடமர் குளத்துக்குத் தெற்கு ஆக இன்னூன் கெல்லைக்குக்பட்ட பற்றில் உடையார் திருக்குற்றால முடைய நாயனூர் தேவதானமான நிலம் ஒன்பதுமா முந்திரிகையின் மூனறுமா முக்காணியும் நீக்கலாக உள்ள பறறும், பராக்கிரம பாண்டிய நல்லூர் பற்றுக்குப்பெரு நான்கெல்கை யாவது - கீழ் எல்கை இலுப்பைத் தொண்டிற பெருவழிக்கு மேற்கும், தென் எல்கை இக்குளததின் நீர்நக்கலுர்க்கு வடக்கும், மேல் எல்கை உடையார் திருக்குற்றால முடை...... ......ா பழந் தேவதானமான திருச்சாலைக்குடிப் பற்றுக்குக் கிழக்கும், வட எல்கை சித்ர.........தெற்கும் ஆக இன்னூன் கெல்கைக்குட்பட்ட பற்றில் இருங்கிண்டி ஸ்ரீபத்மநாபன் தான இறையிலி நில மிரண்டுமாவும் நீக்கலாக உள்ள பற்று,

---

இலத்தூர்: இது செங்கோட்டையை யடுத்ததோர் ஊர்.

மா - $\frac{1}{20}$ வேலி, 100 குழி நிலம்; முந்திரிகை - $\frac{1}{320}$; காணி - $\frac{1}{80}$; நிலம் ஒன்பதுமா முத்திரிகையின் மூன்றுமா முக்காணியும்-599$\frac{1}{4}$ குழி.

குன்றக்குடிப் பற்று: இது செங்கோட்டைப் பகுதியிலுள்ளது. கிழக்கே இடைமலைப் பரிம்பையும், தெற்கே சித்திரா நதியையும், மேற்கே செஙகோட்டைப் பிடாரியார் கோயிலுக்கும் இலாத்தூருக் குப போகிற பெருவழியையும், வடக்கே கடமர் குளத்தையும் எல்லைகளாக உடையது. இவ்வெல்லைக்குட்பட்ட நிலத்துள் ஒன்பதுமா முந்திரிகையின மூன்றுமா முக்காணி நிலம், திருக்குற்றாலம் சிவன் கோயில் தேவதானமாகும்.

இக்குளத்தின் - இலுப்பைத் தொண்டிக் குளம் போலும். திருச் சாலைக்குடிப் பற்று: இது திருக்குற்றாலம் சிவன் கோயில் தேவ தானம்: பராக்கிரமபாண்டியநல்லூர்ப் பற்றுக்கு மேற்கெல்லை யாகவும், வாயுளான்குடிப் பற்றுக்குக் கிழக்கெல்லையாகவும் தெற் கெல்லையாகவும் உள்ளது. இருங்கிண்டி - இது ஓர் ஊரின் பெயர்.

பராக்கிரமபாண்டிய நல்லூர்ப் பற்று: இது பராக்கிரம பாண்டி யன் பெயரால் பெற்ற பெயர்; கிழக்கே இலுப்பைத் தொண்டில்

நல்லூர் பற்றில் வள்ளை முட்டமும், இக்குளத்தில் நீர்பாயு நிலமாய் வடலூர் பற்றில் நின்றுங் கூட்டின நிலம் மூன்றுமா அரையும் ஆக இப்பற்றுக்குப் பெருநான் கெல்லையாவது — கீழ் எல்லை காடேற்றிப் பற்றுக்கு மேற்கும், தென் எல்லை வடவூர் பற்றில் செங்குளத்தில் நீர்பாயு நிலத்துக்கும் தஞ்சாவூர் பெருங்காலுக்கும் அனுபோக மழகியான் குளத்தில் நீர் பாயும் பற்றுக்கு வடக்கு, மேல் எல்லை இக்குளத்தில் நீர்க்கலுக்கும், தவணை பற்றுக்குங் கிழக்கு வட எல்லை தஞ்சாவூரில் நின்றும் தவணைக்குப் போகிற பெரு வழிக்குத் தெற்கும் ஆக இன்னான் கெல்லைக் குட்பட்ட பற்றும், வடவாரி நாட்டுப் பைம்பொழிற் பற்றில் நல்லாண் பிள்ளைப் பெற்றாருக்கும் விஸ்வநாதப் பேரேரிக்கும் பெரு நான் கெல்கையாவது — கீழ் எல்லை செங்கோட்டைப் பிடாரியார் கோயிலுக்கும் இவ்வூரில் நின்றும் இலத்தூற்குப்

---

பெருவழியையும, தெற்கே இலுப்பைத்தொண்டிக் குளத்து நீர்க்கலையும், மேற்கே திருக்குற்றால முடையார் தேவதானமான திருச்சாலைக்குடிப் பற்றையும, வடக்கே சித்திரா நதியையும் எல்லைகளாகவுடையது. இப்பற்றில் இரண்டுமா நிலம், இருங்கிண்டி ஸ்ரீ பத்மநாபன் கோயில் தேவதான மாகும்.

நல்லூர்ப்பற்றும், வடவூர்ப் பற்றும் சேர்ந்த நிலம்: இது கிழக்கே காடேற்றிப் பற்றையும், தெற்கே வடவூர்ப் பற்றில் செங்குளத்து நீர்பாயும் நிலம், தஞ்சாவூர்ப் பெருங்கால், அனுபோகமழகியான் குளத்து நீ பாயும் பற்று ஆகியவற்றையும, மேற்கே நல்லூர்ப் பற்றுக் குளத்தின் நீர்க்கல், தவணைப்பற்று ஆகியவற்லையும், வடக்கே தஞ்சாவூரினின்று தவணைப் பற்றுக்குப் போகிற பெருவழியையும் எல்லைகளாக வுடையது.

பைம்பொழில்: இது தென்காசித் தாலூகாவிலுள்ள ஓர் ஊர்: இவ்வூரையடுத்த பகுதி 'பைம்பொழில் பற்று' எனப்பட்டது. இப்பற்றின் ஒரு பகுதி - கிழக்கே செங்கோட்டைப் பிடாரியார் கோயிலுக்கும் இலத்தூருக்கும் போகிற பெருவழியையும், தெற்கே ஆற்றையும், மேற்கே பைம்பொழிலின்று நல்லூருக்குப் போகும் வழி, மூழங்கால் முட்டிப் பாறை ஆகியவற்றையும், வடக்கே தேனிடு பொற்றையையும் எல்லைகளாகவுடையது.

செங்கோட்டைப் பிடாரியார் கோயில் பெருவழி: இது குன்றக்குடிப் பற்றுக்கு மேல் எல்லையாகவும், பைம்பொழில் பற்றுக்குக் கீழ் எல்லையாகவும் உள்ளது.

போகிற பெருவழிக்கு மேற்கு, தென் எல்லை ஆற்றுக்கு வடக்கு, மேல் எல்லை பைம்பொழிலில் நின்றும் நல்லூர்க்குப் போகிற பெருவழிக்கு முழங்கால்முட்டிப் பாறைக்குங் கிழக்கு, வட எல்லை தேனிடு பொற்றைக்குத் தெற்கு ஆ.........ன் கெல்லைக் குட்பட்ட பற்றும், முப்பதாவது மேஷ ஞாயிற்று இருபத்தெ......தியதியும் பூர்வ பக்ஷத்து பஞ்சமியும் திங்கட்கிழமையும் பெற்ற புணர் பூசத்து நாள நாம் முன்பு விட்ட பற்றுக்கள் நீக்கலாக நாளது பூஜெச் சிலவுக்கு விட்ட தென்வாரி நாட்டு இராசகுல ராம நல்லூரான புலியூர் பற்றுச்கும், வீரபாண்டியநல்லூர்ப் பற்றுக்கும் பெருநான் கெல்லையாவது—புலியூர்ப் பற்றுக்குப் பெருநான் கெல்லைக் - கீழ் எல்லை திருவெண்காட்டு முதலியார் மடப்புறமான பாட்டக் குறிச்சிப் பற்றுக்கும் மேற்கு, தென் எல்லைச் சிற்றூற்றுக்கு வடக்கு, மேல் எல்லை பழந்தேவதானமான தென்காசிப் பற்றுக்குக்

---

முப்பதாவது - யாண்டு முப்பதாவது; மேஷ ஞாயிறு - சித்திரை மாதம்; பூர்வ பக்ஷம் - வளர்பிறைக் காலம். பஞ்சமி - ஐந்தாவது திதி. புனர்பூசத்து நாள் - ஏழாவது நட்சத்திரம்; பராக்கிரம பாண்டியன் ஆட்சியின் முப்பதாவது ஆண்டு மேஷ ஞாயிற்று ......தேதி, பூர்வபட்சத்துப் பஞ்சமியும் திங்கட்கிழமையும் கூடிய புனர்பூசத்து நாள் என்றபடி.

நாம் முன்பு விட்ட பற்றுக்கள் - தென்காசிப் பற்று, வாயுளான்குடிப் பற்று, குன்றக்குடிப் பற்று, நல்லூர்ப் பற்று, பைம்பொழில் பற்று என்பன. நாளது பூஜெச் செலவுக்கு - மேல் வரும் பூசைச் செலவுக்கு.

மடப்புறம் - மடத்திற்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலம்; பாட்டக் குறிச்சிப் பற்று: இது திருவெண்காட்டு முதலியார் மடத்துக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலம்; புலியூர்ப் பற்றுக்குக் கீழ் எல்லையாயுள்ளது. பழந்தேவதானமான தென்காசிப் பற்று: இது முன்னுள் பராக்கிரம பாண்டியனால் தென்காசிக் கோயிலுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலம்.

புலியூர்ப்பற்று: இதன் மற்றொரு பெயர் இராசகுல ராம நல்லூர் என்பது இது தென்வாரி நாட்டைச் சேர்ந்தது. கிழக்கே பாட்டக்குறிச்சிப் பற்றையும், தெற்கே சிற்றூற்றையும், மேற்கே தென்காசிப் பற்றையும், வடக்கே ஆயக்குடிப் பற்றையும் எல்லை

கிழக்கு,வட எல்லை ஆயக்குடி பற்றுக்குத் தெற்கு ஆக இன்னான் கெல்கைக் குட்பட்ட பற்றில் உடையார் திருக்குற்றாலமுடைய நயனார் தேவதானமும், உடையார் விக்ரமப் பாண்டீஸ்வரமுடைய நாயனார் தேவதானமும், நயினார் திருவிருந்த பெருமாள் திருவிடையாட்டமும், ஸ்ரீ க்ருஷ்ணர் திருவிடையாட்டமும், பராக்ரமபாண்டிய நல்லூரில் நயினார் திருவேங்கட நாதன் திருவிடையாட்டமும், முகந்தானத்து நாராயண ஸ்ரீ பாதங்கள் மடப்புறமும், அகரப் பற்றும் நீங்கலாக இன்னான் கெல்லைக் குட்பட்ட பற்றும், வீரபாண்டிய நலலூருக்குப் பெருநான் கெல்கை யாவது - கீழ் எல்லை தட்டான் குளத்துப் பரிம்புக்கு மேற்கு, தென் எல்லை திருச் சிறறம்பலத்துக்குக் காலான இராச குலரா.........
......காலுக்கும் நயினார் திருவிருந்த பெருமாள் திருவிடையாட்டமான ஆகவராம............க்கும வடக்கு மேல எல்லை திருவெண்காட்டு முதலியார் மடப்புறமான பாட்டக் குறிச்சிப் பற்றுக்குக் கிழக்கு வட எல்லை விந்தனூர்ப் பெருவழிக்குத் தெற்கு ஆக இன்னான் கெல்லைக் குடபட்ட பற்றும் ஆக இப்பற்றுக்களில் பெருநான் கெல்லைக்குட்

---

களாக வுடையது இதில, திருக்குற்றாலமுடைய நாயனார் தேவதானம், உடையார் விககிரமப் பாண்டீஸ்வர நாயனார் தேவதானம, நயினார் திருவிருந்தப் பெருமாள் திருவிடையாட்டம, ஸ்ரீ கிருஷ்ணன திரு விடையாட்டம், நயினார் திருவேங்கடநாதன திருவிடையாட்டம, முகநதானத்து நாராயண ஸ்ரீ பாதங்கள மடப்புறம், அகரப் பற்று ஆகியவையும அடங்கி இருந்தன.

தேவதானம் - சைவ, வைணவக் கோயில்களுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலம்: திருவிடையாட்டம் - தேவதான மானியம; இது வைணவ கோயில்களுககுக் கொடுக்கப்படுவது போலும். அகரப்பற்று - அந்தணர் வாழுமிடம்.

வீரபாண்டியநல்லூர்ப் பற்று: இது கிழக்கே தட்டான் குளத்துப் பரிம்பையும், தெற்கே திருச்சிற்றம்பலத்துக் கால், திருவிருந்தப் பெருமாள் திருவிடையாட்டம் ஆகியவற்றையும், மேற்கே பாட்டக் குறிச்சிப் பற்றையும், வடக்கே விந்தனூர்ப் பெருவழியையும் எல்லைகளாக வுடையது.

பட்ட பற்றும் ஆக இப்பற்றுகளில்ப் பெரு நான் கெல்கைக் குட்பட்ட நஞ்செய், புஞ்செய், மாவடை, மரவடை, பட்டடை, கொடித்தோட்டம், செக்கிறை மற்றுமுள்ள ஸமஸ்த ப்ராப்தி களும் முப்பதாவது பசான முதலுக்குத் தேவதானமாக விட்ட அளவுக்கு இம்மரியாதியிலே இவ்வோலை பிடிபடாகக் கொண்டு ஆசந்த்ர தாரவத் இவ்வாலயம் உள்ள அளவும் கையாண்டு கல்லிலுஞ் செம்பிலும் வெட்டிப் பூசையுந் தாழ் வற நடத்திப்போதவும் பார்க. இவை கிடாரத்தூருடை யான் எழுத்து உ துல்யம்.

---

நஞ்செய் - நெல் முதலியன விளையும் நல்ல நிலம்; புஞ்செய் - நஞ்செய் யல்லாத நிலம்; மாவடை - நிலத்திலடங்கிய விலங்குகள்; கிராமத்தில் கால் நடை அடையும் இடம் எனினுமாம். மரவடை - நிலத்திலடங்கிய மரங்கள்; மரங்களுக்குரிய வரி எனினுமாம்.

பட்டடை - இறைப்புப் பாசானத்தால் பயிரிடப்படும் நிலம்; குடிவாரம் எனினுமாம். கொடித் தோட்டம் - படர்கொடித் தோட்டம்; வெற்றிலைத் தோட்டம் என்பாருமுளர். செக்கிறை - செக்காட்டி எண்ணெய் எடுப்பதற் கேற்பட்ட வரி.

ஸமஸ்த ப்ராப்திகளும் - சகல அனுபவங்களும். முப்பதாவது பசான் முதலுக்கு - முப்பதாவது ஆண்டு பசான முதலாக. பசான்ம்: சித்திரை மாதத்தில் அறுவடையாகும் ஒரு வகை நெல்; எனவே, இங்கு சித்திரை மாதம் முதலாக என்றபடி.

இம்மரியாதியிலே - இந்த முறையில்; இவ்வோலை பிடிபாடாக - இந்தப் பத்திரம் ஆதாரமாக; பிடிபாடு - ஆதாரம். ஆசந்த்ர தார வம்: இது சாசனங்களில் வழங்கும் ஒரு தொடர்: சந்திரனும் நட்சத்திரங்களும் உள்ளவரை என்பது இதன் பொருள். இவ் வாலயம் - பராக்கிரம பாண்டியனால் கட்டப்பட்ட தென்காசிப் பெரிய கோயில்.

கையாண்டு - அனுபவித்துக் கொள்ளும்படி என்க. தாழ்வற தடையின்றி. நடத்திப் போதவும் பார்க-நடத்திவரும்படிக் கவனித் துக் கொள்ளவும் என்றபடி.

கிடாரத்தூருடையான்: இவன் அரிகேசரி தேவர் சாசனத்தை எழுதியவன்: இவனுக்குச் சொந்தவூர் கிடாரம் போலும். துல்யம் - சரி; கையெழுத்து எனினுமாம். அரசன் கொடுத்த சாசனமாயின் 'அரசன் கையொப்பம்' என்று பொருள்படும்.

# 19. பராக்கிரமபாண்டிய தேவர் சாசனம்*

## முகவுரை.

பராக்கிரம பாண்டிய தேவர் என்பது, குலசேகர பாண்டியனுக்குரிய மற்றொரு பெயர். இவன் செய்த தானம் பற்றிய சாசனம் 'பராக்கிரம பாண்டிய தேவர் சாசனம்' எனப்பட்டது. இது திருநெல்வேலிச் சில்லாவிலுள்ள தென்காசிக்குப் பக்கத்திலுள்ளதும், திருவாங்கூர் இராச்சியத்தைச் சேர்ந்ததுமான செங்கோட்டை என்னும் தலத்திலுள்ள சிவன் கோயில் நடுவிடத்துக் கருப்பகிருகத்தின் தெற்குச் சுவரில் காணப்படுகிறது.

இதில், பராக்கிரமபாண்டியன் என்னும் குலசேகரப் பாண்டியன்† சில நிலங்களைச் செங்கோட்டைச் சிவன் கோயிலுக்குத் தானமாகக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது. இது சக வருடம் 1467க்குச் சமமான விசுவாவசு ஆண்டு ஐப்பசி மாதம் அமரபட்சத்து ஏகாதசி கூடிய வெள்ளிக்கிழமையன்று நடைபெற்றது.

எனவே, இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி.பி 1545ஆம் ஆண்டு என்னலாம்.

## சாசனம்.

சுபமஸ்து. ஸ்வஸ்திஸ்ரீ புவநேக வீர சந்த்ரகுல ப்ரதீப கோ ஜடிலவர்ம்ம த்ரிபுவநச் சக்ரவர்த்தி கொநேரின்மைகொண்

---

* இச்சாசனம் திருவாங்கூர்ப் புதைபொருளாராய்ச்சித் தொகுதிகளில் முதற்றொகுதியைச் சேர்ந்ததாகும்.

† இவன் அபிராம பராக்கிரம பாண்டியனுடைய முதற் புதல்வன்: சடிலவர்மன், திரிபுவனச் சக்கரவர்த்தி, கோநேரின்மை கொண்டான் என்னும் சிறப்புப் பெயர்களை யுடையவன்; இவனுடைய கல்வெட்டுகள் கி.பி 1543 முதல் 1552 வரையில் உள்ளன என்று கூறுவர்.

புவநேக வீர - புவன ஏக வீர, உலகத்து ஒரே வீரனாய்; சந்த்ர குல ப்ரதீப - சந்திர குலத்தில் தோன்றிய விளக்கான; கோ ஜடில வர்ம்ம - கோமகனான சடைய வர்மன். ஜடிலம் - சடை: சோழ அரசர்கள் பரகேசரி, இராசகேசரி என்னும் பட்டப் பெயர்களைத் தமக்குள் மாறி மாறி வழங்கியது போல, பாண்டிய மன்னர்கள் சடையவர்மன், மாறவர்மன் என்னும் பட்டப்பெயர்களைத் தமக்குள் மாறி மாறி வைத்து வழங்கி வந்தனர்.

கோநேரின்மை கொண்டான்: இது சோழ மன்னரும் பாண்

டான் பெருமாள் அபிராம பராக்ரம பாண்ட்ய தேவர் நந்தநரான ஸ்ரீபெருமாள் குலசேகர தேவரான பராக்ரம பாண்ட்யதேவற்கு யாண்டு சகாப்தம் ஆசாரிமெ-ல் மூன்றுவது விஸ்வாவஸு வர்ஷம் அற்பசி மாஸம் முப்பதாந் தியதியும் அபரபக்ஷத்து ஏகாதசியும் சுக்ரவாரமும் வைத்ருதியோகமும் ஸிம்ஹகரணமும் பெற்ற உத்திரத்து நாள், தென்னாரி நாட்டு

---

டிய மன்னரும் தம் பெயர்களுக்குமுன் சிறப்பாகத் தரித்துக் கொள்ளும் ஒரு பட்டப்பெயர். 'தனக்கு ஒப்பான அரசனை இல்லாதவன்' என்பது இதன் பொருள்.

பெருமாள் அபிராம பராக்கிரமபாண்டிய தேவர்: இது குலசேகரப் பாண்டியனுடைய தந்தையின் பெயர். பெருமாள் என்பது, உடையார் என்பது போன்று; அரசர் பெயர்களுக்கு முன் சிறப்பாக வழங்கும் ஒரு சொல். நந்தநர் - மகனர்.

யாண்டு........மூன்றுவது: குலசேகரப் பாண்டியனது ஆட்சியின் மூன்றுவது ஆண்டு; அது சக வருடம் 1467 ஆம் ஆண்டு என்பது. இனி, சாலிவாகன சகாப்தம் 1467ல் மூன்றுவது தடவையாகச் செய்த தருமம் என்பாருமுளர். சகாப்தம் - சாலிவாகன சகாப்தம்: அது கி. பி. 78 முதல் தொடங்கும் ஒரு ஆண்டுமானம்.

விஸ்வாவஸு வர்ஷம் - விசுவாவசு ஆண்டு; இது அறுபது ஆண்டுகளில் முப்பத்தொன்பதாவது ஆண்டு. அபர பக்ஷம் - கிருஷ்ண பட்சம், தேய்பிறைக் காலம்.

ஏகாதசி - முதலாவ்து திதி: திதி என்பது - திதி, வாரம், நாள், யோகம், காரண மென்னும் பஞ்சாங்கங்களுள் ஒன்று. சுக்ரவாரம் - வெள்ளிக் கிழமை. வைத்ருதி யோகம் - வைருதி யோகம், இருபத்தேழு யோகங்களில் ஒன்று. ஸிம்ஹகரணம் - பதினொரு கரணங்களுள் ஒன்று. உத்திரத்து நாள் - இருபத்தேழு நாட்களுள் பன்னிரண்டாவது நாள், உத்தர நாள் என்பது.

இச் சாசனத்தில், சாசனம் தோன்றிய காலத்தைக் குறிக்குமிடத்து, முதலில் அரசனது ஆட்சியின் ஆண்டும், அதன்பின் அதற்குச் சரியான சகவருடமும், அதன்பின் தமிழ் ஆண்டுடன் மாதம், தேதி, பட்சம், திதி, வாரம், நாள், யோகம், கரண முதலியனவும் சொல்லியிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

தென்னாரி நாடு: இது பாண்டிய நாட்டுப் பிரிவுகளில் ஒன்று: தென்வாரி நாடு என்று இருத்தல் வேண்டும் போலும்.

செங்கோட்டையில் உடையார் குலசேகரமுடைய நயினாற்கு
தேவதானம் பாட்டமாக குடுத்த நிலம் அரைமாவுக்கு நாம்
சேர்த்துக் கொடுத்த நிலமாவது, மேற்படி நாட்டு மேற்படி
யூரில் மேற்படியார் அஞ்சாலியில் மேல்வாரம் தவிர்த்துக்
குடுத்த குளப்புரவு பதினொன்றாங் கண்ணாறு தடி ஆறு நிலம்
அரைக்காணி முந்திரிகை, பன்னிரண்டாங் கண்ணாறு தடி
எட்டு நிலம் அரைக்காணி முந்திரிகை, பதின்மூன்றாங் கண்
ணாறு தடி அஞ்சு நிலம் அரைக்காணி இதுவும் ஆக நிலம்
அரை மாவும் நாளது முதலுக்கு நாங் கொள்ளும முறை
பாடு எப்பேர்ப்பட்டதும் நம் வரியிலார் கணக்கிலும் தவிர்

---

உடையார் குலசேகரமுடைய நயினார்: இது செங்கோட்டைச் சிவன் கோயில் சுவாமியின் பெயர். தேவதானம் பாட்டமாக குடுத்த - கோயில் பாட்டமாகக் கொடுத்த; தேவதானம் வைபது, இங்கு கோயிலையும், அதன் அதிகாரிகளையும் குறிக்கும்; பாட்டம் - குத்தகை, ஒரு வகை வரி எனினுமாம்.

அரைமாவுக்கு - அரை மா நிலத்தோடு. மா - 100 குழி நிலம். நாம்: இங்கு குலசேகரப் பாண்டியனைக் குறிக்கும். மேற்படி...... மேற்படியார் - மேலே கூறிய தென்வாரி நாட்டு செங்கோட்டை உடையார் குலசேகர நயினார். அஞ்சாலி - வரி வகை: நிலவரு வாயில் ஐந்தில் நான்கு பங்கைக் குடிகள் தருவது எனினுமாம்.

மேல்வாரம் - விளைவிலிருந்து சொந்தக்காரருக்குக் கொடுத்தற்குரிய தானியம். தவிர்த்து - நீக்கி. குளப்புரவு - குளத்தின் நீர் பாய்ந்து சாகுபடியாகத்தகுந்த நிலம். கண்ணாறு - பாசன வாய்க்கால்; நன்செய்ப் பிரிவு எனினுமாம்.

பதினொன்றாங் கண்ணாறு தடி ஆறு - பதினோராவது கண்ணாற்று ஆறாவது வயல் என்றபடி. தடி - வயல். அரைக்காணி - $\frac{1}{160}$; முந்திரிகை $\frac{1}{320}$:

ஆக நிலம் அரைமாவும்: பதினொன்றாம் கண்ணாற்று ஆறாவது வயல் நிலத்தில் $\frac{3}{320}$ மாவும், பன்னிரண்டாம் கண்ணாற்று எட்டாவது வயல் நிலத்தில் $\frac{3}{320}$ மாவும், பதின்மூன்றாம் கண்ணாறு ஐந்தாவது வயல் நிலத்தில் $\frac{1}{160}$ மாவும் ஆக அரை மா($\frac{1}{40}$) நிலமும் என்றபடி.

நாளது முதலுக்கு - நாளது தேதி முதல்: அதாவது குலசேகர பாண்டிய தேவற்கு ஆண்டு மூன்றாவது முதல் என்றபடி. நாங் கொள்ளும் முறைபாடு - நாம் வாங்கும் வரி; முறைபாடு - அரசிறை.

த்து ஆசந்த்ர தாரவற் செம்பிலும் சிலெயிலும் வெட்டி கைப்பாண்டு கொள்ளவும். துல்யம். பார்க. இவை.............

## 20. வாலக்காமயர் சாசனம்*

### முகவுரை.

வாலக்காமயர் என்பது, முதல் விசய நகர மன்னர் வமிசத்தைச் சேர்ந்த இறுதி அரசனுட்சிக் குட்பட்ட ஒரு மண்டலத் தலைவன் பெயர். இவனுடைய மற்றொரு பெயர் அக்கலராசன் என்பது. இவன் மகாமண்டலேசுவரன் என்னும் பட்டப் பெயருடையவன்; சோழ மன்னருக்குள் பீமன்' என்று தன்னைக் கூறிக் கொண்டவன். இவன், திருவானைக்கா கோயிலுக்குச் செய்த தானம் பற்றிய சாசனம் 'வாலக்காமயர் சாசனம்' எனப்பட்டது. இது திருச்சிறாப்பள்ளி சில்லாவிலுள்ள திருவரங்கத்தையடுத்த திருவானைக்கா சம்புகேசுவரர் என்னும் சிவன் கோயில் இரண்டாவது பிராகாரத்தின் வடபுறச்சுவரில் காணப்படுகிறது.

இதில், மண்டலாதிபனான அக்கலராசன் என்னும் வாலக்காமயர்[1] வடகரை வெண்கோன்குடி என்னும் கிராமத்திலுள்ள ஒரு வேலி நிலத்தைத் திருவானைக்கா சிவன் கோயிலுக்குக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது. இது சக வருடம் 1403 க்குச் சரியான பிலவஆண்டு கும்பஞாயிற்று (மாசி மாதம்) பௌரணமியும் ஞாயிற்றுக் கிழமையும் கூடிய மகா மகத்து நாளன்று ஏற்பட்டது.

எனவே, இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி.பி. 1482ஆம் ஆண்டு[2] என்னலாம்.

---

ஆசந்த்ரதாரவரை - சந்திர நட்சத்திரங்கள் உள்ள அளவும். தாரவம் - தாரகை, நட்சத்திரம். செம்பிலும் சிலேயிலும் வெட்டி - செம்பிலும் கல்லிலும் வெட்டி; சிலை - கல். கைய்யாண்டு - அனுபவித்து. துல்யம் - இவை சரி; கையொப்பம் எனினுமாம்.

இச் சாசனம் திருவாங்கூர்ப் புதைபொருளாராய்ச்சித் தொகுதிகளில் மூதற்றொகுதியைச் சேர்ந்ததாகும்.

1 இவனுடைய இயற்பெயர் சோழநாராயணன் என்பது இவன் உறையூரை ஆதி யிருப்பிடமாக வுடையவன்.

2 சக வருடம் 1403 எனவே, இச் சாசனம் ஏற்பட்ட காலம் கி. பி. 1481 (1403+78) என்றிருத்தல் வேண்டும்.

## சாசனம்.

சுபமஸ்து. ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் ௲௪௱௩ இதன்மேல் செல்லாநின்ற பிலவ ஸம்வத்ஸரத்து கும்ப நாயற்று பூர்வ பக்ஷத்து பூறுணையும் ஆதித்த வாரமும் பெற்று மகத்துநாள் ஸிம்ம பிரஹஸ்பதி மஹா மக புண்ய காலத்திலே ஸ்ரீமந் மஹா மண்டலேச்வரந் சோழர் பீமந் சோழ நாராயணன் உரையூர் பூர்வாதீச்வரந் வாலக்காமயர் ஆந அக்கலராசர்,

---

சுபமஸ்து ஸ்வஸ்தி ஸ்ரீ: இது இச்சாசனத்தின் தொடக்கத்தில் மங்கலமாக வருந்தொடர். பராக்கிரம பாண்டிய தேவர் சாசனமும் (19) இத்தொடரையே மங்கலமாகக் கொண்டுள்ளமை காண்க.

சகாப்தம் ௲௪௱௩ - சாலிவாகன சகாப்தம் 1403. அதாவது கி. பி. 1481ஆம் ஆண்டு என்பது. இதன் மேல் செல்லாநின்ற - இதற்குச் சமமான.

பிலவ ஸம்வத்ஸரத்து............பெற்று மகத்து நாள் - பிலவ ஆண்டு மாசி மாதம் வளர்பிறைக்காலத்துப் பௌரணமியும் ஞாயிற்றுக் கிழமையும் கூடிய மக நட்சத்திரத்தில்; பிலவ - ஆண்டு அறுபதனுள் முப்பத்தைந்தாவது. ஸம்வத்ஸரம் - சம்வச்சரம், ஆண்டு. கும்ப நாயறு - மாசி மாதம், பதினோராவது மாதம், பூறுணை - பௌரணமி, வளர்பிறைக் காலத்துப் பதினைந்தாவது திதி. ஆதித்த வாரம் - வாரம் ஏழனுள் முதலாவது, ஞாயிற்றுக்கிழமை. மகத்து நாள் - நாள் இருபத்தேழனுள் பத்தாவது, நாள் - நட்சத்திரம.

ஸிம்ம பிரஹஸ்பதி ..........மகாமக புண்ய காலத்திலே - சிம்மராசியில் வியாழன் வந்து சேருகிற மகாமகம் என்னும் புனித நாளில் என்பது. இது பன்னிரு ஆண்டுகளுக்கு ஒரு முறை மாசி மாதம் பௌரணமி மக நட்சத்திரத்தில் உண்டாகுமாதலின் 'மகாமகம்' எனப்பட்டது போலும். இன்றும் கும்பகோணத்தில் இந்நாள் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது; அங்குள்ள மகாமகக் குளத்தில் இந்நாளில் கங்கை நீர் வந்து சேருகிறதென்று கருதி மக்கள் திரள்திரளாக வந்து அதில் நீராடுவர்.

ஸ்ரீமந் மஹா மண்டலேஸ்............ஆந அக்கல ராசர்: மகா மண்டலத் தலைவனும், சோழர்களுக்குப் பீமன் போன்றவனும், சோழ நாராயணன் என்னும் இயற்பெயரையுடையவனும், உறையூரை ஆதியிருப்பிடமாகக் கொண்டவனுமான ஸ்ரீமந் வாலக்காமயர் என்னும் அக்கலராசர் என்பது.

நாயனார் அழகிய திருவானைக்காவுடைய நாயனார் கோயில் ஆதி சண்டேச்வர தேவர் கன்மிகளுக்கு குடுத்த தன்ம சாதனப் பட்டயம். நாயனார் அழகிய திருவானைக் காவுடைய நாயனார் வடகரை வெண்கோன்குடியில் திருவெட்டை ஆக எழுந்தருளுகிற திருநாள் மண்டபச் சிறப்புக்கும், நாச்சி

---

ஸ்ரீமந் என்பது, சிறப்பைக் குறிக்க பெரியோர்களுடைய பெயர்களுக்குமுன் வைத்து வழங்கப்படும் ஒரு வடமொழித் தொடர் 'திருவாளர்' என்பது இதன் பொருள்.

**மஹாமண்டலம்** - பல மண்டலங்கள் சேர்ந்த மண்டலம். இங்கு, இது சோழமண்டலத்தைக் குறிப்பதாகத் தெரிகிறது. வாலக்காமயர் விசயநகர மன்னராட்சிக்குட்பட்டு, அவர்களுக்குப் பதிலாக இம்மண்டலத்திலிருந்து ஆட்சி புரிந்தான் போலும். அவன், தன்னைச் 'சோழர் மீமனை' என்று சொல்லிக் கொள்வதும், 'சோழ நாராயணன்' என்று பெயர் தரித்திருப்பதும், உறையூரை இருப்பிடமாகக் கொண்டிருப்பதும் இவ்வுண்மையைப் புலப்படுத்தும் சான்றுகளாகும். **ஈஸ்வரர்** - தலைவர். **உறையூர்**: இது முன்னாள் சோழ மன்னர்களுக்குத் தலைநகராயிருந்த உறையூர் என்னும் பதியாகும்.

**நாயனார் அழகிய திருவானைக்காவுடைய நாயனார்**: இது திருவானைக்கா கோயில் சிவபெருமான் பெயர்; அதாவது சம்புகேசுவரர் என்பது.

**ஆதிசண்டேச்வர தேவர் கன்மிகள்** - கோயில் காரியங்களைப் பார்க்கும் பூசாரிகள்: கோயிலில், கொடுப்பதும் வாங்குவதுமாகிய எல்லாம் சண்டேஸ்வரபதம் பெற்ற சண்டேஸ்வர நாயனார் வழியாகவேதான் நடைபெற வேண்டுமாதலின், இவர்கள் இப்பெயர் பெற்றனர் போலும்.

**தன்ம சாதனப் பட்டயம்**: தருமத்தைக் குறித்த சாசனத்தையுடைய பட்டயம் என்பது. பட்டயமெனவே, இது முதலில் பட்டயத்தில் எழுதப்பட்டதென்பது வெளிப்படை.

**வடகரை வெண்கோன் குடியில்** - காவிரி நதிக்கு வடகரையிலுள்ள வெண்கோன்குடி என்னும் ஊரில் என்றபடி. இது இப்போது 'வெங்கங்குடி' என்று அழைக்கப்படுகிறது; திருவானைக்காவிற்கு வடக்கே ஐந்து மைல் தூரத்திலிருக்கிறது.

**திருவேட்டையாக எழுந்தருளுகிற திருநாள்**: இது புரட்டாசி மாதம் விசயதசமியன்று நடைபெறும் ஒரு விழா. இந்நாளில் திருவானைக்காவுடைய நாயனார் திருவேட்டைக்கு எழுந்தருளுவார் என்பர்.

**மண்டபச் சிறப்புக்கும்** - கோயில் மண்டபத்தில் நடைபெறும் சிறப்புகளுக்கும் என்றபடி. **நாச்சியார் அகிலாண்ட நாயகி** - சோழ

யார் அகிலாண்ட நாயகியார்க்குக் காலசந்தியாக அமுது செய்தருளி தன்ம வெச்சமாக நடக்கிற ஒரு தளிகை அமுதுபடிக்கும், திருமார்கழிச் சிரப்பு அம்முது செய்யவும், திருநந்தவனம் பயிர் செய்கிற தோப்பு ஆள் இலக்கைக்குமாக நம்முடைய நாயகக் கட்டணமான வடகரை வெண்கொன்குடியில் செத்த இராஜவிபாடன் நிலம் வேலி. இந்த நிலம் வேலிக்கும் உண்டான கரம் பொன்முதல நெல்முதல் உண்டானது முன் எழுதின வகைப்படியிலே சந்திராதித்தவரையும் அநுபவித்துக் கொள்ளக் கடவராகவும். இந்த தன்மத்துக்கு அருதம் பண்ணினவன் உண்டானால் கங்கைக் கறையிலே கோவதையைக் கொன்ற பாவத்திலே போகக் கடவராகவும்.

---

நாட்டிலுள்ள திருவானைக்கா சிவன் கோயில் இறைவி பெயர் அகிலாண்ட நாயகி என்பது; இறைவன் பெயர் சம்புகேசுவரர். நாச்சியார் என்னும் சொல் பெண் தெய்வத்துக்குச் சிறப்பாக வழங்கும் ஒரு பெயர்.

**காலசந்தி** - ஒரு நாளின் ஆறு பாகங்களுள் இரண்டிரண்டு பாகங்கள் கூடும் சந்திக் காலங்களில் கோயில்களிலே செய்யும் பூசை முதலியன. **அமுது செய்தருளி** - திருவமுது படைத்து. **தன்ம வெச்சமாக நடக்கிற** - தருமஞ் செய்வதற்கென்று ஒதுக்கிக் கொடுக்கிற. தன்மம் - தருமம். எச்சம் - மிஞ்சியிருப்பது. தளிகை - ஓரளவு கொண்ட நைவேத்தியப் பிரசாதம். அமுதுபடி - அரிசி.

**திருமார்கழிச் சிரப்பு** - மார்கழி மாதத்தில் நடைபெறும் திருவிழாச் சிறப்பு என்றபடி. **தோப்பு ஆள்** - தோட்டக்காரன். **இலக்கை** - மாதச் சம்பளம்; ஆடை என்பாருமுளர். **நாயகக் கட்டணம்** - ஒரு அரசனால் ஒரு நாட்டுத் தலைவனுக்கு விடப்பட்ட நிலம்; இராஜ விபாடன் நிலம் அத்தகையது போலும்.

**செத்த** - சேர்ந்த, சேர்க்க: **இராஜவிபாடன் நிலம்** - இராஜவிபாடன் என்னும் பெயரையுடைய நிலம். அது ஒரு வேலி (2000 குழி) அளவினையுடையது. இராஜவிபாடன் என்பது, விஜய நகர மன்னர்களுக்குரிய பட்டப்பெயர் என்பர்.

**கரம்** - வருமானம். **பொன் முதல் நெல் முதல் உண்டானது** - பொன்னாவது நெல்லாவது என்றபடி; பொன் முதலியனவும் நெல் முதலியனவும் என்பாருமுளர். **அருதம்** - கெடுதல்.

**கங்கைக் கறை** - கங்கா நதி தீரம். **கோவதையைக் கொன்ற பாவம்** - பசு வதையாகிய கொலையைச் செய்த பாவம் என்பது.

# அரும் பெயர் அகர வரிசை

(எண் — பக்க எண்)


அ

அகரம் 135, 144
அகரப் பற்று 144
அகவை 18, 42
அகுதம் 152
அசுவமேதம் 34
அஞ்சாலி 148
அட்டமி 45
அட்டுவார் 8
அடுத்தமுறை கடவார் 11, 12
அடைக்காய் அமுது 100
அதவோடு தோட்டம் 122
அதிராசராச மண்டலம் 50, 59
அதிராசராச வளநாடு 62
அந்திரர் 34
அநாதேசம் போனார் 11
அநுரை 134
அப்பமுது 100
அபிடேக காலம் 121
அபிநவம் 138
அமண்பாக்கம் 45
அமரபக்ஷம் 45, 147
அமருண்றி மங்கலம் 106
அமாவாவிப் புறம் 91, 92
அமிதுபடி 131, 139, 152
அர்த்த மண்டபம் 138
அரிதிரன் 111
அருமொழி தேவ வளநாடு 61
அருமொழி தேவன் மரக்கால் 7
அருமொழிநங்கை மரக்கால் 100, 101
அருளாளப் பெருமான் 96, 102
அரைசங்குட்டம் 45
அவிரோதம் 127
அவனிமுழுதுடையான் 73
அவிபலி 63
அவனிநாராயணச் சதுர்வேதி மங்கலம் 144
அளத்தி 80
அளிங்கண பாக்கம் 111
அழிஞ்சில் களம்பட்டி 111
அற்சனபோகம் 35, 37, 63
அற்பசி மாஸம் 147
அறந்தை 134
அன்றூள் கோயில் 112
அனந்தபுரம் 127

ஆ

ஆகவமல்லன் 29, 43, 49, 55, 57
ஆசந்திர தாரவம் 145, 148
ஆசாரிய போகம் 23
ஆடவல்லான் என்னும் மரக்கால் 11, 24
ஆணத்தி 106
ஆதிசண்டேஸ்வரர் 151
ஆதித்தவாரம் 150
ஆதிநகர் 18
ஆதேசம் 85
ஆர்ய தேசம் 24
ஆரையன் 43
ஆவணக்களரி 75
ஆவரணம் 139
ஆவூர் கூற்றம் 7
ஆளிடுதல் 12
ஆறிலொன்று 34
ஆஸ்வலாயந சூத்ரம் 121

இ

இடங்கை நாயகர் 86, 87
இடபவாகன தேவர்
இடைதுறை நாடு 14
இடைநாழிகை 138
இந்திராதன் 18
இந்திரணாம் 15

இரட்டபாடி எழரையிலக்கம் 4, 10, 17, 49
இரட்ட மண்டலம் 42
இரணசூரன் 19
இரண விக்கிரமச் சதுர்வேதி மங்கலம் 113, 165
இராசகேசரி (மரக்கால்) 11, 87
இராச சூளாமணிச் சதுர்வேதி மங்கலம் 35, 45
இராசபரிச் சின்னம் (சந்தம்) 44
இராசராச பாண்டிகுல வளநாடு 62
இராசராச பாண்டிய நாடு 129
இராசவிபாடன் 152
இராசராசன் 51, 60, 53
இராவிதா கோத்ரம் 121
இராசேந்திர சோழ வளநாடு 91
இராசை 134
இராமகுடர் 29
இருகயன் தேவி 55
இருங்கிண்டி பத்பநாபன் தானம் 141
இலக்கை 152
இலங்கா சோகம் 22
இலங்கேசனாகிய விக்கிரம பாண்டியன் 31
இலங்கை 44
இலங்கையர்க் கிறைவன் 27, 44
இலங்கையர் கோமான் 30
இலாமுரிதேசம் 22
இளங்கிழவர் 111
இறை 59, 60, 93
இறைகாத்தாட்டு 36, 37
இறை திரவியம் 8
இறையிலி காராண்மை 122
இறையிலி தேவதானம் 59, 60, 63
இறையிலி நிலம் 131, 141
இறை விழுத்துகை 93
இறையிழிச்சி 8, 36, 37, 93

ஈ

ஈழ்த்தரசர் 15
ஈழத்தரசனாகிய சீவல்ல மதனராசன் 32
ஈழம் 31
ஈழமண்டலம் 4, 10, 15

உ

உகவை 59
உரால் 6
உடன்கூட்டத்து அதிகாரிகள் 51, 61
உடுக்கை வாசிப்போன் 11
உடும்போடியாமை தவழ் புற்று 51, 59
உடையார் 11, 24
உடையார் குலசேகரமுடைய நயினார் 148
உடையார் சர்வ சிவபண்டித சைவாச்சாரியர் 24
உடையார் திருக்குற்றாலமுடைய நாயனார் 140, 141, 144
உடையார் திருவானைக்காவுடைய எம்பெருமான் 85, 86
உடையார் விக்கிரமபாண்டீஸ்வரமுடைய நயினார் 144
உடையார் விசுவநாதர் 138, 139
உடையார் வீரராசேந்திர தேவர் 58
உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் 5, 6, 10, 11, 12
உடையார் ஸ்ரீ ராசாதிராஜ தேவர் 34
உடையார் ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவர் 23
உடையார் ஸ்ரீ ராஜேந்திர தேவர் 45, 50
உத்தமசிலிச் சருப்பேதி மங்கலம் 55
உத்தம சோழ வளநாடு 129
உத்தம மந்திரிகள் 120
உத்திரத்து நாள் 147
உத்திராடம் 20
உத்தொங்க தொங்க வளநாடு 74
உதகம் பண்ணுதல் 59
உபாநாதி ஸ்தூபி பரியந்தம் 138
உரோகிணி நாள் 45

உலகமுடையார் 137
உலகுமுடையான் 84, 90
உள்வரி 124
உன்னூர்ப் பண்டாரம் 11, 24

ஊ

ஊர்ச்சபை யோம் 8
ஊர்க் கரணத்தான் 47
ஊற்றுக்காட்டுக் கோட்டம் 111

எ

எட்டுக்கூர் 114
எயிற் கோட்டம் 96
எயில் நாடு 76

ஏ

ஏகாசித் திருமஞ்சனம் 97
ஏகாதசி 147
ஏலவை 59
ஏழிசை வல்லபி ஏழுலகுடையாள் 83

ஐ

ஐம்பூணி 106
ஐயனார் 33

ஒ

ஒருவேலி நிலம்
ஒட்ட விசயம் 18

ஓ

ஓதுவார் வட்டி
ஓம் நமச்சிவாயம் 110

க்

க்ருத ஹரோகணம் 98
கஂகை 99
கங்க மண்டலம் 71, 81
கங்கன் 27
கங்காதரன் 30
கங்கபாடி 3, 10, 54
கங்கை 20, 83
கடாரம் 21, 23
கடிகை 111
கடையீடு 123, 124
கண்ணனூரான் 7
கண்ணூறு 74, 92, 148
கண்டப்பய்யன் 30
கண்டஸ்புடிதம் 108
கணவதிநல்லூர் 50
கம்பிலிநகர் 33
கரபத்திரன் 44
கரம் 152
கருங்குளம் 130
கருங்குள வளநாடு 130
கருவூர் 60
கல்நாட்டி 127
கல்லதர் 70
கல்வித்திருத்தி 86
கல்லில் வெட்டியது 12, 24
கல்லிலும் செம்பிலும் வெட்டியது 93, 123, 145, 148
கலிங்கம் 3, 10, 95
கலிங்கர் மன் 44
கல்லை 82
கற்றுப்புல் பொகா முற்றூட்டு 51, 59
கறியமுது 99
கன்னகுச்சியர் 27, 31
கன்மிகள் 37, 151
கன்னி 71, 82
கன்னி பகவதியார் 129, 131
கன்னிப்போர் 126
காக்கைக் கொடி 57
காடி 106, 107
காடுபட்டி 106
காணம் 98, 112
காணி 141, 148
காணிக்கடன் 60
காந்தளூர்ச் சாலைக் கலமறுத்தல் 2, 10, 29, 126

காமக்கவ்வையன் 46
காமக்கோடி விண்ணகராழ்வார்
கார் 87
காராம்பிச்செட்டு 46, 92
காரை நாடு 113
காலசந்தி 152
காலியூர் கோட்டம் 6
காவிரிப் பாக்கம் 114
கிரமவித்தன் 46, 92
கிரய திரவியம் 8
குசக்கலம் 8, 100
குடமலை நாடு 3, 10, 73, 82
குண்டமய்யன் 43
குணிலபுர பரமேஸ்வரர் 116
கும்ப நாயிறு 91
கும்பம் 98
குமரியிடை 115, 118
குலோத்துங்க சோழ வளநாடு 90
குளப்புரவு 148
குற்றம் 59
குறுமுனி 120
குன்றக் குடிப்பற்று 14
குன்றக்கூற்றம் 74
குன்றத்தூர் நாடு 90
கூடல் சங்கமம் 55
கூபகம்
கெங்கைகொண்ட சோழபுரம் 23, 59
கெங்கையிடை 115, 118
கேத்தரயன் 56
கேரளன் 16
கேவுதன் 29
கொங்கணர் 33
கொட்டி மத்தளம் வாசிப்பான் 11
கொடிப்படை 56
கொந்தளவரசர் 67, 79
கொப்பம் 42, 49
கொள்ளிப்பாக்கை 15, 30
கோசலநாடு 19, 56
கோட்டாறு 73, 83
கோட்டூர் 124
கோப்பரகேசரி வர்மன் 45, 50, 96
கோயில் கணக்கு 103
கோயில் பண்டாரம்
கோயில் வாரியம்
கோராஜகேசரி வர்மன் 5, 10, 34, 58, 74, 84, 90
கோவிசய நந்தி விக்கிரமன் 105, 110
கோவிந்த சந்தன் 19
கோழி 40
கௌசலர் 33
கௌட தேசம் 24

சக்கரக்கோட்டம் 17, 66, 79
சகணை மாதவக் கிரமவித்தன் 46
சகர் யாண்டு 113
சகாப்தம் 147, 150
சங்கரசரணை பங்கயம் 133
சங்கிராம விசயோத் துங்க வர்மன் 21
சடில வர்மன் 146
சண்டேஸ்வரன் 85, 87
சண்பகவனத்துச் சங்கரர் 136
சத்திரிய சிகாமணி வளநாடு 51, 60, 61, 63
சத்தியவ்வை 44
சத்துரு பயங்கரன் (யானை) 44
சதயத்து நாள் 91
சதுரம் 74
சந்திராதித்தவரை 24, 37, 46, 91, 92, 93, 108, 110, 117, 152
சந்தேசப்பிரமாணம் 130, 131
சமரபீரு 30
சமஸ்த ப்ராப்திகள் 145
சயங்கொண்ட சோழ நல்லூர் 51, 61, 63
சயங்கொண்ட சோழ பரஸ்மாதிராசன் 46
சயங்கொண்ட சோழ மண்டலம் 5, 34, 45, 96
சயங்கொண்ட சோழ விழுப்பரையன் 63
சயங்கொண்ட சோழன் 43
சயசிங்கன் 17, 43

சளுக்கி (ஆவவமல்லன்) 42, 43
சளுக்கியர் மாளிகை 33
சாங்கப்பை 44
சாங்கமய்யன் 30
சாந்திமத் தீவு 16
சாந்துப்படி 131, 139
சாமந்தர் 54, 56
சாமுண்டராஜன் 55
சாவேறு 73, 83
சிங்கணம் 71, 81
சிங்களத்தரசன் 32
சிங்களர் 4, 10, 33
சிங்களன் 57
சிங்கை 134
சித்ரநதி 138, 140, 141
சிதாரி 107
சிந்துரர் 33
சிம்மகரணம் 147
சிம்ம பிரஹஸ்பதி மகாமகம் 150
சிலாலேகை 36, 46, 102, 105, 116
சிவப்ராமணர் 107
சிவமகாராசப் பெருமானடிகள் 116
சிவனிடத் துமை யொத்து 83
சிற்பார் 136
சிற்றாயம் 59
சிறுபழுவூர் சபை 74, 75, 76
சீவல்லவன் 58
சுக்ரவாரம் 147
சுசீந்திரம் 131
சுசீந்திர முடைய நாயனார் 122, 123, 124
சுந்தரபாண்டியன் 28
சுபமஸ்து 133, 146, 150
செக்கிறை 145
செங்காட்டுக் கோட்டம் 35
செங்கோட்டை 148
செங்கோட்டைப் பிடாரியார் கோயில் 141, 142
சென்னை 134
செம்பில் நாடு 124
செம்பியன் விழுப்பரையன் 24
செம்பிலும் கல்லிலும் வெட்டி 63
செயங்கொண்ட சோழபுரம்
செயசிங்க குலகால வளநாடு 85
சேரலன் 126
சேனாபதிகள் 46, 123
சையம்
சோதி நாள் 138
சோபாநம் 138
சோழ நாராயணன் 150
சோழ மண்டலம் 7, 101
சோழர் பீமன் 150
சோழன் திருமாளிகை
ஸ்நபந திரவியம் 98
ஸ்வம் 46

த்ரிபுவனபதி 84
த்ரைலோக்கிய முடையார் 120
த்விதியை 35, 91
தக்கணலாடம் 19
தசபன்மன் 43
தட்சிணகாசி 138
தடி 37, 148
தடிகைப்பாடி 3, 10
தண்ட நாயகர் 56
தண்டப்படுதல் 112, 117
தண்டபுத்தி 19
தண்டு 4, 10, 23, 30, 55
தண்ணீரமுது
தந்திரவாரி 71, 81
தமிழ் மண்டலம் 31
தமையனை முன் வந்தான் 53
தர்ம்மம் 118
தளிகை 152
தலைத்தக்கோலம் 22
தலைமாறு 11
தவ்வை 32
தளிரிருங்கை மாது 120
தன்ம கட்டளைத்துலை 114
தன்ம சாதனப்பட்டயம் 151
தன்ம பாலன் 19
தன்மம் 25, 64, 114, 152
தன்ம வெச்சம் 152
தன்மாசனம் 114
தனியூர் 6

தனு ஞாயிறு 35
தாரசாஞதன் 58
தாழித்திருப்பனங்காடு 51, 60
தானம் 23
திங்கட்கிழமை 143
தியாகம
தியாகவல்லி உலகுடையாள் 83
திரிபுவன சக்கரவர்த்திகள் 74, 84, 90, 96, 121, 146
திருக்கண்ணுமடை 99
திருக்கேட்டை நாள் 96, 100, 102
திருச்சாலைக் குடிப்பற்று 140, 141
திருச்சுண்ணம் 98
திருத்திச் செலவு
திருதீக்காலிப் பெருமானடிகள் 113, 117
திருநந்தவனம் 152
திருநந்தாவிளக்கு 97, 107, 114, 115
திருநாள் 86, 87, 128
திருநாள் செலவு 139
திருப்படி மாற்று 124
திருப்பணி 138
திருப்பதியம் 11, 12, 107
திருப்பரி வட்டம் 139
திருப்பள்ளி அறை நாச்சியார் 138
திருப்பள்ளித்தாமம் 107
திருமஞ்சனசாலை 59
திருமஞ்சனம் 86, 87, 97, 102
திருமந்திரவோலை 24, 51, 60, 123
திருமந்திரவோலை நாயகம் 51, 60
திருமந்திரி
திருமார்கழிச் சிரப்பு 182
திருமாலை 139
திருமுளை 97
திருமுளைப்பாலிகை 97
திருமுளைப் பீசும் 97
திருமெய்ப்பூச்சு 107
திருவத்த சாமம் 136
திருவத்தியூராழ்வார் 96
திருவமுது 38, 87, 107
திருவமுது படி 86, 87
திருவயோத்தி தேவர் நிலம் 37
திருவழுதி வளநாடு 124
திருவாஞ்சியம் 12
திருவானிலை மகாதேவர் 50, 60, 63
திருவாய்க்கேள்விப்படி 24
திருவாய்மொழிந் தருளினபடி 12, 24, 51, 60, 62
திருவாயுஸ் யார்த்தம் 122
திருவானைக்கா 84
திருவானைக் காவுடைய எம் பெருமான் 86, 87
திருவிடை யாட்டம் 144
திருவிழா 86, 128
திருவிளக்கு 139
திருவிளக்குடையார் 100
திருவுடம்புகள் 139
திருவெண்ணுவல் 84
திருவேட்டை 151
திருவோணத்தி நாள் 35
திருஞமத்தூக் காணி 50, 59, 60, 63
திறை 34, 69, 80
திறையும் சின்னமும் 135
தினகரன் 33
தீக்காலி வல்லமுடைய பரமேஸ்வரர் 106
தீக்காலி வல்லம் 106, 113, 117
தீவாந்தரம் 69, 80
துங்கப்பத்திரை 54, 70
துத்தன் 43
துப்பு 107
துல்யம் 145, 148
தூசி 56
தூணி 60, 99
தெந்திரியமரம் 36
தெலிங்கவீமங்குளம் 129
தென்கரையூர் 129
தென்கரை நாடு 7
தென்கலை வடகலை 133
தென்காசிப் பற்று 139
தென்காசிப் பெருங்கோயில் 137
தென்குமரி கன்னியார் 128
தென்கூற்றுப் புறத்தாநாடு 122
தென்மதுராபுரி 119, 125
தென்வாரி நாடு 138, 139, 143

தென்னவன் 15, 17, 58, 69, 80, 125, 128
தென்னாட்டரையர் 128
தென்னாட்டெல்லை காட்டி 73, 82
தென்னாரி நாடு 147
தேவதானம் 84, 85, 106, 129, 139, 140, 141, 143, 144, 145, 148.
தேவர் பண்டாரம்
தேவர் போகம் 111
தேவாசுரம் 119
தேவாரத்துச் சுற்றுக் கல்லூரி 23
தேவியர் 14, 15, 39, 44
தேஊர் நாடு 62
தைபூசத் திருநாள் 131
தைப்பூசம் 128
தொண்டைமான் 51, 63
தொன்றன் 58
தோப்பு ஆள் 152

நகம் 49
நயகாசி 46
நங்கிலி 70
நந்தனர் 147
நந்திவிக்கிரமன் 105, 110
நம்பிராட்டியார் 86, 87
நயினார் திருவிருந்தப்பெருமாள் 144
நவகர்மகதி 108
நன்னி நுளம்பன் 43
நாகலை 55
நாச்சியார் அகிலாண்ட நாயகியார் 152
நாஞ்சி நாடு 129, 131
நாடன் மஞ்சள் 98
நாமணைக் கோனை 18
நாயகக் கட்டணம் 152
நாயனார் அழகிய திருவானைக் காவுடைய நாயனார் 151
நாரணன் 33
நாரணன் ஸ்ரீபாதங்கள் மடப்புறம் 139
நாழி 97, 98
நான்மறையவர் 34
நிகரிலி சோழநாடு 62
நிசதம் 7, 8, 11, 12, 113, 117
நிமந்தம் 50, 87, 100, 102
நியாயத்தார் 12
நிவந்தம் 11, 108
நிறப்பணை 127
நீர் நக்கல் 122, 139, 141, 142
நீர் வார்த்துக் கொடுத்தோம் 131
நுளம்ப பாடி 3, 10
நுளம்பியாறு 91
நூறுகாசு 36
நேர்வாயிலுடையான் 51, 60
நெல்மலி நாடு 62
நெறிதொறும் நிலைகளிட்டருளி 73, 83

ப்

ப்ரமஸ்தானம் 35
ப்ரஸ்மஸ்தான மண்டபம் 45
பகட்டரைசு
பங்களர் 33
பசாநம் 87, 145
பஞ்சப்பள்ளி 18
பஞ்சமி 142
பஞ்சவர் ஐவர் 72, 82
பஞ்சரத்னம் 98
பஞ்சலோகம் 98
பட்டகள் அகரப்பற்று 140
பட்டடை 145
பண்ணை 21
பண்டாரம் 36, 101
பணிப்பணியால் 35, 47, 127
பதக்கு 87
பதினெண் பாஷை 135
பந்மாகேஹஸ்வர ரக்ஷை 51, 64, 76, 87
பரசுராமன் 16
பராக்கிரம பாண்டிய சதுர்வேதி மங்கலம் 140
பராக்கிரம பாண்டிய நல்லூர் பற்று 141

பரிகலம் 71, 81

பரிதாங்கம் 71, 81

பரிபவம் 42, 55

பல்லவன் 27

பலம 98

பலவற்கக் கறி 99

பலிசை 102

பலித்ரவியம் 97

பழந்தீவு 16

பள்ளிச்சந்தம் 131

பற்று 139, 141, 142, 143

(கட்டு) 100

பனையூர் நாடு 51, 60, 61, 63

பாக்கூர் 59

பாட்டம் 148

பாண்டிகுலாசனி வளநாடு 84, 85

பாண்டிமண்டலம் 54, 71, 81

பாண்டியன் இருமடிவென்கொண்ட சதுர்வேதிமங்கலம் 90

பாணி 71, 81

பாருசம் 131

பாலாசிரியன் 76

பாலிகை 97

பாவைதுறை வாய்க்கால் 37

பாவை விளக்கு 100

பிடாகை 45, 85, 111

பிடிபாடு 145

பிரசாதம் 123, 124

பிரம்மதேயம் 74, 75, 84

பீலம 53

பிலவ சம்வத்சரம் 150

பிள்ளைகொள்ளி வாய்க்கால் 85

பிள்ளையார் 121

பிற்றலைப் பிறைபோல் 69, 80

பிழம்பு 21

புட்பகப்பிடி 5, 7

புண்ணியாஹ தக்ஷிணை 97

புதன் கிழமை 35

புதுக்குடி 85

புதுக்குப்புறம் 4

புரவரித் திணைக்கள நாயகம் 123

புரவு 59

புரவுவரியார் 124

புலகேசி 43

புலம் 46

புலியூர் அகரப்பற்று 139

புலியூர் நாடு 62

புலியூர் பற்று 139

புழுகுநெய் 99

புறத்தாய நாடு 128, 129

புனர்பூசத்து நாள் 142

பூசன்குடி 122, 130

பூசுரர் 19

பூண்டியுடையான் 62

பூமகள் (கன்னி பகவதியார்) 128

பூர்ணை 138, 150

பூர்வபக்ஷம் 35, 91, 143, 150

பெண்டிர் பண்டாரம் 20, 49

பெருந்திருவமுது 97, 99, 102

பெருமான் 122, 123

பெருமான் அபிராம பராக்கிரம பாண்டியதேவர் 147

பெருவழி 86, 141, 142, 143

பேராற்றங்கரை 49

பொங்கொளியாரமும் திருப் புயத் தலங்கலும் போல 73, 83

பொச்சைவெஞ்சுரம் 72, 82

பொத்தப்பி வேந்தன் 58

பொதியில் 72, 82

பொந்நி 68, 79

பொந்நேமி 66, 79

பொலிசை 36, 102

பொலியூட்டு 117

பொற்கோதை மூவேந்தி 56


## ம


மகத்துநாள் 150

மகரதோரணம் 57

மகாசபை 35, 45, 46, 90, 93

மகாமகம் 152

மகாமண்டலம் 138

மகாமண்டலேஸ்வரர் 150

மகிபாலன் 19

மஞ்சாடி 60, 99

மடப்புறம் 143, 144

மண்டபச் சிறப்பு 151
மண்டலிய சோழையன் 43
மண்ணிக்கால் 45
மண்ணிநாடு 101
மண்ணைக்கடக்கம் 15
மணலூர் 70
மணிப்புதவம் 21
மணிமங்கலம் 35, 90
மணிமங்கலமுடையான் 93
மணியம்பலம் 127
மத்தியதேசம் 24
மத்தியஸ்தன் 76, 92, 93
மதிமங்கலம் 62
மதிருதனன் 33
மதுரை மண்டலம் 18
மதுவணை 56
மரவடை 145
மருதூரார் 135
மலைக்கூற்றம் 124
மலைநாடு 119
மலையூர் 21, 23
மறைபேர்த்துக் கல் நாட்டி 127
மறை 114, [illegible]
மன்றுபாடு [illegible]
மன்றுடி [illegible]
மனு 58, 68, 80
மா 19, 30, 74, 75, 99
மாகணூர் நாடு 35, 45
மாசுணிதேசம் 18
மாத்திரைக்கரிசி 99
மாதண்டநாயகன் 55
மாதர் 111
மாதமர்லிங்கம் 22
மாதவக்கிரமவித்தன் 114
மாநக்கவாரம் 22
மாப்பப்பாளம் 22
மாபாரதம் 119
மாயிருடிங்கம் 22
மாராயன் 56
மாவடை 145
மாவலிவாணராயர் 106, 111, 113
மாறுபரணன் 28, 44
மின்றூடு 129
மீசெங்கிளி நாடு 85
மீகவர் 33, 90
மீயாறு நாடு 106, 113
முக்கோக்கிழானடிகள் 96
முகவெட்டிநாயகம் 124
முடிகொண்ட சோழன் திருமாளிகை 23
முத்தின் சிலாபம 72, 82
முதலி 56, 57
முதலை 134
முந்திரிகை 141, 148
முயங்கி 17
முரப்புநாடு 123
முல்லையூர் 28
முறைபாடு 148
முன்னுடையாரும் பழம்பேரும் நீக்கி 123
மூலபத்திர சாதி 44
மூலப்ரகிருத்தியம் 84, 87
மூவேந்த வேளான் 123, 124
மெசடமயம் 51
மேடஞாயிறு 143
மேருவில் புலி விளையாட 69, 80
மேல் வாரம் 148
மேலவிம்பங்கம் 22
மேனோக்கின மரமும் கீணோக்கின கிணறும் 46
மையச் சையம் 72
மொட்டையன் 43

வ்

வங்கணர் 33
வடகடல் தென்கடல் படர்வது போல 71, 82
வடகரை வெண்கோன்குடி 151, 152
வடசிகரக் கோயில் 110
வடவரையில் கயல்பொறித்து 120
வடவாரி நாடு
வடிவலம்பநின்று 125
வடுகவழிபன்னீராயிரம் 110
வண்டுவராபதி எம்பெருமான் கோயில் 91
வரி 36, 37, 74, 75, 92

வாசரர் 72, 82
வயிராகரம் 67
வராகவெங்கொடி 44
வரியிலிட 60, 61, 62
வரியிலார் 62, 148
வருஉதினித் தலைவர் 73, 83
வல்லவர் 33
வலஞ்செய்து கொடுத்து 111
வழுதியர்கோன் 125
வளம்ப குடி 85
வளவன் 42
வளைப்பர்துரு 22
வற்கடம் 136
வன்னிபெடு 113, 115
வன்னியரேயன் 43
வனவாசி 14
வாணபுரம் 110, 112
வாணமகாதேவியார் 117
வாணராயர் 106
வாணவித்யாதர வாணராயர் 116
வாயுளான் குடிப்பற்று 140
வாலக்காமயர் 150
வாழைப்பழம் 99
வானவர்கோ ஞாம் 120
வானவன் 27
வானவன் பல்லவ தரையன் 51, 60
வானவன் மூவேந்த வேளான் 63
விக்கலன் 54, 56, 70
விக்கிரமபாகு 30
விக்கிரம வீரர் 17
விக்கிரமாதித்த வாணராயன் 106
விச்சாதிரத் தோரணம் 21
விசயாதித்தன் 30
விசயாபிசேகம் 44, 50, 90, 96
விசயராஜன் திருவளநாடு 62
விசாபுரி 130
விசுவநாதர் 137
விசுவநாதர் பேரேரி 142
விசுவலோகம் 34
விசுவாவசு வர்ஷம் 147
விசையமணி மகுடம் 59
விஜைய ஸ்தம்பம் 72, 87
விடையிலதிகாரிகள் 62, 64
விடேல் விடுகு விக்கிரமாதித்ய சதுர்வேதி மங்கலம் 106
விந்தை 134, 135
வியாழக்கிழமை 45
விருதராச பயங்கர வளநாடு 101
விருதராசபயங்கர வாணகோவரையன் 74
விருதர் விக்கி 30
வில்லவர் 27, 29, 33, 90
வில்லவராயன் 85, 86, 87
விலையாவணம் செய்து 75
விலையோலை 75
விளத்தூர் 106; வீரகேசரி 58
வீரகேரளன 28
வீரசலாமேகன் 32, 44
வீரசிம்மாசனம் 73, 83, 85, 120
வீரசோழ விண்ணகராழ்வார் கோயில் 76
வீரபாண்டியநல்லூர்பற்று 143, 144
வீரபாண்டிய மூவேந்த வேளான் 123, 124
வீரை 134
வெங்கால நாடு 50, 59
வெண்ணைக்குடி நாடு 123
வெள்ளிக்கிழமை 91, 138
வெள்ளான்வகை 59
வேங்கை நாடு 3, 10, 55
வேணாட்டரசர் 28; வேலி 22
வேள்குலச் சளுக்கியர் 33
வேளகுலத்தரசர் 80
வைப்பாறு 134

ஸ்ரீ

ஸ்ரீ காமகோடி விண்ணகராழ்வார் 35, 45
ஸ்ரீ காரியம் 91
ஸ்ரீ கோயில் வாரியம் 102
ஸ்ரீ பலி கொட்டுவார் 107
ஸ்ரீ பாதம் 64
ஸ்ரீ முகம் 123, 124
ஸ்ரீ விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலம் 6
ஸ்ரீ விமானம் 116